

அருள்மிகு அபிராமி அம்மன்—திருக்கடையூர். 'இதயம் பேசுகிறது' இதழுக்காக ஓவிய மேதை சில்பி பிரத்யேகமாக வரைந்தது.

# தேவி தரிசனம்

## அகிலம் ஆண்ட அருள் நாயகி

**(1)**

'ஆனந்தவிகடனி'ல் பக்தி மணம் கமழ, பல புகழ் பெற்ற தெய்வத் தலங்களைப்பற்றி எழுதியிருக்கும் இக்கட்டுரையாளர், 'தேவி தரிசனம்' என்ற பெயரில், தொடர்ந்து இதயம் பேசுகிறது இதழில் தமிழகத்தின் முக்கிய 'சக்தி' திருத்தலங்களைப் பற்றி எழுதுகிறார். அத்துடன் தெய்வத் துக்கே தன்னை அர்ப்பணித்துள்ள ஓவியர் 'சில்பி' அவர்களின் தெய்வச் சித்திரங்களும் தொடர்ந்து இடம் பெறும்.

அட்டசித்தியும், நல் அன்பர்க்கருள்
விருதுகட்டிய பொன் அன்னமே,
அண்ட கோடி புகழ் காவை வாழும்
அகிலாண்ட நாயகியென் அம்மையே!

—தாயுமானவர்.

என்ன நடக்கிறது அங்கே?...

மாந்தர் பாவம்தான் கனத்ததா? மாரிதான் மாவெறி கொண்டதா? ஊழிப் பெரும் புயல் ஒருருப் பெற்றதா? பூமாதேவிதான் தன் மேனி குளிர வெள்ள ஸ்நானம் வேண்டினளா? இல்லை, கூற்றுவன் தான் கொடுஞ் சினம் கொண்டானா?

பொன்னி வள நாட்டில் ஏனிந்தப் புயல், பெரு வெள்ளம்! அரனும் அரங் கனும் அமர்ந்த திருநாட்டில் அழிவும் அலங்கோலமும் ஏன்?

அதோ அங்கே ஒரு சம்பவம்...

காலதேவன் பேய் வெறி கொண்டு சிரித்துக் கொண்டிருக்கிறான். காவிரிக் கரையெங்கும் உடைப்பெடுக்கிறது. பித்தம் கொண்டவளைப் போல், பொன்னித்தாய் அருகிருக்கும் திருச்சிப் பெரு நகருக்குள் பாய்கிறாள்.

இதுவரை விதி விரட்டித்தான் மனிதர்கள் ஆடி ஓடி யிருக்கிறார்கள். அன்று வீதி வீதியாக, வெள்ளம் விரட்ட மனிதர்கள் ஓடுகிறார்கள்.

'வேடசந்தூர் கிராமமே அழிந்து விட்டதாம்!' 'நாகப்பட்டினத்தைப் புயல் கொள்கிறது' 'திண்டுக்கல் மூழ்குகிறது' என்ற செய்திகள் வானொலியில் பறந்து கொண்டிருந்த நேரம்.

திருச்சி ஆண்டார் தெரு-முதலியார் ஸ்டோர் வைத்தியநாத அய்யருக்குக் குமாரர்கள் இருவர். வேதராமன். நடராஜன்.

வேதராமன் இருபத்தொன்பது வயது இளைஞர். இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில்

**அன்னை உருவில் சிவபூஜை.**



**பொன். பாஸ்கரமார்த்தாண்டன்**

ஃபீல்ட் ஆபீசர். அவருடைய தம்பி நடராஜன், கானரா பாங்கில் வேலை பார்ப்பவர்.

அவர்களிருவரும் அன்று மாலை நான்கு மணி அளவில் வெள்ளத்தை நேரில் பார்க்க வீட்டை விட்டுப் புறப்பட்டு, சிந்தாமணி அருகிலுள்ள அண்ணாசிலை பக்கம் வருகிறார்கள். வெள்ளத்தைப் பார்க்க அவர்கள் புறப்படும்போது, நகர மக்களைப் பார்க்க வெள்ளமே கரையை உடைத்துக்கொண்டு புறப் பட்டிருக்கும் செய்தி பாவம், அவர் களுக்குத் தெரியாது.

'ஏதோ மழை.... வெள்ளம்... எட்ட நின்று வேடிக்கை பார்க்கத்தக்க வெள்ளம்' என்ற மிதப்பான எண்ணம் தான் அவர்களுக்கு. காலனும் கூடவே வந்து வெள்ளத்தில் வேடிக்கை நடத்த மறைவாகக் காத்திருக்கிறான் என்பதை எதிர்பார்க்கவில்லை.

அவர்கள் வரும்போது கால் கரண்டை அளவு தான் தண்ணீர் ஓடிக் கொண்டிருந் தது. சின்னையாப் பிள்ளை சத்திரத்திற் குச் சென்று திரும்பிப் பார்க்கிறார்கள். அதற்குள் வெள்ளம் பொங்கி விட்டது. நடந்து வந்த பாதையில் ஒரு மணி நேரத்துக்குள் நாலைந்து அடி உயரத் திற்கு வெள்ளம்.

இருவரும் கதி கலங்கிப் போய் அவ சரம் அவசரமாக ஆண்டார் தெரு விலுள்ள வீட்டை நோக்கித் திரும்ப முயலுகிறார்கள். ஆனால் வெள்ளம் காலை இழுக்கிறது.

இருவரில் இளையவர் நடராஜன் ஒருவருக்கு மட்டும்தான் நீச்சல் தெரியும். மூத்தவர் வேத ராமனுக்கு நீந்தத் தெரியாது. சீறிவந்த வெள்ளத் துக்கோ இரக்கம் என்பது என்னவென்று தெரியாது! ஆவேசமாக அவர்கள் இருவரையும் அடித்துப் புரட்டுகிறது.

நீந்தத் தெரிந்த நடராஜன் சமாளித் துக்கொண்டு நகருகிறார். ஆனால் வேத ராமன் வெள்ளத்தோடு புரண்டு உருண்டு போகிறார். தன் கண்ணெதிரே அண்ணன் வெள்ளத்தோடு போவதைப் பார்த்தும் வெறிகொண்ட வெள் ளத்தை எதிர்நின்று சமாளித்து அண்ணனைக் காப்பாற்ற வகை தெரியா மல் கண்ணீர் வெள்ளத்தோடு அந்தக் காவிரி வெள்ளத்தைத் தாண்டி, சற்று மேடான இடத்தில் காலூன்றி நின்று பார்க்கிறார் நடராஜன். அருமை அண்ணன், குடும்பத்தின் மூத்த மகன் தண்ணீரில் ஒரு புள்ளியாய் கண் மறை வானதும் உள்ளம் வெதும்பித் துடித்துக்



கொண்டே வீட்டை நோக்கிச் செல்கிறார் நடராஜன்.

வெள்ளத்தோடு சென்ற வேதராமனுக்கு மூச்சுத் திணறுகிறது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு அருகில் தென்பட்ட ஒருகம்பிக் கதவைப் பற்றிப் பிடிக்கிறார். அவரோடு கூடவே ஓர் ஆட்டுக்குட்டியும் தடுமாறி வருகிறது.

நீந்தத் தெரியாமல் வெள்ளத்தில் தத்தளிக்கும் அந்த நிலையிலும் வேதராமனுக்கு அந்த ஆட்டுக்குட்டி பேரில் கனிவு பிறக்கிறது. அந்த ஆட்டுக்குட்டியை அணைத்துக் கொண்டே கதவைப் பற்றிக் கொண்டிருக்கிறார்.

வெள்ளத்தின் சீற்றம் இன்னும் உக்கிரமாகிறது. வேதராமனின் கைப்பிடி நழுவுகிறது. 'காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்' என்று அவர் போட்ட சத்தம் கோவென்ற புயலின் இரைச்சலில் கனம் கரைந்து காற்றாகிவிட்டது.

ஆட்டுக்குட்டியைக் குறுக்குக் கம்பி ஒன்றில் வைத்துவிட்டுக் கூரையை எம்பிப் பிடித்து ஏறுகிறார். கூரை ஆடுகிறது. ஒரு மணி நேரத்துக்கு மேல் அவருக்கு அபயம்தரக் கூரைக்கு வலிமை இல்லை. வெள்ளம் அதைக் கவிழ்த்துப் புரட்டுகிறது.

பற்றிக்கொள்ள எதுவுமின்றி, வாழ்க்கையைப் பற்றிய பற்றுகள் எல்லாம் மனத்தில் வெறுமையாகிவிட, வெள்ளத்தில் மூழ்குகிறார் வேதராமன். நீந்தத் தெரியவில்லை. நிலையும் புரியவில்லை. எங்கும் ஜலக் கோளம். திக்கு திசை எல்லாம் வெள்ளத்தில் இருண்டு விட்டன.

மனசில் இருந்த ஒரே ஓர் கடைசி ஆசையும் அழியத் தொடங்குகிறது. பி.எஸ்.சி. படித்துவிட்டு, வீட்டோடு கல்யாணத்துக்குக் காத்திருக்கும் தன் அருமைத் தங்கை, சந்திரா... அவள் ஞாபகம்... விரைவில் அவளுக்குக் கல்யாணம் முடித்துப் பார்க்க வேண்டும் என்று துடித்த அந்த மூத்தஅண்ணனின் பாசஇதயம் துடித்துத் துவளுகிறது. 'ஐயோ என் தங்கையின் கல்யாணத்தை முடித்துப் பார்க்காமல் போகிறேனே வயதான அப்பாஅம்மா என்ன செய்வார்களோ!' என்று

திருவானைக்காவல், ஜம்புகேஸ்வரர் அகிலாண்டேஸ்வரி ஆலயத் தோற்றம்.



மனம் பேதலித்துப் புலம்புகிறது.

அச்சமயம் மணி இரவு 12க்கு மேலாகி விட்டது. வீட்டில் வேதராமனைக் காணுமல் அப்பா, அம்மா, ஜெயலட்சுமி அம்மாள் தங்கையர் எல்லாரும் பரிதவித்துக் கொண்டிருக்கிருர்கள். அது வரை அண்ணன் வெள்ளத்தோடு போன செய்தியைச்சொல்லத்துணிவற்று நெஞ்சுக்குள் அடக்கிக் குமுறிக் கொண்டிருந்த தம்பி நடராஜன் அப்போது தான் தயக்கத்துடன் சொல்கிருர்.

அடுத்த விநாடி வீடே அடித்துக் கொண்டு புலம்ப ஆரம்பித்துவிட்டது.

வேதராமன் வெள்ள நீரில் மூழ்கிச் சுழல-வீடு கண்ணீர் வெள்ளத்தில் ஓலமிட..

திடீரென்று தாயார் ஜெயலட்சுமி எழுகிருர். பூஜை மாடத்துக்குச் செல்லுகிருர். திருவானைக்காவலில் அமர்ந்த அன்னை அகிலாண்டேசுவரியின் படத்துக்கு முன் நெய் விளக்கு ஏற்றுகிருர். மருள் வந்தவர் போல் ஆவேசத்துடன் கதறுகிருர்.

''அம்மா, அகிலாண்டேசுவரி! லோக நாயகி! நீ படத்தை விட்டு எழுந்திரம்மா! இதோ நான் ஏற்றி வைத்திருக்கிற நெய் விளக்கிலே நீ இருக்கிருய். உடனே தூங்காமல் எழுந்திரு தாயே! லோகமே அழிஞ்சிண்டிருக்கு. உடனே புறப்படு... போ... போய் உன் மக்களை எல்லாம் காப்பாத்து. நீ எல்லா மக்களையும் காப்பத்தினு அதிலே என் குழந்தையும் ஒருவனு இருப்பான்... புறப்படு தாயே!....''

நெய் விளக்கு சுடர்விட்டு எரிய எரிய ஜெயலட்சுமி அம்மாள் கதறினுர்.

அந்தக் கதறல் லோக மாதாவை உலுக்கி விட்டதோ....?

கிட்டத்தட்ட அதே நேரத்தில் அந்த அதிசயம் நடந்தது. வெள்ளத்தில் மூழ்கிச்சென்ற வேதராமனின் தலை தடாரென்று ஒரு மின்சாரக் கம்பத்தில் மோதியது. இன்னும் பிரக்ஞை இழக்காத நிலையிலிருந்த வேதராமன் மின்சாரக் கம்பத்தைப் பிடித்துக் கொண்டார். மிஞ்சியிருந்த தன் சக்தியை யெல்லாம் திரட்டி மெல்ல மெல்ல அதைத் தழுவி ஏறினுர்....

“இந்த அகிலாண்டேசுவரிதான் என் குழந்தையைக் காப்பாற்றினுள். இந்த ராஜராஜேசுவரிதான் எலக்ட்ரிக் கம்பத்தைக் குடுத்து என் பிள்ளையைப் பிடிச்சுக்க வைத்து, மறுநாள் காலையிலே வீடு கொண்டு வந்து சேர்த்தாள்... இந்தப் புவனேசுவரிதான் என் கதறலைப் பார்த்து என் குடும்பத்துக்குப் பாலை வார்த்தாள்...!'' என்று திருமதி ஜெயலட்சுமி அம்மாள் கண்ணீர் பொங்க திருவானைக்காவல் அகிலாண்டேசுவரி சந்நிதியில் வைத்து அந்தச் சம்பவத்தைச் சொல்கிருர்.

அருகில் வேதராமன் — தம்பி நடராஜன் — வெள்ளத்தில் சென்றபோது வேதராமன் நினைத்து உருகிய தங்கை சந்திரா எல்லோரும் நிற்கிருர்கள். எல்லாரும் தம் குடும்பத்தை வாழ வைத்த

நடராஜன் - சந்திரா - ஜெயலட்சுமி அம்மாள் - வேதராமன்.



அன்னை அகிலாண்டே சுவரி அம்மனுக்குப் புடவைசாத்திக் காணிக்கை செலுத்த வந்திருந்தனர்.

சத்தியத்தின் சந்நிதியில் நின்று சாட்சி சொல்வதுபோல் அருள் சுடராய்த் துலங்கும் அன்னை அகிலாண்டேசுவரி முன் நின்று ஜெயலட்சுமி அம்மாள் கண்ணீர் பொங்கப் பொங்கச் சொன்ன வார்த்தைகளில் கட்டுண்டு மெய்சிலிர்த்து நிற்கிறோம்.



இதயம் பேசுகிறது இதழுக்காக ஆலயத்தினுள் அமர்ந்து சில்பி ஓவியம் வரையும் காட்சி

எதிரே ஞாலமெல்லாம் காத்து நிற்கும் லோக மாதா ஞானமாய்ச் சிரித்து ஒளி வீசுகிறாள். காலனை வென்ற அவள் சிரிப்பில் காலங்கள் விலகுகின்றன.

**அ**தோ, வேதகாலம் நம் கண்முன் விரிகிறது. அன்று இந்தத் தலத்தில் நடந்த அந்த இறை வரலாறு....

நேற்று இன்று நாளை என்ற பிரமாணங்கள் அற்ற அனாதி காலம் அது. எல்லையற்ற பரம் பொருளின் ஞானச் சுடரொளியில் புவனங்கள் இயங்கிக் கொண்டிருக்கின்றன.

திடீரென்று அண்டங்கள் கூறுபடுகின்றன. வையங்கள் நடுங்குகின்றன. கடல்கள் கதறி ஆர்ப்பரிக்கின்றன. பிரணவமே ஒடுங்கிப் போகிறது.

ஏன் இந்த உற்பாதம்?

**உ**மையொரு பாகனை என்றும் இறைவியை இடத்திலிருத்தி இகபரம் அனைத்துக்கும் அருள் பாலித்த இறைவனின் இடப்புறம் இப்பொழுது காலியாகியிருக்கிறது. அன்னை பராசக்தி அங்கில்லை. இறைவனின் இடப்புறத்திலிருந்து இறங்கி வந்து கொண்டிருக்கிறாள்... இறைவனுக்கும் இறைவிக்கும் கோபமாம்...

அதாவது, அன்னை அருகிலிருக்கும் போது, இறைவன் யோக நிலையில் அமர்ந்தாராம். 'நான் அருகிருக்கும் போது என்னைப் புறக்கணித்து யோகத்தில் அமர்ந்தீர்களா?' என்று உமையவள் ஏளனமாகச் சிரித்தாளாம். செருக்குற்ற அன்னையின் உள்ளம் செம்மைப்பட, 'பூமிக்குச் சென்று சிவ பூஜை செய்' என்று இறைவன் கட்டளையிட்டாராம்.

என்ன வேடிக்கை... ஜீவனுக்கும் ஆத்மாவுக்கும் மனப் பேதமா? உயிருக்கும் மூச்சுக்கும் பகையா?

இறைவனின் நாடகம், அஞ்ஞானிகளுக்குப் புரியாத வேடிக்கைதான். இதோ நாடகம் தொடங்குகிறது.

பூதலத்து ரிஷிகளும் சித்தர்களும், ஏன் வேதங்களும் ஞானங்களுமே ஜீவத்தவம் செய்து காணமுடியாத அன்னை பார்வதியின் பொற்பாதக் கமலங்கள் இறைவன் கட்டளைக்கேற்ப பூவுலகத்தை நோக்கி வருகின்றன. மாதா என்ன தவம் செய்து விட்டாளோ புவி மாந்தருக்கு எத்துணை நற்பேறு....!

அன்னை வருகிறாள்... 'நீ பூமியிலிருந்து தவம் செய்து ஆத்ம சுத்தி அடைவாய்' என்ற இறைவனின் கட்டளை, துணையாக அன்னையைத் தொடர்ந்து வருகிறது.

பூமியில்... இந்தப் பொன்னி வள நாட்டில் அன்னை அகிலாண்டேசுவரியின் கமல மலர்ப் பாதங்கள் இறங்கி நிற்கின்றன.

சுற்றிலும் நாவல் மரங்கள் அடர்ந்த காடு. ஜம்புவனம். அன்னை முகம் மலருகிறது. இதழோரம், ஜீவன்களின் மோட்ச ஒளிபோல் புன்னகை அரும்புகிறது.

ஆம்; இந்தத் தலத்தை கற்பகோடி காலங்

**அடுத்த இதழ்...**

'கதா' நாயகர்கள்

சிவசங்கரி

எஸ். வி. கே.



ஆனை முக்தி பெற்ற திருத்தலத்தில் ஆனை பிரதட்சணம் வருகிறது.

களுக்கும் மகிமை வாய்ந்ததாக-மாந்தர்களின் அடைக்கலமாகப் புனிதப் படுத்த அன்னை திருவுளம் கொண்டு விட்டாள்... யுக யுகாந்திரங்களைக் கடந்து வரும் காலங்களில் அந்தத் திருத்தலத்துக்கு என்னென்ன மகிமைகளை, பெருமைகளை அவள் அருள் பாலிக்கப் போகிறாள் என்பதையெல்லாம் இறைவியின் திருவுளம் நினைத்துப் பார்க்கிறது. பெருமிதத்துடன் அன்னை கலகலவென்று சிரிக்கிறாள்.

அந்த சிரிப்பொலியே பொன்னி நதியாய் புறப்பட்டு, அவள் திருப்பாதத்துக்குக் குதித்தோடி வருகின்றது. அந்த நதியின் நீரைக் கருணையோடு பார்க்கிறாள் தேவி. குனிந்து அதைத் தொடுகிறாள்.

பாவிகள் புனித நீரைத் தொட்டால் பாவங்கள் கரைந்தோடும்.

புனித நாயகியான பார்வதியே தொட்டால்?

அந்த நீரே அவள் இதய நாயகனை சிவபிரான் உருவாக — சிவலிங்கமாக மாறுகிறது.

'இறைவா, நீர் உம்மிடமிருந்து என்னைப் போகச் சொன்னீர். இப்போது நாயகனே, நீரே என் கரங்களுக்குள் அடங்கி விட்டீர்!' என்று அன்னை சிரிக்கிறாள். பஞ்ச பூத ஸ்தலங்களுக்குள் ஒன்றான அந்தத் திருவானைக்காவலில் இறைவியின் கரம்பட்டு அப்பு லிங்கமாக, ஜலகண்டேசுவரராக மாறி நின்ற இறைவனும் மோனமாய்ச் சிரிக்கிறார்.

(தொடரும்)

---

இவ்விதழில் வெளியான கதைகள் கற்பனையே. கதைகள், கட்டுரைகள், ஆகியவற்றைத் தபாலிலும் அனுப்பலாம்; நேரிலும் பெற்றுக்கொள்ளப்படும்.
கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுவர் ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
முகவரி: 38-39, மௌண்ட் ரோட், கிண்டி, சென்னை-600 032



என்ன பிளம்பர்? நேத்து நீங்க பைப்பை ரிப்பேர் செய்துட்டு போனது மாடிலே இருக்கிற குடித்தனக்காரங்களுக்கு தண்ணீர் பிடிக்க சௌகரியமா இருக்கு!.

அமைதியும் ஏற்படுகிறது'' என்று மரணத் தருவாயில் அனுபவம் பெற்றவர்கள் கூறுகிருர்கள்.

ஏன் உடலுக்குள் மீண்டும் புகுந்து இவ்வுலகத்திற்குத் திரும்பவும் வருகிருர்கள்? ''என் குழந்தைகளின் அழுகுரலைக் கேட்டேன'' ''என் மனைவி விஷயம் தெரியாதவள் இன்னும் கொஞ்ச காலத்திற்கு நான் உதவ வேண்டும் என்ற உணர்வு எழுந்தது'' ''அந்தப் பேரொளி என்னைப்பார்த்த உணர்வில் எனக்கு நேரம் வரவில்லை அங்கே போக என்பதை உணர்ந்தேன்'' என்று காரணம் கூறுகிருர்கள். ஆக நமது பந்தம், ஆசைகள், ஈடுபாடுகள், நிறைவேருத பணிகள், நமது காலம் என்று பல விஷயங்கள் இறந்தவர்களை மீண்டும் இவ்வுலக வாழ்க்கைக்குத் திருப்பி அனுப்புகின்றன.

''என்ன அந்தப் பேரொளி?'' என்று டாக்டர் ராஸ் கேட்டதற்கு ''கடவுள் தான் அந்த ஒளியாய் இருக்க வேண்டும். அதன் முன்னிலையில் கருணையும் அன்பும் பிரவகிப்பதை உணர்ந்தேன். அத்துடன் ஐக்கியமாகி விடவேண்டுமென்ற ஆசை — அங்கேயே அதே நிலையில் இருந்துவிட வேண்டுமென்ற ஆசை - நிறைய இருந்தது. இன்னும் ஒருபடி அருகில் சென்றிருந்தால் நான் மீண்டும் இங்கே திரும்பி இருக்கமுடியாது''

இத்தகைய அனுபவங்கள் நமது பரம்பரை நம்பிக்கைகளுக்கு இசைவாக இருக்கின்றன. அதேபோல் கிறிஸ்துவ மத நம்பிக்கைகளும் மனிதன் சிரஞ்சீவியாய் வாழ்கிறன் என்றுதான் கூறுகின்றன. ஆனல் இந்த அனுபவ உண்மை அனைத்தும் பொதுவாக உலகிற்குப் புதியவை. அவைகளை ஏற்றுக்கொள்வது ஏதோ விஞ்ஞான உலகிற்கு எதிராகச் செல்லும் ஒரு மனோபாவ சயக்கத்தைப் பலருள் ஏற்படுத்தியது எனினும், மருத்துவர்கள் பணம் கொடுத்து டாக்டர் ராஸின் பேச்சைக் கேட்டார்கள். அதில் ஏதோ உண்மை இருப்பது போல் படித்தவர்களுக்குப் பட்டது. அதிர்ச்சியுடனும் அதிசயத்துடனும் இச்செய்தியை மக்கள் படிக்கத் துவங்கினுர்கள். சாவு, சாவுக்குப்பின் வாழ்வு என்பதைப்பற்றி எல்லாம் ஒரு குறிப்பிட்ட வகை எண்ணங்களை நாம் வளர்த்துக்கொண்டு வந்திருக்கிருேம். பல ஆண்டுகளாக, பல காலமாக ஆக அவற்றிற்கு மாருன ஏதும், எந்தப் புதுமையும் உண்மையும் நமக்கு அதிர்ச்சியைத்தான் தரும்.

ஆத்மா சிரஞ்சீவித்துவம் கொண்டது என்பது பகவத்கிதையிலிருந்து, கிராமப் பெரியவர்கள் வரை ஏற்றுக் கொண்ட உண்மை நமது ஊரில், ஆத்மா சிரஞ்சீவியாய் வாழ்கிறது என்ற நினைப்புடன், ''தெய்வத்திற்குப் படைக்கிருேம்' என்று நாம் செய்யும், நமது மூதாதையர் வழிபாட்டையும், திதி திவசம் என்ற பெயரில் செய்யும் சடங்குகளையும், மனிதர்கள் இறக்கும் போது வீட்டில் திருவாசகம் படிப்பதையும் அதிலும் 'விடுதலைப்பத்து' என்ற பாடல்களை சாகப் போகிறவர்களுக்கு அருகில் இருந்து கொண்டு படிப்பதையும் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள்!

## அட்டைப்பட அழகி

கிராமப்புற அழகியாக அட்டையில் தோன்றும் குமாரி காயத்ரி உண்மையில் சென்னை நகர்வாசி. கல்லூரி மாணவியான இவரை வண்ணத்தில் மணியாகப் படம் பிடித்திருப்பவர் திரு. வி. கே. ராஜாமணி.

# தேவி தரிசனம்

## அகிலம் ஆண்ட அருள் நாயகி
2

ஏர் ஆனைக் காவலுறை என்னானைக் கன்றளித்த
பேரானைக் கன்றதனைப் போற்றினல் வாராத
புத்திவரும், பத்திவரும் புத்திரஉற் பத்திவரும்
சத்தி வரும் சித்தி வரும் தான்:

—காளமேகப் புலவர்.

ஒருப்பான அந்த ஞானபூமியில் நிற்கவே நம் கால்கள் தள்ளாடுகின்றன.

கல்ப கோடி காலமாக தத்துவங்களும், தவங்களுமே தவமிருந்து காண முடியாத கற்பகத் திருவுருவாம் அன்னை ஜகத்ஜனனியே தவமிருக்கிருள் அங்கே.

வேதஞானங்களையும், சாத்திரக் கருக்களையும் தன் விழிப்பார்வையிலேயே புவனங்களுக்குப் போதிக்கும் வேத வல்லியே அங்கே ஒரு மாணவியாக அமர்ந்து இறைவனிடம் ஞானப்பாடம் கற்றுக் கொண்டிருக்கிருள்.

தவம்—ஞானம் இரண்டும் கனலாய் தகிக்கும் அந்த ருத்ர பூமியில் கால்கள் தடுமாற நான் நின்று கொண்டிருக்கிறேன்.

ஒருபக்கத்தில் மகப்பேறு வேதனையால் தவித்த அபலை மாது ஒருத்திக்கு மர்தாவுமாக மாறி அருள் புரிந்த திருச்சி மலைக்கோட்டை வாசன் இருக்கிருன். மறுபக்கம் அரங்க—நகருள் அருட் பள்ளி கொண்ட ரங்கநாதப் பெருமான் இருக்கிருன்.

இருந்தும் என் கலக்கம் தீரவில்லை. எதிரே பிரம்மாண்டமாக எண்பத்தெட்டரை அடி உயரத்திற்கு எழுந்து நிற்கும் திருவானைக்காவல் ராஜகோபுரத்தைப் பார்க்கிறேன். எண்சாண் உடம்பும் கூசுகிறது.

நான் யார்? என்னவொரு காரியம் ஆற்ற எப்படியொரு துணிச்சலில் இங்கு வந்து நிற்கிறேன்.

எவ்வுயிரையும் காத்து நிற்கும் ஏழுலக நாயகியாய், ஈசனுக்கு எதிர்நிற்கும் எழுச்சிமிகு சக்தி தேவியாய், அந்தத்திருவானைக்காவல் திருத்தலத்தில் கன்னித் தவம் செய்யும் அன்னை அகிலாண்டேசுவரியைப் பற்றி எழுத வந்திருக்கிறேனே, அதற்கு எனக்கென்ன யோக்கியதை இருக்கிறது?

அஞ்சி நிற்கும் என் மனக்கண் முன்னே திடீரென்று அண்டம் அளாவிய ஜோதி மின்னலாய் அன்னையின் கொவ்வைச் செவ்வாய்க் குமிண்சிரிப்பு பிரகாசிக்கிறது. நான் மெய்ம்மறந்துபார்க்கிறேன். அந்த தேவதேவியின் வாயில் செம்பஞ்சுக் குழம்பாய் ஒளிருவது என்ன? அவள் வாயிலிட்டிருக்கும் தாம்பூலச் சாறு தானே அது? ஆமாம்... ஆமாம்...

பளீரென்று என் சிந்தனையில் ஒரு சிலிர்ப்பு.

காலங்களைக் காற்சலங்கைகளாக ஆக்கிக் களிநடைபயிலும் அந்தக்கைலாச நாயகி, சிறிது காலத்துக்கு முன்பு—ஒருசில நூற்றாண்டுகளுக்கு முன்புதான்—அந்தத் தலத்தில் நிகழ்த்திக் காட்டிய ஓர் அற்புதம் என் நினைவுக்கு வருகிறது.

கலீர் கலீர் என்ற சதங்கை ஒலி...

அதோ, திருவானைக்காவல் ஆலயத்தில், வசீகர அழகின் வனப்பு மிக்க உருவமாகத் தேவதாசி மோகனங்கி பாடி ஆடிக் கொண்டிருக்கிருள். அந்தக் காலத்து இறைவழிபாட்டு முறையில் தேவதாசியின் இசை—நடனமும் ஓர் அம்சம்.

முக்காலமும் வென்ற நாதனுக்கு முத்தமிழ்க்கலைகளின் வணக்கம் அது

மோகனாங்கியின் தேன்குரல், இசையமுதாய்ப் பொழிகிறது. எண்ணித் தொலையாத கூட்டம். கூட்டத்தில் மோகனாங்கியின் தோழிகளும் நிற்கின்றனர். சிலர் பிரமிப்புடன்; சிலர் தொழிற் பொறுமையுடன்!

''உங்கையிற் பிள்ளை...'' என்று தொடங்கும் திருவெம்பாவைப் பாடலை மெய்யுருக இசைக்கிறாள் மோகனாங்கி. அதில் தொடர்ந்து வரும் ஒரு வரி...

'என் கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க...!' (உன்னைத் தொழுவோர் அல்லாமல் மற்றொருவருடன் நான் கூடி வாழ மாட்டேன் என்னும் பொருள்.)

அந்த வரியைக் கேட்டதும், மோகனாங்கியின் உடனிருந்த மற்ற தாசியர், 'களுக்'கென்று கேலியாகச் சிரித்து விட்டனர்.

காரணம், ''உன் அன்பர் அல்லார்'' என்ற வரிப்படி 'சிவனை வணங்குவோர் அல்லாதாரோடு கூட மாட்டேன்' என்று குறிப்பிட்டுப் பாடும் மோகனாங்கியோ உண்மையில் வரதன் என்ற வைணவனைத்தான் ஆசை நாயகனாக ஏற்று வாழ்கிறாள். அருகிலிருக்கும் ஸ்ரீரங்கம் கோவிலில் பணி புரிபவன் அவன்.

தோழியரின் கேலிச் சிரிப்புக் கேட்டு மோகனாங்கி மனம் வெதும்பித் தலை குனிந்து கோயிலை விட்டு வெளியேறித் தன் வீட்டுக்குச் சென்றாள்.

இரவில் ஆசைநாயகன் வரதன் வந்தான். மோகனாங்கியின் வீடு தாழிடப்பட்டிருந்தது. தட்டினான். திறக்கப்படவில்லை. திடமான பதில்தான் வந்தது. ''சிவ பக்தையான நான், வைணவரான உம்மோடு வாழமாட்டேன்''. (அந்தக் காலத்தில் சைவ—வைணவ பேதம் உச்சகட்டம்)

மோக வசப்பட்டிருந்த நாயகனோ வாசலுக்கு வெளியே நின்று உருகினான். ''நீ என்ன சொல்கிறாயோ, கேட்கிறேன். கதவை மட்டும் திறந்துவிடு!''

''நீர் நாளை முதல் சிவபக்தனாக வேண்டும்!'' என்றாள் மோகனாங்கி. மோகம் வென்றது. மனிதனின் பாரம் பரிய வீழ்ச்சிக் கட்டம் அது.

அன்று இரவு முழுவதும் அவனைத் தெருவாசலில் நிறுத்திவைத்தே சைவ சமய போதம் நடத்தி, அவனைச் சிவ பக்தனாக்கிவிட்டுத்தான் கதவைத் திறந்தாள் மோகனாங்கி.

அன்று முதல் வரதனுக்கு ஜம்புகேசுவரர் ஆலய மடைப்பள்ளியில் வேலை.

ஒவ்வொரு நாளும் அவளும் அவனும் கோயிலுக்கு வருவார்கள். அவளுடைய ஆடல் பணி முடிந்ததும், சமையல் பணி முடித்து விட்டுக் காத்திருக்கும் நாயகனோடு வீடு திரும்புவாள் மோகனாங்கி. ஒருநாள் அவள் முந்தி வீடு திரும்ப நேர்ந்துவிட்டது. வரதன் பின் தங்கினான். மடைப்பள்ளி வேலைக்களமோ என்னவோ அசந்து கோயிலுக்குள்ளேயே தூங்கி விட்டான்.

அன்றிரவு அர்த்த ஜாமம். திடீரென்று கருவறை திறக்கிறது. இருண்ட கோயில் கோடி சூரியப் பிரகாசமாகிறது. அண்டங்களுக்கெல்லாம் நாயகியான அகிலாண்டேசுவரி ஞானப் பிராட்டியாக வெண்கலை உடுத்தி, சரசுவதி அம்சமாக பத்ம மலர்ப் பாதங்கள் அசைய அந்தக் கருவறைக்குள்ளிருந்து வெளிப்படுகிறாள்.

கோயிலுக்குள் வரதன். அல்லாமல், இன்னொரு அந்தணரும் புவனேசுவரியை நோக்கிப் புலமை வரம் கேட்டுத் தவம் செய்து கொண்டிருக்கிறார். அவருக்கு அருள்புரியவே அன்னை கருவறையை விட்டு வெளிவருகிறாள். புன்னகையுடன் அந்த வேதியர் முன் போய் நிற்கிறாள்.

தவம் கலைந்த அந்தணர் எதிரே நின்ற அம்பிகையைப் புரிந்துகொள்ளவில்லை. யாரோ ஒரு பெண் இரவில் தன்னை மயக்க வந்திருப்பதாக அவருக்கு அஞ்ஞான மூட்டம் மனதுக்குள். ''பெண்ணே, என் தவத்தைக் கலைக்க வந்தாயா, எட்டப் போ!'' என்று கத்தினார். அவருடைய அஞ்ஞானத்தைப் பார்த்துத் தேவி வாய்விட்டுச் சிரித்தவாறே வாயிலிருந்த தாம்பூலச் சாற்றை உமிழ்ந்தாள்.

அந்தத் தாம்பூலச் சாறு, அருகே மோகனாங்கியின் நினைவில் திறந்த வாய் மூடாமல் தூங்கிக் கொண்டிருந்த மடைப்பள்ளி வரதன் வாயில் போய் விழுந்தது. வரதன் உணர்வு இல்லாமல் தூங்கினாலும் தாம்பூல உணர்வு அவனுக்குத் தூக்கத்திலும் தெரியும். மோகனாங்கியிடம் மோக போக காலங்களில் பெற்று அனுபவித்தப் பழக்கம். அம்பிகையின் வாயிலிருந்து தெறித்த தாம்பூலச் சாற்றையும், ஏந்தா தன்

ஆசை நாயகி அளிக்கும் தாம்பூலப் பரிமாற்றம் என்றே நினைத்து விழுங்கிச் சுவைத்தான்.

மறு விநாடியே அந்த அற்புதம் நடந்தது அங்கே...

ஞானமே தாம்பூலமாய் வேதமே சாருக அன்னை உமிழ்ந்த தாம்பூலச் சாறு அந்த விநாடியே வரதனைத் தெய்வக் கவிஞனுக்கி விட்டது. அதை உட்கொண்ட வாயிலிருந்து அமுதப் பிரவாகமாகத் தெய்வீக ஞானப் பாடல்கள் பொங்க ஆரம்பித்தன...

அந்த வரதன்தான் புகழ்பெற்ற கவிகாளமேகம்! 'திருவானைக்கா உலா' என்ற நூலை இயற்றிப் பெருமை பெற்றார், அந்த அம்பிகையின் ஞானக் குழந்தை.

ஒவ்வொரு குழந்தைக்கும் அதனதன் பக்குவத்துக்கேற்ப அமுதூட்டுவதுபோல், முன்னம் ஒருநாள் குழந்தையான திருஞான சம்பந்தனுக்கு, அவன் பருவத்துக்கேற்ப முலைப்பாலூட்டி தேவாரம் பாட வைத்தாள் அன்னை.

இன்று வரதன் பழகிய வழியில் தாம்பூலச்சாறு அளித்து அவனை உலாப் பாட வைத்தாள்.

அந்த அன்னையின் காலடியில் வந்து நின்று கொண்டு நான் ஏன் மயங்க வேண்டும்?

ஆசைநாயகியின் நினைவில் அறியாமல் தாம்பூலச் சாறு சுவைத்த வரதனையே ஆட்கொண்ட என் அம்பிகை, அவனையே தேடி வந்து நிற்கும் எனக்கருள் புரிய



மாட்டாளா? அவள் திருவாயில் இன்னும் ஒரு துளி வெற்றிலைச் சாறு எனக்காக மிச்சமிருக்காதா... துளி வேண்டாம் ஒரு சாரல் போதுமே....

புவனேசுவரியின் நினைவில் என் கால்களுக்குப் புதிய பலம் வருகின்றது.

அகிலாண்டேசுவரியின் நெடிய திருக்கோயிலைப் பார்க்கின்றேன். அதற்குள் செல்லும் பாதையைப் பார்க்கிறேன்.

எனக்குப் புல்லரிக்கிறது... எனக்கு முன் அங்கு நடந்து நடந்து அருள் பெற்ற புனிதப் பாதங்களின் சுவடுகள் என் கண்ணுக்குத் தெரிகின்றன.

அதோ... பிரம்மதேவனின் பாதச் சுவடுகள்! தன் படைப்புத் தொழிலில் ஏற்பட்ட மயக்கத்தால், தான் எழிலுருவாய்ப் படைத்த பெண்ணின் மேலேயே மோகம் கொண்டு, அதனால் சாபம் பெற்று; அதைப் போக்க, பாதம்தேய, தன் பாவம் தேய நடந்து அருள்பெற்ருனே, அந்தச் சுவடுகளைப் பார்க்கிறேன்.

அங்கே, அவதார நாயகனை ஸ்ரீராமனின் பாதங்கள்கூடத் தென்படுகின்றன. பிரம்ம குலத்தவனை ராவணனின் தம்பி கும்பகர்ணனைக் கொன்ற பிரம்மகத்திப் பாவம் தீர, ஸ்ரீராமர் தவம் செய்து சுத்தியடைந்ததுகூட இந்தத் தலத்தில்தான்.

இன்னும் அந்த ஸ்ரீராமனல் சாப விமோசனம் பெற்ற அகலிகையின் கணவர் கௌதமரின் கால் சுவடுகள்கூட அங்கே தெரிகின்றன. ஏன்? அவரும் அங்கு வந்துதான் பாப விமோசனம் பெற்றிருக்கிருர். முனிவன் என்பவன் கோபங்களை வென்றிருக்க வேண்டும். அகலிகை அறியாமல் செய்தத் தவற்றுக்கு அவளைக் கல்லாய்ச் சமைத்துச் சாபமிட்டாரே, அந்தக் கோபம் என்ற பாவம் தீரவும்—மீண்டும் மனையாளைப் பெறவும் கௌதமர் அங்கு வந்துதான் தவம் செய்து அருள் பெற்ருர்.

இன்னும் தேவாரம் பாடிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனர், திருப்புகழ்பாடிய அருணகிரிநாதர், தாயுமானவர், ஐயடி

கள் காடவர்கோன, பராசர முனிவன் போன்ற சிவநேசச் செல்வர்கள் என்ன, கோச் செங்கண்ணன் போன்ற அரசர்கள்என்ன, ஐயறிவு கொண்ட யானை— சிலந்தி போன்ற ஜீவராசிகள்என்ன, இறைவனுக்கே தம் உடலில் வளர்ந்திருக்கும் வெண் நாவல் மரத்தால் நிழல்தரும் ஜம்பு முனிவன் என்ன...

சுத்தி பெற,சித்திபெற, பக்தியுடன் நடந்து முக்தி பெற்ற அத்தனை பாதச் சுவடுகளையும் மனத்தால் தொட்டுத் துதித்து அம்பிகையின் கமல மலர்ப் பாதங்களைத் தொழும் பேற்றைப் பெறப் போகும் பரவசத்தில் கோபுரவாசலை நோக்கி நடக்கிறோம். வழியில் ஒரு குரல்.

கோயில் சன்னதித் தெருவில் கடை வைத்திருக்கும் வியாபாரி சிவானந்தம்.

''இப்போ ஊருக்குள்ளே கோயில் காரியமா பகை இருக்குங்க. இங்கே உள்ள கிராம தேவதை யானபிடாரிக்குத்திருவிழா நடத்தாம, பெரிய கோயில் காரங்க போட்டுட்டாங்க. அதனாலே கிராமத்துஜனங்களுக்குக் கோபம். தேர் இழுகக்க் கூட கூட்டம் சேர மாட்டேங்குது!'' என்கிறார், அவர் வருத்தத்துடன்.

நாம் வருத்தப் படவில்லை....

பகை... கோபம்.... சண்டை..... இவை இந்தத் தலத்துக்குப் பழகிப் போனவை.

ஏன், அன்னை உமையவளே இந்தத் தலத்தில் வந்துஅமர இறைவனோடு ஒரு சண்டையைத்தானே தேர்ந்தெடுத்தாள்... அது மட்டுமா? தேவ—தேவியின் அருள்பெறப் போட்டி போட்டு யானையும், சிலந்தியும் சண்டை போட்டுக் கொள்ளவில்லையா?.....

ஆனால் ஒன்று: பொதுவாகச் சண்டைகளால் அழிவு வருவதுண்டு.

அந்தத் தலத்தில் மட்டும் சண்டைகளால் அருள்தான் பயனாக வரும்..

பார்வதி—பரமேசுவரன் சண்டையால் பக்தர்களுக்கு பாவம் தீர்க்க இந்த பஞ்சபூத க்ஷேத்திரம் உருவாகியது.

அடுத்த இதழ்
அதிக பக்கங்கள்
ஒரு பரிசு இதழ்.
புரியவில்லையா ?
ஒரு வாரம்தானே—
பொறுத்திருந்து பாருங்கள்!

பக்தர்களான சிலந்தியும், யானையும சண்டை போட்டதால் இரண்டுக்குமே மோட்சம் பெறும் சுவையான முடிவு ஒன்று தோன்றியது.

இன்றிருக்கும் இந்தச் சண்டையால் என்ன நாடகம் நடத்தப் போகிறாளோ— அன்னை அகிலாண்டேசுவரி?

இப்போது அன்னை நம்மை அழைக்கின்றாள்.

காலை ஐந்து மணி, அகிலாண்டேசுவரியின் அருட்பார்வையால் அஞ்ஞானம் விலகி ஞானம் பிறப்பதுபோல் இரவு கரைந்து பகல் பிறந்து கொண்டிருக்கிறது.

கோவில் மணியக்காரர் ஜம்புநாதன் ஆலயத்தின்நெடுங்கதவுகளைத்திறக்கிறார்.

திம் திம் என்று நடை குலுங்க, ''அம்மா'' ''அம்மா'' என்று மணியசைய இறைவி கோவிலை நோக்கி யானை நடந்து வருகிறது. அன்னையை நீராட்ட காவிரி நீர் எடுத்து வருகிறார்கள்....

இன்னும் சிறிது நேரத்தில் தேவியின் திருக்கோயிலில் பக்தி செய்து பயனுற உயிர்களுக்குப் பெரும்பேறாக ஒருநாள் பிறக்கப் போகிறது...

அதைக் கண்டு கடைத்தேற அன்னையின் சந்நிதியைத் தேடி நம் கால்கள் விரைகின்றன...

அதோ, ஞானகுரு ஆதி சங்கரர் ஸ்ரீசக்ர பிரதிஷ்டை செய்து, லோக நாயகிக்குச் சூட்டிய தாடங்கம்(காதணி) கருணை ஒளியாய்ச் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. அந்த ஒளியில் நாம் நடக்கிறோம்.

(தொடரும்)

இவ்விதழில் வெளியான கதைகள் கற்பனையே. கதைகள், கட்டுரைகள், ஆகியவற்றைத் தபாலிலும் அனுப்பலாம்; நேரிலும் பெற்றுக்கொள்ளப்படும்.
கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுவர் ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.



ஸ்ரீகாந்த் :

ஆறு. இந்திப்படத்திலே அளவா பேசி அழுத்தம் குடுத்து நீங்க நடிச்ச ரோல்லே, என்னை வளவளன்னு பேசவைத்து என் நடிப்பையே வெலவெலக்க வச்சுட்டாங்களே. அதை நினைக்கவே கஷ்டமாக இருக்கு...

* * *

தீவார் இந்திப்படத் தம்பி சசிகபூர் :

மிஸ்டர் ஜெய், குணமுள்ள தம்பியாக இந்தியில் வரும் என்னை போலீஸ் அதிகாரியாக வைத்துக் கட்டுப்படுத்தியிருந்தாங்க...

(ந. கா.) பட நல்ல தம்பி ஜெய்சங்கர் :

என்னையும் போலீஸ் அதிகாரியாக்கினு நான் எப்படி அடிக்கடி கும்கும் என்று ஸ்டண்ட் பண்ண முடியும்..? அதைத் தானே என் விசிறிகள் என்கிட்டே எதிர் பார்க்கிறுங்க. ரோலை பற்றி என்ன.? இருந்தாலும் அடிப்படை காரக்டர்லே- அம்மாவை நேர்மையா கப்பாத்த நினைக்கிற தம்பியாக நம்ம ரெண்டு பேருடைய ரோலும் ஒரே மாதிரிதான். ஒரே வசனத்தை நம்ம ரெண்டு பேருமே பேசறதை கவனிச்சீங்களா ?

ஜெய் :

உன்னிடம் என்ன இருக்குன்னு அண்ணன் கேட்கிறப்போ, 'எங்கிட்டே அம்மா இருக்கா'ன்னு நீங்க இந்திப் படத்திலே சொல்ற அதே டயலாக்கை நானும் சொல்றேன் பாத்தீங்களா?

ஃ ஃ ஃ

இந்திப் படத் தம்பியின் காதலி நீட்டுசிங் :

என்ன, மிஸ் ஸ்ரீப்ரியா, டல்லா இருக்கீங்க?

தமிழ்ப்படத் தம்பியின் காதலி ஸ்ரீப்ரியா :

உடம்புக்கு சுகமில்லே. ஜெய்சங்கருக்கு ஜோடியா நடிச்ச ராசி, படம் முழுசும் கராத்தே..ஸ்டண்ட்னு சண்டை போட்டு ஒரே உடம்புவலி. அதோட கொஞ்சம் கவர்ச்சியா நடிப்பேன்னு பேரெடுத்துட்டேனு, அதுக்காக என்னை சதா தண்ணீரிலே நனையவச்சு; ஒரே ஜல தோஷம்...

நீட்டுசிங் :

தலைவலி கூட உண்டா?

ஸ்ரீப்ரியா :

ஊஹூம்... அதுபடம் பார்க்கிறவங்களுக்கில்லே,

உ

முன்னானை மூவர்க்கும் முற்றுமாய் முற்றுக்கும்
பின்னானைப் பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையின்
மன்னானை வானவனை மாதியலும் பாதியனைத்
தென்னானைக் காவானைத் தென் பாண்டி நாட்டானை
என்னானை என்னப்பன் என்பார்கட் கின்னமுதை
அன்னானை அம்மானைப் பாடுதுங்காண் அம்மானாய்!

—மாணிக்கவாசகர்.

# தேவி தரிசனம்

அகிலம் ஆண்ட அருள் நாயகி

## பொன். பாஸ்கர மார்த்தாண்டன்

பசுவை நோக்கிக் கன்று ஓடுகிறது.

பரமாத்மாவை நோக்கி ஜீவாத்மாக்கள் ஓடுகின்றன.

பர்வதவர்த்தினியான அன்னை பரமேஸ்வரியின் பாதமலர்க் கமலங்களை நோக்கி இந்தப் பாரிலுள்ள மாந்தரெல்லாம் ஓடோடி வருகின்றனர்.

ஜீவன்களின் அந்த ஓட்டத்துக்குக் காரணம் என்ன?

மகான் ஆதி சங்கரபகவத் பாதாள் 'ஸௌந்தர்ய லஹரி'யில் சொல்லியிருக்கிற அந்த வார்த்தைகள் நம் நினைவுக்கு வருகின்றன....

'தாயே,, உன் திருவடிக் கமலத்திலிருந்து உண்டாகிற ஒரு சிறு தூசியை வைத்துக் கொண்டுதான், பிரம்மா தன் படைப்புத் தொழிலைச் செய்கிறார்; அதே தூசியை வைத்துக்கொண்டுதான் மகாவிஷ்ணு, காக்கும் தொழிலைச் செய்கிறார்; அதே தூசியை விபூதியாக அணிந்து கொண்டுதான் சிவனும் தன் பிரளயப் பேரழிவுப் பணியைச் செய்கிறார்...!'

மறை நான்கும் கூடி, திசை எட்டும் தேடியும் காணமுடியா திரிமூர்த்திகளின் இயக்கங்களே லோகநாயகியான ஈஸ்வரியின் பொற்பாதத் தூசிக்குள் அடங்கிவிட்டதென்றால், அந்த அம்பிகையின் பாதங்களுக்கு எவ்வளவு மகிமை!

அந்த மகிமை பெற்ற பாதங்களைத் தரிசிக்க உயிர்க்கோடிகள் புரண்டோடி வருவதற்குக் கேட்க வேண்டுமோ'

அதோ, ஆதி அந்தமில்லாத ஜோதி நாயகியான அன்னை அகிலாண்டேசுவரியின் சன்னதி - அந்த உஷக் காலத்திலேயே பக்திப் பெருங் கூட்டத்தால்



சாது சுவாமிகள்

நிறைந்து பொங்குகிறது. பிள்ளைகளைக் கண்ட பேருவகையில் 'அருள் தேவி' யான புவனேஸ்வரி புன்னகை சிந்தும் கோலத்தில் நின்று கொண்டிருக்கிருள். புவனேஸ்வரி புன்னகை சிந்தும் கோலத்தில் நின்று கொண்டிருக்கிருள்.

கூட்டத்தோடு நாமும் உள்ளே நுழைகிறோம். பிரம்மாண்டமான திருநீற்றுன் மதிலைக் கடக்கும்போது நம் கால்கள் சிலிர்க்கின்றன.

காரணம், அந்த திருநீற்றுன் மதிலைக் கட்டியவர் வேறு யாருமில்லை; சாட்சாத் பகவானுன உமாமகேஸ்வரன்தான்! மதுரையம்பதியில் பிட்டுக்கு மண் சுமக்கும் கூலியாளாக வந்து தேவ நாடகம் ஆடிப் பிரம்படி பட்ட பெருமான், இப்பதியில் ஒரு சித்தராகத் தோன்றி மதில் திருப்பணி நடத்தினுர். மதுரையில் பிட்டைக் கூலியாகப் பெற்ற அவர், இப்பதியில் திருநீற்றைக் கூலியாக பணி செய்தோருக்குக் கொடுத்தாராம். அவர் கொடுக்கும் திருநீறு, ஒவ்வொருவர் கையிலும் அவரவர் செய்த வேலைக்கு ஏற்பக் கூலிப் பணமாக மாறிவிடும்.

'வேலைக்கேற்ற கூலி' என்ற இன்றைய தொழில் கோரிக்கை, அன்றே இறைவன் வகுத்துக் காட்டிய வழிதான்!

'நீ பணியைச் செய். அதற்கான பலனை நான் செய்கிறேன்' என்று கீதை நாயகன் சொன்ன மறைவாக்குத் தத்துவத்தையும் இத்தலத்தில் இறைவன் பரிபாலித்து உலகியல் நெறியை உணர்த்தியிருக்கிருன்..

திருநீற்றுன் மதிலைத் தாண்டி உள்ளே நுழைகிறோம். ஆயிரங்கால் மண்டபத்தில் 'கோவிலுக்குள் பிச்சை எடுப்பவர்கள் தண்டிக்கப்படுவார்கள்' என்று வேடிக்கையான ஓர் அறிவிப்பு தொங்குகிறது. அந்தக் கோயிலுக்குள் குடியிருக்கும் இறைவஞன சிவபெருமானே ஒரு பிச்சாண்டி! அவனைத் தேடி வருபவர்கள் எல்லாம் அருள் பிச்சை கேட்கும் பிச்சாண்டிகள்! இவர்களுக்கு மத்தியில் கேவலம் பொருள் பிச்சைக் கேட்போருக்குத் தண்டனையா?

நாம் ஆயிரங்கால் மண்டபத்தைக் கடந்து கொண்டிருக்கும்போது பசுமடத்திலிருந்து காராம்பசுவின் பாலைக் கறந்து எடுத்துக் கொண்டு உள்துறை ஊழியர்கள் அம்மன் சன்னதிக்குச் சென்று கொண்டிருக்கிருர்கள். இறைவியின் உஷக் கால விசுவரூப தசிசனத்துக்கு நைவேத்தியம் அந்த காராம் பசுப் பால் தான்.

தொடர்ந்து எதிர்பட்டு நிற்கும் மல்ல பக்க கட்ட கோபுரத்தினுள் நாம் நுழைந்து கடந்து கொண்டிருக்கும் போது இடது புறமாக இருக்கும்தோப்பு நம் கவனத்தைக் கவருகிறது. 'இதுதான் நாச்சியார் தோப்பு' என்று தகவல் சொல்கிருர்கள்.

'நாச்சியார் தோப்பு' என்ற வார்த்தையைக் கேட்டு வியக்கிறோம்.

யார் அந்த நாச்சியார்? சிவத் தலங்களில் 'நாச்சியார்' என்ற பெயர் கூறப்படுவதில்லை. அச்சொல் வைணவத் தலங்களில்தான் வழங்கப்பெறும். விசாரித்ததில் நம் வியப்பு இன்னும் அதிகமாகிறது.

அந்த நாச்சியார், வேறு யாருமில்லை. அன்னை அகிலாண்டேசுவரிதான்!

அகிலாண்டேசுவரிக்கு நாச்சியார் என்ற பெயர் வழங்கப் பெறுவதற்குப் பின்னணியில் ஒரு பாசம் மிக்கச் செய்தி இருக்கிறது.

அகிலாண்டேசுவரி, அருகே உள்ள ஸ்ரீரங்கத்திலிருக்கும் ரங்கநாதப் பெருமானுக்குத் தங்கை. அந்தத் தெய்வத் தங்கைக்குச் சீராக அரங்கநாதப் பெருமான் சார்பில் வழங்கப்பட்ட சீதனச்சொத்துதான் இந்தத் தென்னந் தோப்பு. இப்போதும் மார்கழி மாதம் முதல் தேதிகளில் அந்தத் தோப்பிலிருந்து வெட்டப்படும் தேங்காய் வருமானத்தை ஒரு தாம்பாளத்தில் வைத்து அரிசி, பருப்பு, வெல்லம், தேங்காய் போன்ற பொருட்களுடன் யானையில் ஏற்றி அரங்கநாதப் பெருமான் அளிக்கும் 'பிறந்த வீட்டுச்' சீதனமாக அகிலாண்டேசுவரியின் சன்னதிக்கு அனுப்பும் சம்பிரதாயம் நிகழ்கிறது!

அனந்த கோடி ஜீவராசிகளுக்கு மட்டுமல்லாது அரனுக்கும் ஹரிக்கும் பற்றுப் பிடிப்பாகத் திகழும் அன்னையின் விசுவரூப தரிசனம் காணச் சன்னதிக்கு விரைகிறோம்.

பள்ளியறை வாசலில் பக்தர்கள் கூட்டம் திரண்டு நிற்கிறது. திருவானைக்கா தலத்தில் இறைவி அகிலாண்



டேசுவரிக்கு பள்ளியறை கிடையாது. ஈசன் ஜம்புகேசுவரரும் அகிலாண் டேசுவரியும் தனித்தனியாகவே கோயில் கொண்டிருக்கிறார்கள். ஈசனை நோக்கித் தவம் செய்யும் கன்னியாக - ஈசனிடம் ஞான பாடம் கற்கும் மாணவியாகத் தான் அங்கு அகிலாண்டேசுவரி அமர்ந் திருக்கிறாள்.

ஆனாலும் இறைவனையும் இறைவி யையும் பிரித்துப் பார்க்கச் சகிக்காத பக்தர்களின் பாமரத் தாகத்துக்காக, மதுரை சொக்கநாதரும் மீனாட்சியும் உற்சவ மூர்த்திகளாகப் பள்ளியறையில் தரிசனம் தருகிறார்கள்.

தம் பேதமை வேட்கைகளை இறை வனிடமும் இறைவியிடமும் கண்டு மகிழ்வதில் நமக்குள் ஓர் அஞ்ஞான நிறைவு.



தூங்காத இறைவனுக்குத் தொட்டி லிடுகிறது, நம் நீங்காத மனமாயை என்றாலும், மாயை கொண்ட இப் பாமரச் சேய்களுக்காகப் பரமன் பள்ளி யறைக் கோலம் கொள்கிறான்.

பள்ளியறை பூஜையானதும் சொக்க நாதர் புறப்பட்டு தனியே குடிகொண் டிருக்கும் சுவாமி ஜம்புகேசுவரர் சந் நிதிக்குச் செல்கிறார்.

இன்னும் சில விநாடிகளில் அகிலாண் டேசுவரியின் விசுவரூப தரிசனம்! அன்னை முகம் காண பக்தர் வெள்ளம் சன்னதி யில் காத்து நிற்கிறது.

பக்தர்கள் மட்டுமா காத்து நிற் கிறார்கள்? அன்னையின் உக்கிரம் தணிக்க அத்தலத்தில் கோயில் கொண்டிருக்கும் கணேசப் பெருமானும் முருகப் பெருமானும் கூடத்தான் காத் திருக்கிறார்கள்... அத் தெய்வக் குழந் தைகள் மட்டும் அங்கு இல்லாவிட் டால்...?

இன்று கருணைத் தெய்வமாக அமர்ந் திருக்கும் அன்னை, ஆதியில் உக்கிர சொரூபியான துர்க்கையாக அங்கு வீற்றிருந்தாள். கன்னியாகத் தவம் செய்ததால் அன்னையின் உக்கிரம் எல்லையெங்கும் அனலாய்த் தகித்துக் கொண்டிருந்தது. பக்தர்கள் கோயி லுக்குள்ளேயே நுழைவதில்லை. வெளி வாசலில் நின்றே அம்மனை வணங்கிச் செல்வார்கள். அம்மையின் கோபத் தைத் தாங்கும் சக்தி வெகுகாலம் வரை எவருக்கும் இல்லை.

அப்போதுதான் பகவான் ஆதிசங் கரர் அந்தத் திருத்தலத்துக்கு விஜயம் செய்தார். கால் பட்ட பூமியெல்லாம் வேதமணம் கமழச் செய்துகொண்டு, காலடியிலிருந்து கிளம்பி வந்த சங்கர பகவத் பாதாள், திருவானைக்கா

தலத்துக்கும் எழுந்தருளினர். வந்த இடத்தில் அன்னையின் கோபாக்கினி கொழுந்து விட்டுச் சீறும் பயங்கரத் 'துர்க்கை' கோலத்தைக் கண்டார். அன்னையின் உக்கிரத்தை தணிக்கா விட்டால், பக்தர்கள்நெருங்க முடியாது என்று உணர்ந்த பகவான் சங்கரர் அங்கேயேதங்கி, 43ஸ்ரீசக்கரம் கொண்ட இரு தாடங்கங்களைத் தயார் செய்து, அதில் அம்பிகையின் தெய்வீக சக்தி முழுவதும் வந்து குடி புகும்படி வேண்டினர். அம்மையும் பகவானின் வேண்டுகோளுக்கு இணங்கத் தன் மூர்த்தி கரத்தை ஸ்ரீ சக்கரத்தினுள் அடங்கியிருக்கச் செய்தார். பின் சங்கரர், அந்த ஸ்ரீ சக்கரங்களை இரு தோடுகளாக்கி (தாடங்கம்) தாயின் காதுகளில் அணிவித்தார். அப்போது தான் அன்னையின் உக்கிரம் ஓரளவு தணிந்தது.

இருப்பினும் அதற்கு மேலும் தாயின் உக்கிர சக்தி, பக்தர்களைத் தாக்காத வண்ணம், அம்பிகையின் எதிரே, நேர்ப் பார்வையில் அவருடைய மூத்த பிள்ளையான விநாயகரைப் பிரதிஷ்டை செய்தார். இளைய பிள்ளையான முருகனை அன்னைக்குப் பின்புறம் பிரதிஷ்டை செய்தார்.

தம் இரு பிள்ளைகளையும் கண்டதும் அன்னையின் கோபாவேசம் தணிந்தது.

அதன்பின் பகவான் ஆதிசங்கரர் அன்னைக்கு பூஜை முறைகளை நிர்ணயித்து, 'பண்டிதர்கள்' எனப்படும்

# அடுத்த இதழில்

**GUEST EDITORIAL**

**சிறப்புத் தலையங்கம் வெளிவருகிறது. தமிழக முதல்வர் திரு. எம். ஜி. ஆர். எழுதுகிறார். பல்வேறு துறைகளில் வல்லுநர்கள், தலைவர்கள் மாதம் ஒரு சிறப்புத் தலையங்கம் எழுத இருக்கிறார்கள்.**

அர்ச்சகப் பிரிவினரையும் பூஜைப் பணிக்கு நியமித்து அன்னையின் அருள் பக்தர்களுக்குக் கிடைக்கச் செய்தார்.

ஆதி சங்கர பகவத் பாதாள் அமைத்த அந்தத் தாடங்கங்களை வெகு காலத்துக்குப்பின் இப்போதைய காஞ்சிப் பெரியவர்கள், 1923-ல் ஜீர்ணோத்தாரணம் செய்து அருள் புரிந்தார்கள்.

இந்த சங்கரர் வழி மகான்களின் பேரருளால் இன்று அன்னையின் திருச் சன்னதியெங்கும் கருணை மணம் நிறைந்து நிற்கிறது.

இதோ, கோடானு கோடி கருக்களுக்குள் கருணையாய், தவமாய், ஞானமாய், வேதமாய், ஆகமமாய் அமைந்திருக்கும் அம்மை ஜகத் ஜனனியின் கருவறைத் திருக்கதவம் திறக்கிறது.

எங்கும் 'ஓ ஹா'ரம்...

'அம்மா லோக மாதா, ராஜ ராஜேஸ்வரி! புவனேசுவரித் தாயே!' பக்தர்களின் ஓலம் பரம நாயகியின் பாதக் கமலங்களை பூஜிக்கிறது.

தேவி பிரசன்னமாகிறாள்...

பிரமன் முதல் தேவாதி தேவர்களும், அப்பர் முதல் அருட் செல்வர்களும், ஓர் ஆனையும் சிலந்தியும் ஆராதித்து அருள் பெற்ற அம்மையின் திருவுருவைக் காணும் பேறுபெற்று மெய்சிலிர்த்து நிற்கும். தேஜோ மயமாய், ஜோதிச் சுடராய் அன்னை ஒளிர்ந்து நிற்கின்றாள்.

அவள் கையில் அங்குசம் இல்லை; பாசம் இல்லை. அருள் புரிய வந்த சதுர்புஜங்கள். ஒரு கரத்தில் 'அஞ்சேல்' என்று அடைக்கலம் அருளும் அபயஹஸ்தம். மற்றொரு கரத்தி[ல்] வேண்டும் 'வரம் பெறுக' என்று வழ[ங்]கும் வரத ஹஸ்தம்! இரு கரங்களி[ல்] தாமரைப்பூ... கண்களில் கருணை ஒளி...

அனைத்துயிர்களும் ஆன்ம சக்திக்குள் ஒடுக்கம். ஆன்மாக்கள் எல்லாம் அரனுக்குள் ஒடுக்கம். அந்த அரனே எம் அம்மை அகிலாண்டேசுவரிக்குள் ஒடுக்கம்!

கற்பூர தீப ஜோதியில் அன்னையின் கருணை முகம் கண்டு கண்ணீர் மல்கி நிற்கின்றோம்.

(தொடரும்)

...க்கிலான்

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில்
அச்சிடுபவர் ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்
சார்பாக வெளியிடுபவர் ...

Manian's "Idhayam Pesugiradhu" a new Tamil weekly, which has hit the news-stand sailing on the crest of a vigorous advertisement campaign, bids fair to become one of the most popular magazines in the field, if the first issue (January 1, 1978) is any indication. Cartoons by Gopulu, a long story by Thamaraimanalan, the first part of a travelogue by Manian on his visit to Sri Lanka, a pilgrimage serial by Pon. Bhaskaramarthandan, Jayakanthan's open letter to Mrs. Indira Gandhi and a piece by 'Subbudu', the most controversial of the present-day music critics—all these and more go to make the maiden number of the journal a treat to different segments of the readership. 'Silpi' has deftly depicted in pleasing colours Goddess Akhilandeswari of Thiruvanaikavil. Manian has promised to write about his mentor, S.S. Vasan, the late editor of 'Ananda Vikatan' the journal with which he has been associated so long. Published by Idhayam Publications, 38-39, Mount Road, Madras-600 032, the new magazine is priced 75 paise.

**ஒரு நூற்றாண்டு வாழும் பத்திரிகையான இந்து இப்படி வாழ்த்துகிறது.**

என்ற வரிகள் முதல்தரமான கதை என்பதை முத்திரையிட்டுக் காட்டு கின்றன.

ஆறகழூர் திரு. மு. கண்ணன் எம்.ஓ.எல்.

தேவி தரிசனம் நல்ல ஆரம்பம். அதற்குச் சில்பியின் படங்கள் உயிர் ஊட்டுகின்றன.

திருநெல்வேலி சி. ஜெயராஜ்

மாணவர் குலம் தழைக்க, செழிக்க, நீங்கள் மாணவர்கட்கு அளிக்கும் திட்டங்கள், சலுகைகள் குறித்து உண்மையாகவே ஆனந்தப்படுகிறேன்.

சேலம்—7. ப. எழிலழகன்.

'இதயம் பேசுகிறது' உங்களைப் போன்ற லட்சக்கணக்கான வாசகர்களைக் கவர்ந்து உங்கள் பத்திரிகையாக இடம் பெற்றிருக்கிறது.

மிக்க நன்றி. வணக்கம்.

மணியன்

## சினிமா விமரிசனம்

ருங்க! எல்லாம் தேவராசி! ஆளு நீங்க இருபது பைசா டிக்கெட்டை வச்சே ஆளுக்கொரு ஆசையிலே பேரைத் தட்டிக்கிட்டுப் போயிட்டீங்களே....

தேவர்: ஆசைப்பட்டதோட ஒரு ஆட்டையும் கூட வச்சிருக்கணும்; ஹாட்டாப் போயிருக்கும்!

ஜெய்சித்ரா: முழுசா அதிலே என்னைப் பேரெடுக்க விடாம முத்துராமன், ...கயாலே கணக்குப் போட்டே கைதட்டல்களை வாங்கிட்டாரே...

ஃ ஃ ஃ

'ஆளுக்கொரு ஆசை' டைரக்டர் எஸ். பி. முத்துராமன்:

கெட்டுப்போற கதையில்லாம கொஞ்சம் மாறுதலுக்கு, சுத்தமா... லேட்டா ஒரு படம் எடுக்கணும்னு ஆசைப்பட்டேன் பரவாயில்லே.



'துன்பமின்றித் துயரின்றி யென்றுநீர்
இன்பம் வேண்டி(ல்) இராப்பக லேத்துமின்,
என்பொன் ஈச னிறைவனென் றுள்கு வார்க்
கன்ப ளுயிடும் ஆனைக்கா வண்ணனே!'

—திருநாவுக்கரசர்

காலங்கள் எங்கே பிறக்கின்றன? ஜகன்மாதாவாகிய அம்பிகையின் கண்களின் அசைவில்தான் காலங்கள் தோன்றி இயங்குகின்றன, என்கிறுர் ஆதிசங்கரர்.

தேவதேவிக்கு மூன்று கண்கள். வலது கண் பகலை உண்டாக்குகிறது. இடது கண் இரவை உண்டாக்குகிறது. இவ்விரண்டு கண்களுக்கும் இடைப்பட்ட மூன்றுவது கண், அக்னி சொரூபமான நெற்றிக் கண். இது, செந்தாமரையின் அழகைக் கொண்டு பகல், இரவு இரண்டுக்கும் நடுவிலுள்ள சந்தியா காலத்தை உருவாக்குகிறது!

காலங்களைத் தன் கண் பார்வையில் சிருஷ்டித்துத் தன் கருணை ஆட்சியால் அண்ட புவனங்களுக்கும் ஈசுவரியாகத் திகழும் அன்னை அகிலாண்டேசுவரிக்கு, மனிதன் சில காலங்களை மட்டும் நிச்சயித்து பூஜை நடத்துவது பேதமையா, இயலாமையா?

உஷக் காலம் - கால சந்தி - உச்சிக் காலம் - சாயரட்சை - ஐந்தாம் காலம் - அர்த்த ஜாமம்.

இவையெல்லாம் அம்பிகையைப் பூஜிக்க, மனிதன் உருவாக்கி வைத்திருக்கும் காலங்கள். அவனுடைய வறிய மனத்தின் வரைகோடுகள்தாம் இந்தக் காலங்கள்!

ஆனல் அன்னையோ சதாசர்வ காலமும் அந்தத் திருத்தலத்தில் கருணையைப் பிரவாகமாக்க தவக் கோலம் பூண்டிருக்கிறுள்.

அகில உலகமும் அவளை நோக்கித் தவம் செய்து கொண்டிருக்கும்போது இவள் எதற்காகத் தவம் இருக்கிறுள்..? பிள்ளையின் வியாதிக்காக அன்னை உபவாசம் இருப்பதில்லையா! பாப சொரூபமான உலகத்தை உய்விக்கத்தான் அன்னை ஞானமுத்திரை தாங்கி அருட்தவம் செய்கிறுள். இது கருணையைப் பெறுவதற்கான தவம் அல்ல; கருணையைத் தருவதற்காக அன்னை கொண்டிருக்கும் தவம். அத்துடன் ஈசனுக்கு ஒரு மாணவியாகவும் திருக்கோலம் தாங்கியிருக்கிறுள் லோகமாதா, அங்கே.

'போகமும், யோகமும் ஒன்றிய நிலையில் இருப்பது எப்படி?' என்று ஒரு கேள்வியை ஈசுவரனிடம் அம்பிகை கேட்டாள். அதற்கு இந்தத் திருவானைக்கா திருத்தலத்தில் அன்னைக்குப் பதிலளிக்கும் பாவனையில் அஞ்ஞான உலகத்துக்கே விளக்கம் தருகிறுர் ஈசன்.

''உலகங்கள் யாவுமே என்னைப் பின்பற்றி என் வழியில் நடக்கின்றன. நடனத்தைப் பிறருக்குக் கற்பிக்க விரும்பும் நடன ஆசிரியன் முதலில் தானே நடனம் ஆடிக் காட்டுவதுபோல், உலகத்திலுள்ள அஞ்ஞான ஜீவன்களுக்கு யோக நிலையையும், போக நிலையையும் பயிற்றுவிக்க நானே அவற்றை முன்மாதிரியாக நடத்திக் காட்ட வேண்டியிருக்கிறது. உலகத்திலுள்ள ஆன்மாக்கள் எல்லாம் போகத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள, நான் முன் மாதிரியாக உன்னை மணந்து போகியாகக் காட்சி அளிக்கிறேன். அதே சமயத்தில் யோகசித்தி பெற்று மெய்ஞ்ஞானத்தை அடைந்து உலக மக்கள் முக்திபெற யோகியாகவும் மாறுகிறேன்'' என்றுர் ஈசன்.

உமாகாந்தனுக - பார்வதிநாதனுக - உலகத்துக்கு முன் ஈசுவரன் போக நாடகம் நடத்துவது மாந்தருக்குப் போக ஞானத்தை - தாம்பத்தியத்திலே வாழ்வின் தத்துவத்தை விளக்கத்தானு?

'காம நாடகமான போகமும், கருணைச் செல்வமான யோகமும் ஒன்றுக்கொன்று எதிரியல்ல. இரண்டும்

பொன்.பாஸ்கர மார்த்தாண்டன்

ஒன்ருேடு ஒன்று இணைந்தவை. இரண்டிலும் நான் இருக்கிறேன்; இரண்டாகவும் நான் இருக்கிறேன்' என்று விளக்கத்தான் லிங்கேஸ்வரனுக திருக்கோலம் பூண்டிருக்கிருனு ஈசுவரன்...?

ஈசனின் எண்ணரிய தத்துவங்களைத் தம் மூலம் விளக்க, தவமாய் - தவத்தின் உட்பொருளாய் ஞானம்பிகையான அன்னை தரிசனம் தந்து கொண்டிருக்கிருள்.

பொங்குமாங் கடலின் சக்தியறியாமல் வெற்றுப் பிரமிப்புடன் கரை ஓரத்தில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் மனிதர்களைப்போல், அருள் என்னும் பெருங்கடலாய்த் தவக் கோலம் பூண்டிருக்கும் அகிலாண்டேசுவரியின் வல்லமைத் திறம் அறிய முடியா பிரமிப்புடன் அஞ்ஞானமாய் பக்தர்கள் அவள் சந்நிதியில் நின்று கொண்டிருக்கிருர்கள்.

ஆயினும் கடல் இயங்குவது மனிதர்களுக்காக. மழையால், அங்கிருக்கும் மறை பொருட்களால் மாந்தரை உய்விக்கிறது கடல்.

மாந்தர்கள் அவளிடம் கேட்டுப் பெறுவதில்லை; வந்து வாங்கிக் கொள்கிருர்கள்.

அதோ, ஆயிரங்கால் மண்டபத்தில் ஒரு மனிதன் - சாது சுவாமி - மனித வாழ்வின் பிரமிப்பான கணக்குப்படி பல அரசாங்க உத்தியோகங்கள் செய்து கைநிறையப் பணம் ஈட்டி, கேரளாவில் வாழ்ந்துவிட்டு, நிறைவு காணு மனத்தோடு எல்லாத் திருத்தலங்களையும்


மிஸ் கங்காஸ் நியமூன்


இனடா


திரு. ராஜாமணி குடும்பத்தினர்

சுற்றிவிட்டுக் கடைசியில் இந்தத் திருவானைக்கா தலத்தில் வந்து கடந்த பதினேரு ஆண்டுகளாக அன்னையின் காலடியில் உட்கார்ந்திருக்கிருர். ''நான் எங்கெங்கோ சுற்றினேன். என் மனசில் எத்தனை எத்தனையோ அலை பாய்ச்சல்.. குழப்பத்தோடு இந்தத் தலத்துக்கு வந்தேன். என் மனசுக்குச் சாந்தி தந்து என்னைத் தன் காலடியில் உட்கார வைத்திருக்கிருள், இந்த அகிலாண்டேசுவரி!'' என்று கரம் கூப்பிக் கண் கலங்கிச் சொல்கிருர்.

இன்னெருவர்..., டோக்கியோவி (ஜப்பான்) லிருந்து இந்தியாவுக்குத் தொழில் நிமித்தம் வந்திருக்கும் இனடா (INADA) என்ற பெயர் கொண்ட அந்த மனிதர் சொல்கிருர். ''நான் இந்து அல்ல. உங்கள் இந்து மதத்தின் கொள்கை, கோட்பாடு எதுவும் எனக்குத் தெரியாது. ஆனல் இந்தக் கோயிலுக்குப் பல முறை என்னையறியாமல் ஏதோ ஒரு சக்தியின் ஈர்ப்பால் வந்து கொண்டிருக்கிறேன். என்கிருர்.

தில்லை நகரிலிருந்து வாராவாரம் தேவியைத் தேடிவரும் ஒரு பக்தர்— திரு. ராஜாமணி, தன் மனைவி ராதாவுடனும், மக்களுடனும் அன்னையை வழிபட்டுக் கொண்டே சொல்கிருர்: ''நான் அகிலாண்டேசுவரியிடம் எதுவும் கேட்பதில்லை. ஆனு இங்கு வந்துட்டுப் போனு எனக்கு எல்லாம் நடக்கிறது. என் அம்மை எனக்கு ஒரு குறையும் வைக்கலை. அவளை இங்கே வந்து பார்த்துட்டுப் போனலே ஒரு நிம்மதி...''

மிஸ் கங்காஸ் சிய்யஜஸ் என்ற பிரெஞ்சு நாட்டுப் பெண்மணி, அன்னையின் சந்நிதியில் வந்து நிற்பதால், தனக்கு ஏற்படும் பரவசத்தை விளக்க முடியாமல், ''இங்கே சும்மா வேடிக்கை பார்க்கத்தான் வந்தேன். ஆனா இப்போ உள்ளே போய்க் கையெடுத்துக் கும்பிடணும்னு தோணுது!'' என்கிருள்.

இவர்களெல்லாம் பேசப் பேச நாம் பிரமிக்கிறோம். செம்புக் கம்பிக்குள் மின்சாரம் பாய்வதுபோல், நேற்றும் புரியாமல், இன்றும் உணராமல், நாளையை அறியாமல் அஞ்ஞான உருவங்களாக நடமாடும் மனித உள்ளங்களுக்குள் மெய்ஞ்ஞானச் சுடராய் ஒளி விடும் அந்த லோக நாயகியை, அவர்களுடைய ஒவ்வொரு சொல்லிலும் தரிசித்து மெய் சிலிர்க்கிறோம்.

இப்படி எண்ணற்ற மனிதர்களை மட்டிலுமா இறைவன் சமேதரான இறைவி ஆட்கொண்டிருக்கிருள், இத் தலத்தில்...? ஐந்தறிவு கொண்ட ஜீவன்களையும் கூட...,

அன்று, பல யுகங்களுக்குமுன்...

வெண்நாவல் மரங்கள் அடர்ந்த வனமாக அந்தத் தலம் அமைந்திருந்தது. இதிகாச காலத்தில் நடந்த அந்தச் சம்பவம் நம் கண்முன் தோன்றுகிறது.

ஜம்பு முனிவர் வேண்டிக் கேட்டுக் கொண்டபடி, அவர் உண்ட (இறைவன் உமிழ்ந்த) நாவல் கொட்டையிலிருந்து அவர் உடம்பிலே முளைத்த நாவல் மரத்தின் அடியில் பரம்



பொருளான ஈசன், அந்தத் தலத்தில் ஜம்புகேஸ்வரராக அமர்ந்திருந்தார்.

அப்போது அருகிலிருந்த சுவேத மலையிலிருந்து வெளிப்பட்ட யானை ஒன்று இறைவனைக் காணும் பாக்கியம் பெற்றது. பூர்வஜென்ம பாக்கியத்தால் அந்த வினடிமுதல் மெய்ஞ்ஞானச் சுடரொளி பெற்று இறைவனைப் பூஜிக்கத் தொடங்கியது. யானை. காவிரியிலிருந்து தன் துதிக்கையில் நீரைச் சேந்திவந்து இறைவனுக்கு அபிஷேகம் செய்யும். பின் மலர்களையும், காய்கனிகளையும் பறித்துவந்து நிவேதனமாகப் படைத்துப் பூஜை செய்யும். கண்ணப்பர் தனக்குத் தெரிந்த புலால் உணவால் இறைவனைப் பூஜித்ததைப் போல்!

இந்த யானை பூஜை நடந்து கொண்டிருக்கும்போது, ஒரு சிலந்திக்கும் இந்த சிவபூஜைப் பேறு சித்தித்தது. அதுவும் தன் சக்திக்கு எட்டிய முறையில் இறைவனைப் பூஜிக்கத் தொடங்கியது. அதாவது தன் வாய் நூல் கொண்டு ஈசனுக்கு அழகிய நூல் பந்தல் அமைத்து, நாவல் மரத்தின் சருகுகள் சிவலிங்கத்தின் மீது விழாது பாதுகாத்தலையே தன் சிவபூஜைப் பணியாக மேற்கொண்டது சிலந்தி.

யானையும், சிலந்தியும் இறைவனை வழிபட்ட முறை, இறைவன் நமக்குத் தரும் ஒரு பூஜை விளக்கமாகத் தெரியவில்லையா? 'மாந்தர்களே, ஆடம்பர பூஜைகள் செய்து வணங்கவேண்டியதில்லை. உங்கள் சக்திக்கேற்ப என்னை வணங்குங்கள். வேண்டுதல் - வேண்டாமை இலானுகிய நான் உங்கள் விருப்பத்தினுள் அடக்கமாக அமைந்து அருள் புரிவேன்' என்று சொல்லாமல் சொல்வது போல் இல்லையா? ஒரு கண்ணப்பர்- ஒரு யானை- ஒரு சிலந்தி- இவர்கள் உணர்த்துகிருர்கள்.

அந்த யானைக்கும், சிலந்திக்கும் இறைவன் திருவிளையாட்டால் திடீரென்று சண்டை மூண்டுவிட்டது. பாவம் முற்றினுல்தான் பகை என்பதில்லை. பக்தி முற்றினுலும் அது ஏற்படும்.

பூஜை செய்ய வந்த யானை, திடீரென்று சிவலிங்கத்துக்கு மேல் பந்தலாகக் கவிந்திருந்த சிலந்தி வலையைக் கண்டதும் ஆத்திரம் கொண்டு,

'இறைவன் அருகே அசுத்த மாக சிலந்தி வலையா?' என்று தன் துதிக்கையால் அதைக் கலைத்துவிட்டு, அந்த 'அசுத்தக் கறை' பட்ட துதிக்கையைக் கழுவ நதிக்குச் சென்றது. தன் வலையை யானை கலைத்ததைக் கண்டு ஆத்திரமடைந்த சிலந்தி கோபம் கொண்டு யானையைத் தண்டிக்கக் கிளம்பியது. நீராடிக் கொண்டிருந்த யானையின் துதிக்கைத் துவாரத்தினுள் புகுந்து தலைப்பகுதியில் உயிர்நிலையான இடத்தில் கடித்தது. யானை அந்த இடத்திலேயே விழுந்து துடித்து மாண்டது. துதிக்கையின் உள்ளிருந்து வெளிவர முடியாமல் சிலந்தியும், யானையுடன் மாண்டது.

இப்படி விநோதமாக இந்த இரு ஜீவன்களின் பூத உடல் வாழ்வையும் முடித்த வெண்ணாவல் மரத்தடியில் அமர்ந்த வித்தகன், அவர்களுக்கு உமையொரு பாகனைக் காட்சி தந்தான். யானைக்கு அக்கணமே முக்தி கிடைத்தது. இறைவனுக்குப் பந்தல் அமைத்து நிறைவுற்ற சிலந்திக்கு இன்னொரு

## அடுத்த இதழில்

## சங்கீத விமரிசகர் மீது வழக்கு...

ஜென்மம் அளித்து, சோழ மன்னன் கோச்செங்கண்ணனை மறுபிறப்பு எடுக்க அருள் வரம் தந்தான் ஈசன். அவன் எழுபது சிவாலயங்களும், ஐந்து விஷ்ணு தலங்களும் அமைத்துப் புகழ்பெற்றான்.

யானை மீதுள்ள முற்பிறப்புப் பகை உணர்வால், இவன் கட்டிய ஆலயங்கள் அனைத்திலுமே, யானை நுழைய முடியா வாசல்களை அமைத்தான்! ஆனைக்கு இறைவன் முக்தி அளித்ததால் அப்பெயர் பெற்ற இந்தத் திருவானைக்கா திருத்தலத்தில் அவன் கட்டியுள்ள கோயில் கூட யானை நுழையா வாயில் கொண்டதுதான்!

தவப் பெருமை மிக்க இத்தலத்தின் பெருமை நம்மை மெய்சிலிர்க்க வைக்கிறது. ஆனையும் சிலந்தியும் சிவபூஜை செய்து, முக்தி பெற்றது. அறியா அஞ்ஞானம் கொண்ட அகிலம் முழுவதும் தொழுது முக்திபெற அன்னையே அவர்களுக்காகத் தவம் செய்து தினம் தினம் சிவ பூஜை செய்கிறாள்!

ஆம்; நித்தம் நித்தம் இறைவனை அன்னை உமையவள் வணங்கி பூஜை செய்யும் காட்சி தினம்தோறும் ஒரு மகத்துவம் மிக்க சம்பிரதாயமாக, ஊனக் கண்களுக்குக் காட்சியாக நடைபெறுகிறது, இத்தலத்தில்.

பகல் 11 மணிக்கு நிகழும் உச்சிக் கால பூஜையில், இந்த இறைவியின் சிவ பூஜை ஒரு சக்தி மிக்க சம்பவம்.

அதோ, இறைவியின் அந்த மகிமை பெற்ற சிவபூஜையைக் காண பக்தர் கூட்டம் திரள்கிறது.

அன்னை அந்தப் பூஜைக்குத் தயாராகிறாள்.

திருமகள் - உமையவள் - சரஸ்வதி ஆகிய முப்பெரும் தேவி உருவங்களையும் தன் உருவிலேயே கொண்ட அகிலாண்டேசுவரி, காலையில் நன் தாமரைப்பூ பீடத்தில் திருமகளாகக் கோலம் கொண்டிருப்பாள். இப்போது உச்சிக் காலத்தில் செந்நிற ஆடை பூண்டு சிவ பூஜை செய்யும் கௌரியாக - ராஜராஜேசுவரியாக கோலம் கொண்டிருக்கிறாள்.

இன்னும் சில விநாடிகளில் அன்னை எழுந்தருளி சிவபூஜை செய்ய ஜம்புகேசுவரர் சந்நிதிக்குச் செல்வாள். அவளுடன் செல்ல, அதோ மேள தாளங்கள், பரிவாரங்கள், சுருட்டி, குடை எல்லாம் தயாராகின்றன. இறைவனும் இறைவியும் சந்திக்கப் போகும் கோலக் காட்சி காண பக்தர்கள் அணி திரளுகிறார்கள். நாதன் சந்நிதிக்கு அன்னையை அழைத்துச் செல்ல யானை சந்நிதி வாசலுக்கு வருகிறது.

(தொடரும்)

இவ்விதழில் வெளியான கதைகள் கற்பனையே. கதைகள், கட்டுரைகள், ஆகியவற்றைத் தபாலிலும் அனுப்பலாம்; நேரிலும் பெற்றுக்கொள்ளப்படும்.
கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர் ப. அன்னமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
முகவரி: 44-A, மௌண்ட் ரோட், கிண்டி, சென்னை-600 032.

குழுவுக்கு என்னை உறுப்பினராக்க முயன்றனர். அப்போது நான் அவர்களிடம் என்னால் அதிக அளவுக்குப் படம் பார்க்க முடியாது என்று கூறி மறுத்துவிட்டேன்.

○ இப்போதும் அதே காரணத்தைத் தான் சொன்னேன். 'சினிமா சம்பந்தமில்லாத அதிகம் படம் பார்க்காத நபர்தான் தேவை.' நீங்கள் ஒத்துக் கொள்ளுங்கள் என்றார்கள். நான் ஏற்றுக்கொண்டேன்.

○ பிராந்தியக் குழுவினர் அனுமதிக்க மறுக்கும் படங்கள் எங்களது மேல் முறையீட்டுக்கு வரும். மலையாளத்தில் ஒன்றும், தமிழில் 'வாழ்த்துவோம்' என்ற படமும், தெலுங்கில் 'நாயுடு பாவா' படத்தையும் பார்த்தேன்.

○ படம் பார்த்த உறுப்பினர்கள், 'இது அந்தப் படத்தில் வந்தது... இது இந்தப் படத்தில் வந்தது' என்றெல்லாம் சொல்லிக்கொண்டே வந்தார்கள். எனக்கு என்ன தெரியும்? ஒரு சில நடிக—நடிகையரையே எனக்குத் தெரியவில்லை. பேசாமல் வாய்மூடி மவுனமாய் இருந்தேன்.

○ மற்றவர்கள் என் வைதீகத் தோற்றத்தைப் (குடுமி—விபூதி—வேஷ்டி) பற்றி என்ன நினைப்பார்களோ? ஆனால் அவர்களுக்காக நான், அவற்றை விட்டுவிடத் தயாராய் இல்லை. கொள்கையை விட்டுக்கொடுக்காத தன்மைக்கு நிச்சயம் மதிப்பு இருக்கிறது என்பதை லண்டன் போன்ற நாடுகளுக்குச் சென்றபோது உணர்ந்து கொண்டேன்.

பேட்டி : பாவை சந்திரன்

---

வர்கள் தெள்ளத் தெளியக் கூறினார்கள்.

அடுத்ததாக, அவர்கள் அனுபவித்த உணர்வுகள் அமைதியும், நிம்மதியும், மகிழ்வும்தான்.

தலைக் காயத்தில் நினைவிழந்த ஒருவர் பின்னால் கூறினார்: ''ஒரு கணம் பலத்த வலி தெரிந்தது. அடுத்து வலி அடியோடு இல்லை. எங்கோ இருட்டில் மிதக்கிறேன். உடம்பெல்லாம் கதகதப்பாக இருக்கிறது. சுகமான இதமான உணர்வில் இருக்கிறேன்.''

ஒரு பெண்மணி கூறுகிறார்: ''என் துன்பமெல்லாம் - கஷ்டமெல்லாம் போய்விட்டதைப்போல் உணர்ந்தேன். ஒரு அமைதி - ஒரு நிம்மதி என்னை ஆட்கொண்டது.''

வியட்நாம் போரில் 'இறந்த' ஒருவர் கூறுகிறார்: ''ஒரு விடுதலை பெற்ற உணர்வு. வலியெல்லாம் போய்விட்டது. களைப்பு நீங்கிய நிலை. எல்லாம் எங்கும் சுகமாக இருப்பதுபோன்ற உணர்வு.''

அவர்கள் அனுபவித்த மற்றோர் உணர்வு காதில் ஏற்பட்ட ஒரு தொடர்ந்த ரீங்காரம். அலைஓசை போல தொடர்ந்த மணி நாதம் போல...காதில் ஒலித்ததாக்கூறினார்கள். ஒரு பெண்மணி, ''ஒரு அற்புதமான இசையைக் கேட்டேன். மிக இனிமையான இசை; ராஜ கம்பீரம் கொண்ட இசை என் காதில் ஒலித்தது'' என்கிறார்.

அடுத்தடுத்து மேலும் அவர்களது அனுபவங்களையும் அதனால் ஏற்பட்ட பலன்களையும் காண்போம்.

# தேவி தரிசனம்

பொன். பாஸ்கர மார்த்தாண்டன்

5

## அகிலம் ஆண்ட அருள் நாயகி

'தாரமாய மாதராள் தானோர்பாக மாயினான்
ஈரமாய புன்சடை ஏற்றதிங்கள் சூடினான்
ஆரமாய மார்புடை யானைக்காவி லண்ணலை
வாரமாய் வணங்குவார் வல்வினைகள் மாயுமே!'

—திருஞானசம்பந்தர்

மிஞ்சிப் போனால் அந்த இளைஞருக்கு இருபது வயது இருக்கும். உச்சி முதல் உள்ளங்கால்வரை நவீன சமூகத்தின் நாகரீகக் கோலங்கள். பேண்ட், பூப்பூவாகப் போட்ட ஷர்ட், பிடறிவரை வளர்க்கப்பட்ட தலைமுடி, மீசை. அவர் இன்றைய இளைய தலைமுறையின் பிரதிநிதி.

அவர் எதிர்ப்படும் ஆண்-பெண் எவர் மீதும் கவனத்தை அலைபாய விடாமல் மெய் மறந்த கண்களுடன் அன்னை




அகிலாண்டேசுவரியின் சந்நிதியைச் சுற்றிப் பிரதட்சணம் வருவதும்-பரிவாரத் தேவதைகள் எதிரே பக்தி ஒழுக நின்று வணங்குவதும்..... அவருடைய உருவத்துக்குப் புதுமையான அந்தப் பக்தி உருக்கத்தைக் கண்டு நம்மால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல்....

''தம்பி, உங்க பேரு?''

''மோகன்!''

''உள்ளூர் தானா?''

''இல்லே, திருச்சி தென்னூர்..... ராமச்சந்திரபுரம் செட்டியார் பங்களா விலே இருக்கிறேன். அப்பா பேர் ராமச்சந்திரன்.''

''இந்தக் கோயிலுக்கு அடிக்கடி வருவதுண்டோ?''

திடீரென்று ஏதோ ஓர் அணை உடைபடுவதுபோல் வார்த்தைகளில் வேகம்....

''இந்தக் கோயிலுக்கு வரக் குடுத்து வச்சிருக்கணும்ங்க. அகிலாண்டேசுவரி அம்மா பார்வை நம்ம மேலே பட்டுட்டா நடக்காதது நடக்கும்ங்க...... கேட்ட தெல்லாம் அந்தத் தாய் தர்ரா... எனக்குத் தெரிஞ்சு ஒரு ஆட்டோ ரிக்‌ஷா டிரைவர் ரொம்ப காலம்



ஆர்வம்மிக்க பக்தர் கூட்டம்

கஷ்டப்பட்டு சொந்தமா ஒரு ஆட்டோ ரிக்ஷா வாங்கறதுக்குப் பெரும் முயற்சி செய்தார். நடக்கலே. அம்மாகிட்டே வேண்டிக்கிட்டு ஒரு மண்டலம் - ஏழு வெள்ளிக்கிழமை கோயிலுக்கு வந்தார். ஏழாவது வாரம், ஆட்டோ ரிக்ஷா வாங்கிட்டார். இன்னொருத்தர்... என் சிநேகிதன். சுகுமார்னு பேர். பி.காம்., படிச்சுட்டு வேலை கிடைக்காம எங்கெல்லாமோ மனுப் போட்டு, இன்டர்வியூவுக்கு அலைஞ்சு களைச்சுட்டான். கடைசியில் அதே மாதிரி ஏழு வெள்ளிக்கிழமை தொடர்ந்து வந்து இந்த அம்மாவைக் கும்பிட்டான். சரியா ஏழாவது வாரம் கனரா பாங்கில் வேலை கிடைச்சுட்டுது. எனக்கும் வேலை இல்லை.... நானும் மண்டல விரதம் எடுத்துகிட்டு ஆறு வாரம் சுத்தினேன். ஏழாவது வாரம்.... என் விதி கோயிலுக்கு வரமுடியலை... வேற ஒரு வேலையா வெளியூர் போயிட்டேன். வேலை கிடைக்கலை... இப்ப பழையபடியும் சுத்த ஆரம்பிச்சிருக்கேன். இந்தத் தடவை நிச்சயம் ஏழு வாரமும் கோயிலுக்கு விடாம தொடர்ந்து வருவேன்... அம்மா கட்டாயம் வழி காட்டுவா....'' -அவர் கண்களில் கண்ணீர். ஆதங்கம்.. தவிப்பு...தாகம்...

லோகாயத பூச்சிதான் மனிதன். லோகமாதாவைப் பற்றிக்கொள்ள இப்படிப்பட்ட நம்பிக்கைக் கயிறுகளை அன்னையே மனிதர்கள் மத்தியில் பின்னிப் போட்டிருக்கிறாள். அவர் வணங்குவது சுயநலமாகவே இருக்கட்டுமே....! என்ன தப்பு? தாயிடம் பிள்ளை பாலுக்காகத்தான் அழுகிறது. அது அந்தக் குழந்தையின் தேவை. அந்தத் தாய் அந்த அழுகைக்காகத்தான் காத்திருக்கிறாள். சுயநலமாகப் பாலுக்காகத் தானே அழுகிறது என்று அன்னை ஒதுக்குவதில்லை. குழந்தையை அரவணைத்துக் கொள்ளத்தான் செய்கிறாள்... அதற்காகவே இருகரம் நீட்டிக் காத்திருக்கிறாள்.

அன்னை அகிலாண்டேசுவரியும் அப்படித்தான். அகில புவனங்களின் ஜீவராசிகளையும் அணைத்துக் கொள்ளத்தான் காத்திருக்கிறாள். அவர்கள் வேலை தேடிக் கேட்டாலும் சரி... வியாதிக்கு மருந்து வேண்டும் என்று கேட்டாலும் சரி. ஏனென்றால் அவள் தாய்... லோகமாதா.

அந்த லோகநாயகிதான் எத்தனை எத்தனை விதமான பக்திகளை.... பூஜைகளை, தவங்களை அந்தத் தலத்தில்

சந்தித்துக் கொண்டிருக்கிறாள்!

இன்று ஒரு மோகன்.....

நேற்று - அதாவது சில நூற்றாண்டுகளுக்கு முன், தாயுமான சுவாமிகள்—திருச்சிராப்பள்ளியைத் தலைநகராகக் கொண்டு அரசாண்ட தென்னாட்டு மன்னன் விஜயரெங்கநாத நாயகரிடம் அமைச்சராக இருந்தபோது நிகழ்ந்த சம்பவம் ஒன்று.....

விலையுயர்ந்த பட்டுச் சால்வை ஒன்றை அந்த மன்னன், அமைச்சரான தாயுமானவருக்கு பரிசளித்தான். அதைப் போர்த்திக் கொண்டவராக தாயுமானவர் மன்னருடன் அரண்மனை வாசற்புரத்துக்கு வந்தார். அப்போது அரண்மனைவாசலில் ஒரு பிச்சைக்காரக் கிழவி கந்தல் உடையுடன் குளிரில் நடுங்கிக் கொண்டு நின்றாள். அதை மன்னரும் தாயுமானவரும் பார்த்தார்கள். மறுகணம் தாயுமானவர் தனக்கு மன்னன் போர்த்திய அந்த உயர்ந்த பட்டாடையை மன்னன் கண்முன்னே கிழவிக்குப் போர்த்தினார். மன்னனுக்கு அமைச்சர் மீது கோபம். 'நாம் அளித்த விலையுயர்ந்த பரிசை ஒரு கிழவிக்குத் தந்து அவமானப்படுத்தி விட்டாரே!' என்று. இருப்பினும் காட்டிக் கொள்ள முடியாத சூழ்நிலை.

அன்று மாலை அரசனுக்கு ஓர் அதிர்ச்சி காத்திருந்தது. தன் மனைவியுடன் திருவானைக்கா அகிலாண்டேசுவரி கோயிலுக்கு அன்னையை வணங்கச் சென்றபோது அவன் கண்ட காட்சி... அங்கே ராஜராஜேசுவரியான அம்பாளின் திருமேனியில் அந்தப் பட்டுச் சால்வை இருந்தது!

கிழவியாக வந்தவள் அம்பிகைதான்!

'ஏழைகளுக்குச் செய்யும் பணியே இறைவன் பணி' என்று உலகுக்கு உணர்த்த அந்த தேவ லீலையை நடத்திக் காட்டினாளோ, தேவதேவி?

இன்னுமொரு நிகழ்ச்சி. அதே திருவானைக்கா தலத்தில்... இது உமையவரும், மகேசுவரனும் வேத காலத்தில் நிகழ்த்திய விளையாட்டு.

தான் படைத்த பெண்ணின் மீது மோகம் கொண்ட பாவத்தைத் தீர்க்க, பிரமன் குற்றவாளியாய் அங்கே தவம் செய்தான். பாபவிமோசனம் பெறும் பக்குவ ஞான நிலையை அவன் திரும்பவும் பெற்றுவிட்டானா என்று சோதிக்க, இறைவனும் இறைவியும் மாற்று வேடத்தில் காட்சி தந்தனர். அதாவது, ஈசன் பெண்ணுருகொண்டு பார்வதியைப் போலவும்; பார்வதி தேவி, பரமேசுவரனைப் போலவும் உருமாறிப் பிரமன் முன் தோன்றினர். அருந்தவத்தால் தன் மனக் குழப்பம் நீங்கியிருந்த பிரமன் அவர்களை இனம்கண்டு தொழுது பாப விமோசனம் பெற்றான்.

இந்த நிகழ்ச்சியின் நினைவு இத் திருவானைக்கா தலத்தில் சிறப்பு மிக்க உற்சவமாகக் கொண்டாடப் பெறுகிறது. அதுதான் மாசி மாதம் தொடங்கி 48 நாட்கள் நடக்கும் பஞ்சப் பிரகாரத் திருவிழா.

பிரமதேவன் முதல் மோகன் போன்ற மனிதர்களோடு, யானை-சிலந்தி ஆகிய உயிரினங்களும் தம்மை நோக்கித் தவம் செய்து பயனடைந்த அந்தத் திருத்தலத்தில் அம்மை உமையவளே, நித்தியத் தவம் செய்து சிவபூஜை செய்கிறாள்.

அங்கே, ஆறு காலங்கள் அன்னைக்குப் பூஜை நடக்கின்றன. ஆனால் அன்னை செய்யும் அந்தப் பூஜைதான் கால காலங்களுக்கும் யுகயுகாந்திரங்களுக்கும் நின்று கல்ப கோடி ஜீவராசிகளுக்கு ஆத்ம ஒளியாகத் திகழ்கிறது.

உச்சிக்காலத்தில் அன்னை செய்யும் அந்த சிவ பூஜையைத் தரிசித்து சித்தி பெறக் கூடும் மாந்தர் கூட்டம்...

அதோ...

திருக்கோயிலில் அன்னையின் சந்நிதியே அருளொளியாய்த் திகழ்கிறது. எங்கு பார்த்தாலும் மனிதர்கள்.. மனிதர்கள், மனிதர்கள்...

அம்மையின் கருவறைத் திருக்கதவம் திறக்கிறது....

சர்வாலங்கார பூஷணியாக சக்திதேவி சுடர் விடுகிறாள். தலையிலே கிரீடம். காதில் ஸ்ரீசக்கர தாடங்கங்கள். நான்கு கரங்களிலும் கிளி-அஸ்தங்கள்.. தாமரை மலர். மேனியெங்கும் தங்கக் கவசங்கள். மார்புக் கவசம் - வஸ்திரக் கவசம் - பாதக் கவசம்..... எண்ணி மாளாத ஆபரணங்கள், எழுதிமாளாத அலங்காரங்கள்... செந்நிற ஆடை அணிந்த கௌரியாக கண்களில் அருள் ஒளி மின்ன தேஜோமயமாக ஜொலிக்கும் அன்னைக்கு தீபாராதனை நிகழ்கிறது.

மக்களின் நமாவளிக் குரல் பக்திப் பேரலையாக ஆர்ப்பரிக்க அன்னை புறப்படுகிறாள்...

அன்னையின் உருவில் பூஜை முறை 'பண்டிதர்' (அர்ச்சகர்) பெண்மைக்

கோலம் பூண்டு கருவறையை விட்டு ஜம்புகேசுவரர் சந்நிதிக்குப் புறப்படுகிறாள்.

தலையில் பட்டுப்பாகை... கழுத்தில் ருத்ராட்சம்... கையில் பூஜை செய்ய அபிஷேகக் கலசம் (திரித்தல சொம்பு), மேனியில் செந்நிறப் புடவை...

அவர் உருவில் அன்னை அகிலாண் டேசுவரியையே தரிசிக்கும் மக்கள் கூட்டத்தின் பரவசம் பேரின்ப நுகர்ச் சியாய் மணக்கிறது...

உள்துறை ஊழியர்களில் ஒருவர் குடை பிடிக்க, இன்னொருவர் சுருட்டி என்னும் அருள் சின்னத்தை ஏந்தி முன்வர, மேளதாளங்கள் முழங்க அன்னை புறப்பட்டு மூன்றும் பிரகாரத் துக்கு வருகிறாள்.

அங்கே அவளுக்காகக் காத்து நிற்கும் யானை, மேளதாள பரிவாரங் களுடன் அன்னை, ஜம்புகேசுவரரின் திருச்சந்நிதியை நோக்கிப் பிரதட்சண மாக வருகிறாள்....

ஜம்புகேசுவரர் சந்நிதியில் காத்து நிற்கும் பக்தர் கூட்டம், அம்பிகையைக் கண்ட பேருவகையில் ஆர்ப்பரிக்கின்றது.

''தாயே, லோக மாதா! ராஜ ராஜேசுவரி....!'' —எங்கும் பக்திப் பெருங்குரல்கள் ஒலிக்கின்றன.

இரண்டாம் பிரகாரத்துக்குள் அன்னை நுழைகிறாள். யானையும் பரிவாரங்களும் அங்கேயே நின்றுவிடுகின்றன.

ஆம்! இப்போது உலகாளும் எம் அம்மை, தன்னை ஆளும் மகேசுவரனைத் தனிமையில் தன்னடக்கத்துடன் தரிசித் துப் பூஜை செய்து ஆத்ம ஒளி பெறப் போகிறாள்..... அதனால்தான் தன் ஆர்ப்பாட்ட பரிவாரங்களை வெளியில் நிறுத்திவிட்டு, அவள் மட்டும் இறைவன் சந்நிதிக்குள் நுழைகிறாள்.

இரண்டாம் பிரகாரத்தைத் தாண்டி- இறைவன் அந்த பஞ்சபூத தலத்தில் அப்புலிங்கமாக - ஜல சொருபமாக அமர்ந்திருக்கும் கருவறை இடம் பெற்றிருக்கும் முதல் பிரகாரத்துக்குள் நுழைகிறாள்.

முதல் பிரகாரக் கதவு சாத்தப் படுகிறது. அன்னையும், ஈசனும்



மோகன்



தவப் பிணைப்பில் சந்திக்கும் தனிமைப் பெரும் நிகழ்ச்சி அது....

அணுவுக்குள் சக்தியாய், அருள் மாந்தர் உள்ளத்துள் தீபமாய், தீபத்துள் ஒளியாய், தவத்துள் பலனாய், வேதத் துள் பொருளாய், ஞானத்துள் சீலமாய், பக்திக்குள் கருணையாய் எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி நிறைந்திருக்கும் ஈசனும் — அந்த ஈசனுக்குள் சக்தியாய் இரண்டறக் கலந்து நிற்கும் எம் அம்மை உமைய வளும் தனித்திருக்கும் அந்த அரும் பேற்றால், அந்த வினாடியில் அகிலம் யாவும் ஜீவசக்திப் பெற்று உய்கின்றன.

மூடியிருந்த முதல் பிரகாரக் கதவு திறக்கின்றன...

ஈசன் ஜம்புகேசுவரருக்கு நவத் துவார வாசலில் நின்று அன்னை தீபாராதனைக் காட்டி பூஜை செய்யும் காட்சியை பக்தர்கள் தரிசிக்கும் பாக்கியம் பெறுகின்றனர்.

அந்தத் தலத்தில் விசேடமாக அமையப் பெற்றுள்ள நவத்துவாரத்தின் வழியாக இறைவனை வழிபடுவதுதான் பெரும் பயனாகும். அந்த நவத் துவாரங்கள் (ஒன்பது துவாரம்) வழியே ஈசனை நோக்கி வழிபட்டால், புனிதமான நவதீர்த்தங்களில் நீராடிய பலனைப் பெறுவதாக ஐதீகம்.

மூலவரான ஜம்புகேசுவரருக்கு தீபாராதனைப் பூஜையை நிறைவேற் றியதும், உற்சவரான நடராஜருக்கு தீபாராதனை செய்துவிட்டு அன்னை தன் சந்நிதி நோக்கிப் புறப்படுகிறாள்.

அன்னை இரண்டாம் பிரகாரத்துக்குத் திரும்பி வரும்போது அவருக்காகக் காராம்பசு காத்து நிற்கிறது.

அக் காராம்பசுவுக்குக் 'கோபூஜை' செய்கிறாள் கைலாயநாயகி.

'கோபூஜை' முடிந்ததும் யானை முதலான பரிவாரத் துணை சேர்ந்து சிவபூஜை முடித்து, தவப் பலனைப் புதுப்பித்த அன்னை அகிலாண்டேசுவரி தன் கருவறைக்குச் செல்கிறாள்.

நாதனைக் கண்டு ஞானப் பொலிவு பெற்ற அன்னையின் சந்நிதியில் ஆராதனை தனைகள் - அர்ச்சனைகள் தொடரு கின்றன. பேரொளியாய் கருணையைப் பொழிந்து கொண்டிருக்கிறாள் தேவதேவி....




புரியாத ஒரு புதிருடன் அன்னையின் திருச்சந்நிதியில் மெய்மறந்து நின்று கொண்டிருக்கிறோம்.

மோகன் போன்ற மாந்தர் எல்லாம்- உலகியல் வாழ்க்கைச் சுமை என்ற தம் பாரம் தீர பூஜை செய்கின்றனர்.

பிரம்மாதி தேவர்கள் எல்லாம் தம் பாவம் தீர அங்கு தவபூஜை செய்தனர்.

ஆனால் பரமநாயகியான அகிலாண் டேசுவரி எதற்காகப் பூஜை செய்கிறாள்?

விடை காணமுடியாத அஞ்ஞானமாய் நின்றுகொண்டிருக்கிறோம்.

அப்போது விடையொருபாகனின் திருநாயகியான அம்பிகை உமையவளின் முகத்தில் ஜோதிமின்னலாக ஒரு புன்னகை! அந்தப் புன்னகை ஒளியில் நம் அஞ்ஞானம் அறுகிறது.

லோகம்-தன் உலகியல் பாரம் தீரவும், பாவம் தீரவும் தவம் பூணுகிறது.

ஆனால் அன்னையோ அந்த லோகமாந் தரின் ஆன்மபாரங்களும், பாவங்களும் தீர அருட்தவம் கொண்டிருக்கிறாள்!

பொய்மை, கயமை எனும் புன்மைப் பாவங்கள் எல்லாம் மாந்தரின் ஆன்மாவுக்குப் பாரமாகி அவர்களைக் கடைத்தேறவொட்டாமல் அழித்து விடும் அவலத்தை நீக்க, அன்னை மகேஸ்வரி செய்யும் ஆத்ம தவம் அது. புவிமாந்தரின் புன்மைப் பிறப்பறுக்க அந்தப் பொன்னிவள திருத்தலத்தில் அன்னை புவனேசுவரி கனிவாய், கருணையாய், அருளாய்த் தவக்கோலம் கொண்டிருக்கிறாள்.

அதோ! அருள் சிந்தும் அவள் புன்னகையில் ஜீவன்களின் முக்தி ஒளி தெரிகிறது.

அந்த ஒளியில் அண்டகோடி ஜீவன்களும் ஓடுகின்றன; ஆடுகின்றன; கரங்கூப்பிக் கைதொட்டு கண்ணீர்மல்கப் பாடுகின்றன.

முப்பெருந்தேவியாம் மலைமகளும் திருமகளும் கலைமகளும் ஒருருவாய்— மூவுலகையும் தம் நாற்கரத்துள் அடக்கி, பிரணவம் என்னும் ஐந்தெழுத்தைத் தன் அருளுக்குள் ஒடுக்கி, ராஜராஜேசு வரியாய், புவனேசுவரியாய், அகிலாண் டேசுவரியாய் அமர்ந்த எம் தாயே... தவப் பேறே! எம் ஊனுகி உயிராகி அதனுள் நின்ற உணர்வாகி, நாங்கள் கடைத்தேற வழியாகி ஒளியாகி நிற்கும் அன்னையே! உன்னையல்லால், பேதையாம் எமைக் காக்க பின்னேயும் ஒருவர் உண்டோ? உள்ளும் புறமுமாய் எமைத் தாக்கும் உற்பாதங்கள் நீங்க, உன் பொற்பாதக் கமலங்களைப் பற்றினோம்.. பற்றினோம்.... பற்றினோம்... எமைக் கைப்பற்றிக் கடைத்தேற்றுவாய் எம் கைலாயநாயகியே... ஜகத்ஜனனி!

(தேவி தரிசனம் தொடரின் முதல் பகுதியான 'அகிலம் ஆண்ட அருள் நாயகி' நிறைவு பெறுகிறது. அடுத்த இதழில், ஸ்ரீவில்லிபுத்தூர் பாவைநாச்சியாரான ஆண்டாளின் அருள் தரிசனம் பெறச் செல்வோம்)

(தேவிதரிசனம் தொடரும்)

இவ்விதழில் வெளியான கதைகள் கற்பனையே. கதைகள், கட்டுரைகள், ஆகியவற்றைத் தபாலிலும் அனுப்பலாம்; நேரிலும் பெற்றுக்கொள்ளப்படும்.
கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர் ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
முகவரி: 44-A, மௌண்ட் ரோட், கிண்டி, சென்னை-600 032.



அருள்மிகு ஆண்டாள்—ஸ்ரீவில்லிப்புத்தூர்

ஓவியமேதை சில்பி இதயம் பேசுகிறது இதழுக்காகப் பிரத்தியேகமாக வரைந்தது

Registered No. TN/MS (s) 144
மலேசியாவில் விமானப் பதிப்பு 60 காசு











'இதயச் சுரங்கம்' நாவலைப்பற்றி வந்திருந்த கடிதங்களில், அநேகம் இளம் பெண்கள் தங்கள் கண்ணீர்க் கதைகளையே கொட்டி இருக்கிறார்கள். கதையில் வருவதுபோல, கமலாவும் ஜயந்தியும் கலாவும் மங்களமுமாகத் தமிழ்நாட்டில் ஏகப்பட்ட பெண்கள். கல்யாணம் செய்துகொள்வதில் ஏராளமான பிரச்னைகள்! சங்கடங்கள்! அவற்றில் எல்லாவற்றுக்கும் மேலே தலைதூக்கி நிற்பது, வரதட்சிணைப் பிரச்னை. 'எமர்ஜென்ஸி'யின் போது இதைப்பற்றி ஒரு தீவிரமான இயக்கமே நடந்தது. தமிழ்நாட்டிலோ ஆயிரக்கணக்கான மாணவ மாணவிகள் இந்தக் கொடுமையை ஒழிப்பதுபற்றி கூட்டங்கள் போட்டு சபதம் எடுத்துக் கொண்டார்கள்...

அப்புறம் என்ன நடந்தது...? தெரியவில்லை! இந்த இயக்கமும் ஆர்வமும் தீவிரமாகத் தொடரவேண்டும் என்பது என் ஆசை. 'வரதட்சிணை வேண்டாம்' என்று சொல்லும் இளைஞர்கள் தங்கள் முழு விவரம், விலாசத்துடன் எனக்கு அந்தரங்கமாக எழுதுங்கள். அவற்றைப் பரிசீலித்து தேர்ந்தெடுத்த சில விலாசங்களை 'இதயம் பேசுகிறது' இதழில் வெளியிடுகிறேன். வாழ்க்கையில் ஒரு விடிவை நோக்கிக் காத்திருக்கும் பெண்களுக்கு இதனால் ஒரு வழிபிறக்கட்டும். என்னுடைய முயற்சி சிறு அளவில் இருந்தாலும், இதனால் ஒரு நூறு பெண்களுக்காவது திருமணம் நடந்தால், அதையே நான் லட்சத்தில் ஒரு சாதனையாகக் கருதுவேன்.



தாய் :—டாக்டர்! என் மகனுக்கு மயக்க மருந்து கொடுக்கிறீங்களே? தெளிய எவ்வளவு நேரமாகும் ?

டாக்டர் :—ஒரு மணி நேரம் ஆகும். ஏன் கேக்கறீங்க ?

தாய் :—அதுக்குள்ளே அவன் தலை மயிரை 'கட்' பண்ணிடலாம்னு பார்க்கிறேன்...!

அட்டைப்படத்தைப் பற்றி ஒரு வார்த்தை. ''இந்த வாரம் அட்டையில் வந்திருப்பது போலவே இருப்பாள் என் பெண்! நீங்கள் போடுகிற அளவுக்கு அழகு இருக்குமோ இல்லையோ என்று பயந்துகொண்டு அனுப்பாமல் இருந்துவிட்டேன்.''—இப்படிச் சில தாய்மார்களும், '''நீ ஒரு 'பாமிலி டைப்!' உன்னையெல்லாம் அட்டையில் படம் போட்டால் எடுபடாது' என்று என் கணவர் கிண்டல் செய்கிறார். அதனால் படத்தை அனுப்பத் தயக்கமாக இருந்தது. 'இதயத்தின்' அட்டையில் வரும் பெண்களைப் பார்த்ததும், என் படத்தையும் அனுப்பலாம் என்கிற தெம்பு வந்துவிட்டது.''—இந்தமாதிரி சில பெண்களும் எழுதி இருக்கிறார்கள்.

நான் முதலிலேயே சொல்லி இருக்கிறேன். எல்லோரும் அழகானவர்கள் தாம். எளிமையிலும், இயல்பான தோற்றத்திலும்கூட அழகு மிளிருகிறது. அதற்கு வயது எல்லையும் இல்லை.

இது உங்கள் வீட்டுப் பத்திரிகை. உங்கள் 'இதயம் பேசுகிறது' இதழ் அட்டைப்படத்தில், தங்கள் பெண்ணின் படம் வரவேண்டும் என்றே ஒவ்வொரு தாயும் நினைக்கவேண்டும்.

இதுதான் என் வேண்டுகோள்! கவர்ச்சியாக இல்லையே என்று கவலைப்படாதீர்கள். அட்டைப்படத்தில் அமைதியான அழகு போதும். கவர்ச்சிக்காகத்தான் நாங்கள் உள்ளே ஏகப்பட்டது போடுகிறோமே?-(சில படுகவர்ச்சியாகக் கூட இருக்கின்றன, இல்லையா?)

இது உங்கள் பத்திரிகை. தமிழ்ப் படிக்கிற குடும்பங்கள் எல்லாவற்றிலும்—எல்லோரும் வாசிக்கும் பத்திரிகை. அதனால் உங்கள் கருத்துக்களைச் சுவாதீனத்தோடு எழுதலாம்.

'Idhayam Pesukirathu'—A HOME MAGAZINE OF THE TAMILS.'

—இதுதானே எங்கள் வாசகம்?

நன்றி!

மணியன்

# தேவி தரிசனம்

1

'அன்றிவ் வுலகம் அளந்தாய்,
அடி போற்றி!
சென்றங்குத் தென்னிலங்கை
செற்றாய்! திறல் போற்றி!
பொன்றச் சகடம் உதைத்தாய்!
புகழ் போற்றி!
கன்று குணிலா எறிந்தாய்!
கழல் போற்றி!
குன்று குடையா எடுத்தாய்
குணம் போற்றி!
வென்று பகை கெடுக்கும் நின்
கையில் வேல் போற்றி!
என்றென்றுன் சேவகமே ஏத்திப்
பறைகொள்வான்
இன்று யாம் வந்தோம் இரங்கேலோ
ரெம்பாவாய்!

—ஆண்டாள் திருப்பாவை

யமுனை நதி தீரம்; அங்கே எம்பெருமான் கள்ள விளையாட்டு ஆட கணித்து வைத்திருந்த நேரம். ஆலிலையில் பள்ளி கொண்டு அகிலம்



# மாலே மணிவண்ணா...



யாவும் காத்த ஆழிமணிக் கண்ணன், அன்று ஆயர்மகள் நப்பின்னையின் மார்பில் சாய்ந்து பள்ளி கொண்டிருக்கிறான்.

ஈரேழு புவனங்களையும் காக்கத் தூங்காத கண்கொண்ட துளசி மணி மார்பன், ஒருதோகை மயிலின் மடியில் தூங்கிக் கொண்டிருக்கிறானும்! என்ன, நாடகம்! அந்த மாயக் கண்ணனின் பொய்மைத் தூக்கத்தில் போதை கொண்டு தூங்கிக் கொண்டிருக்கிறாள், நப்பின்னை. துயில்கொள்ளும் வேளையிலும் அவள் முகத்தில் என்ன இறுமாப்பு! எங்கும் நிறைபொருளாம் செங்கமலக் கண்ணன், அவள் ஒருத்தியின் அங்கையினுள் மட்டுமே அடங்கி, கொங்கை தழுவித் தூங்கிக் கொண்டிருப்பதாக ஒரு பேதமை நிறைந்த நம்பிக்கை, அந்த நங்கை நப்பின்னைக்கு!

பரம்பொருளான கண்ணன், பக்தர் பராதீனன். பக்தர்கள் பார்வைக் கேற்ப காட்சியளிப்பவன். அவனைப் பிள்ளையாய் நினைப்போர்க்கு, கிள்ளைமொழி பேசும் விளையாட்டுக் கண்ணனும் அவனே; ஓலமிடும் தீனர்களுக்கு, ஆதிமூலமும் அவனே! பேதமையோடு புலம்பி நிற்கும் அர்ச்சுனர்களுக்கு கீதையும் அவனே! தொண்டுக்கு சேவகனும் அவனே! விண்டு காண முடியா வேதப் பொருளும் அவனே! அந்த மாயக் கண்ணன், கள்ளமில்லா காமத்தால் கனிந்துருகும் கார்குழலார்க்கு காதல் நாயகனாகவும் காட்சி அளித்ததில் என்ன வியப்பு?

ஜீவன்களை தனக்குள் கட்டிப்பிணைக்க அந்தப் பரம்பொருள் ஆடும் ஆயிரம் கோடி நாடகங்களில், ஒரு சிறு காதல் நாடகம் அது!

அது மார்கழிப் பின்னிரவு நேரம். விடியும் பொழுது. நப்பின்னையின் மாளிகையில் குத்துவிளக்கு எரிகிறது. கோட்டுக்கால் கட்டிலின் மேல் (யானைத் தந்தங்களால் ஆன கட்டில்) மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மீதேறி, கொத்தலர் பூங்குழலாள் 'நப்பின்னை கொங்கை மேல்' தலை வைத்துச் சாய்ந்திருக்கிறான் மலர் மார்பினனான கண்ணன்.

அப்போது ஒரு குரல்—ஒரு மானிடப் பெண்ணின் தேமதுரக்குரல். அவன் நெஞ்சுக்கு மிக நெருக்கமான குரல்தான்; ஆனால், வெகு தொலைவில் தென்பதியிலிருந்து கேட்கிறது.

''மாயவா, கோபாலா! மாயம் தவிர்த்து கண்திறவாய்!'' —அக்குரல் அவனைத் தட்டி எழுப்புகிறது. கண்ணன் சிரிக்கிறான். நாடகம் நடக்கட்டும் என்று மாயவன் கண்தூங்கி நடிக்கிறான். அவள் குரல் அவன் காதுகளில் விழவில்லையாம்; அவனுக்குத் துயில் கலையவில்லையாம்!

அவனை அழைத்த அந்தக் குரலில் பொறுமையிழந்த கோபம்... அந்தக் கோபத்துக்கு கண்ணனை அணைத்துத் தூங்கும் நப்பின்னை இலக்காகிறாள். 'அவளல்லவோ கண்ணனைப் படுக்கையிலிருந்து எழவிடாமல் தடுத்து வைத்திருக்கிறாள்' என்ற கோபம்.

நப்பின்னையை நோக்கிச் சீறுகிறது அந்தத் தென்பதியிலிருந்து வந்த தேன்குரல்: 'மைத்தடங் கண்ணினாய் பெண்ணே, நப்பின்னை! நீ உன் மணாளனை எத்தனை போதும் துயிலெழ ஒட்டாய் காண்! எத்தனையேலும் பிரிவாற்றகில்லையால்!' (உன் மணாளனைக் கண்ணனை தூக்கத்திலிருந்து எழுந்திருக்க விடமாட்டாயா? ஓகோ! அவனை பிரிய முடியவில்லையா உனக்கு?)

அடடா! என்ன சீற்றம்; அந்தக் குரலில்! நப்பின்னை தன் கணவனை தடுத்து வைத்திருந்தால் இவளுக்கு என்ன கோபம்? அதைத் தட்டிக் கேட்கும் உரிமை எப்படி வந்தது அந்தக் குரலுக்குரியவளுக்கு!



திருமஞ்சனநீர் வருகை

'எங்கோ துயில்கொள்ளும் கண்ணா இங்கே வாராய்!' என்று அழைக்கும் உரிமை; அவனைத் தடுத்து படுக்கையில் வைத்திருக்கும் நப்பின்னையை நோக்கி 'கண்ணனை உடனே என்னிடம் அனுப்பு' என்று கண்டித்துக் கேட்கும் உரிமை. இத்தனை உரிமைகள் அந்தக் குரலுக்குரிய பெண்ணுக்கு வந்த மகிமை என்ன?

எல்லாம் மாயம் செய்யும் நாடகக் கண்ணனால் கிடைத்த உரிமைதான்.

மூவுலகும் எந்தப் பெருமானின் ஈரடிக்குள் அடங்கியதோ, அண்ட புவனங்கள் எல்லாம் எந்த கோபால னின் வாய்க்குள் ஒடுங்கினவோ, அந்த மாதவனின் வல மார்பினில் வாழும் பெருமை பெற்றதால் அப் பெண்ணுக்கு ஏற்பட்ட உரிமைதான், அது.

ஆம்; தென்பதியிலிருந்து அக்குரல் கொடுத்தவள், பரந்தாமனின் வல மார்பில் உறையும் பிராட்டி இலட்சுமி தேவியின் அம்ச அவதாரமான ஆண்டாள்தான்!

பல அற்புதத் தத்துவங்களைக் கலியுகத்துக்கு உணர்த்திச் செல்ல அவதரித்த கலியுக நாச்சியார் அவள்!

சாஸ்திர அறிவு கொண்ட சகாதேவன் மாத்திரம்,

''மாயக்கண்ணா! ஏன் கபட நாடகம் ஆடுகிறாய்? நீ கிருஷ்ணாவதாரம் எடுத்திருப்பதே இந்தப் பாரதப்போரை உண்டாக்கி, பாவ மாந்தரைக் கொன்று பூமிபாரம் குறைப்பதற்காகத்தான்! அப்படி ஒரு வேளை இந்தப் போர் நிற்கவேண்டுமானால் ஒரே ஒரு காரியம் செய்ய வேண்டும்...... அதாவது, 'நேராகக் கைப்பிடித்து நின்னையும் நான் கட்டுவனேல், வாராமல் காக்கலாமே மாபாரதம்''' என்றான்.

கண்ணன் சிரித்துக்கொண்டு, 'என்னை உன்னால் கட்ட' முடியுமோ?' என்று கேட்டான்.



ஆண்டாள் கோயில்

'எல்லாம் நானே! எப்பொருளும் நானே! காரணமும் நானே! கர்மாவும் நானே!' என்றான் கீதைநாயகனான கண்ணன்.

'எல்லாம் நானே' என்ற அவனை எப்படி நமக்குள் கட்டிவைப்பது என்ற சூத்திரத்தை உலகுக்கு உணர்த்த உலகநாயகியான பிராட்டியே அந்தத் தென்பதியில் அவதரித்தாள்.

அன்றொருநாள் - மகாபாரத யுகத்தில் பஞ்சபாண்டவர் மூலம் பாரதப் போர் முடிக்கக் கண்ணன் சித்தம் கொண்டு, அவர்களுடன் மித்ர நாடகம் ஆடிக் கொண்டிருக்கிறான். போரை நடத்திப் பூமிபாரம் குறைக்கவந்த கண்ணன், போலியாக பஞ்சபாண்டவர்களிடம் ஒரு கேள்வியைக் கேட்டான்: 'இந்தப் பாரதப் போரை நிறுத்துவது எப்படி?' என்று. கண்ணனின் கபட நாடகம் தெரியாத தர்மன், பீமன், விஜயன், நகுலன், துரோபதை யாவரும் ஏதேதோ வழி சொன்னார்கள். ஆனால்,

உடனே சகாதேவன் கண்ணனைக் கட்டிக் காட்டினான். எப்படி? தன் அன்பால், பக்தியால் கண்ணனைத் தன் புலன்களுக்குள் அடக்கிக் கட்டி விட்டான் சகாதேவன்.

இறைவனைக் கட்டி ஆள மகாபாரதம் காட்டிய வழி இது. அதை மறுபடியும் புதுப்பித்து மாந்தருக்குக் காட்ட அவதரித்த எம்பிராட்டிதான். ஆண்டாள்...!

துவாபர யுகத்தில் அன்பால் கண்ணனை அடக்கினாள் ஒரு ராதை....

கலியுகத்தில் அதே மாதிரி அன்பால் கண்ணனை அடக்கி ஆண்டாள், ஒரு கோதை; அப்படிக் கண்ணனை ஆண்டதால் 'ஆண்டாள்' எனும் பெயரும் பெற்றாள்....!

கண்ணனை அவள் தனக்குள் அடக்கியாள கைக்கொண்ட ஆயுதம்தான், காதல்!

அந்தக் காதல் சிற்றின்பமா, பேரின்பமா?

மாயை நிரம்பியோருக்கோ எல்லாமே
சிற்றின்பம்!
மாயை விலகியோருக்கோ, எல்லாமே
பேரின்பம்!

ஆண்டாள் கொண்ட காதலோ சிற்றின்பம் — பேரின்பம் எல்லாவற்றையும் கடந்த தெய்விக இன்பம்....

அந்தக் காதலில் பெற்ற வெற்றியை இந்தக் குவலயமே, அதோ, அந்த ஸ்ரீவில்லிப்புத்தூர் என்னும் திவ்யதேசத்தில் நித்தம் நித்தம் கொண்டாடித் தரிசிக்கிறது....

தேவியின் அந்த வெற்றித் தரிசனம் காண அப்பதியில் அந்த வைகறைப் பொழுதில் நிற்கிறோம்....

ஒரு கணம் நம் புலன்கள் மயங்குகின்றன. எங்கும் மலர் மணம்.. துளசியின் நறுமணம்..... காலங்களைக் கடந்து நம் புலன்களில் கமகமக்கிறது. அந்த மணம்!

பெரியாழ்வார் என்று அழைக்கப் பெற்ற விஷ்ணுசித்தர் நந்தவனம் அமைத்து, எத்தனையோ ஆண்டுகாலமாக அப்பதியில் வாழும் வடபெருங் கோயிலுடையனாகிய வடபத்ரசாயி என்னும் பெருமாளுக்குச் சாத்தி மகிழ்ந்து வந்தாரே, அந்தப்பெருமைமிக்க மணம் அது!




பொழுது புலரும் வேளையில் புள்ளினங்கள் முதல் புவன இயக்கங்கள் யாவுமே மயங்கிக் கேட்கும்படி பெருமாளை நோக்கி—

'கருவுடை மேகங்கள் கண்டால்
உன்னைக் கண்டாலொக்கும் கண்கள்!

உருவுடையாய்! உலகேழும் உண்டாக
வந்து பிறந்தாய்!

திருவுடையாள் மணவாளா,
திருவரங்கத்தே கிடந்தாய்!

மருவிமணம் கமழ்கின்ற மல்லிகைப்
பூச்சூட்ட வாராய்!'

என்பன போன்று பல பாமாலைகளைப் பாடிப் பரவி பெரியாழ்வார் இறைவனுக்குத் தொடுத்த மாலைகளில் பக்தி மணம் கமழ்ந்தது. அந்த மணம் பெருமாளை மகிழ்வித்தது; அப்பெரும்பதியையே பக்தியால் குளிர்வித்தது.

காலம் காலமாக அந்த மலர் மணம் பெருமாளுக்கு அடிபணிந்து தொண்டு செய்து பூஜித்து வந்தது....

திடீரென்று ஒருநாள் அந்த மணத்தில் ஒரு புதுமை கலந்தது. அன்றலர்ந்த பூ மணத்துடன் ஓர் அழகு நங்கையின் தோள் மணமும் கலந்தது. பெரியாழ்வாரின் தவப்புதல்வி கோதை ரகசியமாகச் சூட்டி மகிழ்ந்துவிட்டு, பின் அதைக் கழற்றி பெருமாளுக்கு அனுப்பியதால் இணைந்த நங்கையின் தோள் மணம்.... அந்த மணத்தில் இருந்த நங்கையின் தெய்விகப் பற்றில் மாதவன் கட்டுண்டு போனான்.. அந்த மணம் நாராயணனை மயக்கி அவனை அவளுக்குள் அடங்கச் செய்தது. அப்படி மாலையைச் சூடிக் கொடுத்ததுதான் அந்த மலர் மகளின் வெற்றியாகவும் மாறியது....

ஸ்ரீ வில்லிப்புத்தூர் திருப்பதியில், அந்த வெற்றியைக் காணத்தான் பொழுது விடிகிறது.. அதைத் தரிசிக்க பூமாந்தர் கூட்டம், மாயன் குரல்கேட்ட ஆவினங்களைப்போல் நாச்சியார்கோவிலை நோக்கி விரைகின்றனர்.

மேளதாளங்கள் முழங்க, திருமுக்குளத்திலிருந்து ஸ்தானிக பட்டர் திருமஞ்சன நீர்க்குடம் ஏந்திப் பிராட்டியான ஆண்டாளின் சந்நிதியை நோக்கி வருகின்றார்.

அந்த ஒலிகேட்டு இன்குரலால் பெருமானையும் பிராட்டியையும் தொழுதேத்தும் அரையர், வேதபிரான், பட்டர் போன்றோர் சந்நிதியில் கூடுகின்றனர்.....

இன்னும் சில விநாடிகளில் பாவை நாச்சியாரான ஆண்டாளின் சந்நிதித் திருக்கதவம் திறக்கப்போகிறது.

(தொடரும்)

இவ்விதழில் வெளியான கதைகள் கற்பனையே. கதைகள், கட்டுரைகள், ஆகியவற்றைத் தபாலிலும் அனுப்பலாம்; நேரிலும் பெற்றுக்கொள்ளப்படும்.
கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர் ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
முகவரி: 44-A, மௌண்ட் ரோட், கிண்டி, சென்னை-600 032.

# தேவி தரிசனம்

## மாலே மணிவண்ணா...

## 2

யுகங்கள் நான்கிலும் காணாத அற்புதம் அந்த திருத்தலத்தில் நடந்திருக்கும் மகிமை. எந்தப் பதியில் பெருமாள் தம்பதி சமேதராக எழுந்தருளினாலும், ஸ்ரீதேவியும் - பூதேவியும் அருகிலிருப்பார்கள். அந்தத் தலத்தில்தான் ஆண்டாள் ஒருவரோடு காட்சி தருகிறார். பெருமாளுக்கு வலப்புறம் — ஆண்டாள் நாச்சியார். இடப்புறம் — பெரியதிருவடிவான கருடாழ்வார். இத்திருக்கோலம் எப்பதியிலும் காணாத புதுக்கோலம். ஆம்! தேவியர்கள் அங்கே ஆண்டாள் என்னும் ஒருருவில் இணைந்து விட்டனர்.

'கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ?
மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச் சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கிறேன் சொல்லாழி வெண்சங்கே!'

—ஆண்டாள் அருளிய 'நாச்சியார் திருமொழி.'

ஸ்ரீவில்லிபுத்தூர் திவ்யதேசத்தில் அடியெடுத்து வைக்கும் போது நம் கால்கள் பரவசத்தால் பரபரக்கின்றன.

அத்தலத்தில் அம்மம்மா!...

அனைத்துயிரும் உய்ய, ஆன்மாக்கள் கடைத்தேற, ஆலிலையில் பள்ளிகொண்ட ஆழிமழைக்கண்ணன் எடுத்த அவதாரங்கள் பத்து; அவனுடைய அருள் பிரவாகத்தில் ஆழ்ந்து, அகிலத்துக்கு ஆத்ம நெறி காட்டிய ஆழ்வார்களோ, பன்னிரண்டு! அவன் மூர்த்திகரமாக எழுந்தருளிய திவ்யதேசங்கள், நூற்றியெட்டு. அவனுடைய தாள் போற்றிப் பாடும் பிரபந்தங்கள், நாலாயிரம்! நாள்தோறும் அவன் கடைத்தேற்றும் உயிரினங்கள், கோடானு கோடி....

ஆனால் அப்பெருமானை அன்பினால் - அரும்பெரும் காதலால் ஆண்ட திருவுடை நாச்சியார் ஒரே ஒருவர்தான்!

ஆம்! மறைகளின்படி எம்பெருமானின் பக்கவில் உறையும் தேவியர் மூவர்: ஸ்ரீதேவி; பூதேவி; நீளாதேவி.

இந்த மூவரும் ஒருருவில் இணைந்து ஆண்டாளாக அருட்சேவை சாதித்தது, அந்த ஸ்ரீவில்லிபுத்தூர் திவ்யதேசத்தில்தான்.

கண்ணனாக அவதரித்து வேதத்தைக் கீதையாக அருளினான் பெருமான். அவனே அருளிய அந்தவேதத்துக்கும்கூட ஆதியாக ஒரு வித்து இருக்கிறதாம்!

ஆம்! 'வேதமனைத்துக்கும் வித்தாகும், கோதைத் தமிழ்!' என்று அருளியிருக்கிறார் வேதபிரான் பட்டர்!

பகவான் வழங்கிய வேதத்துக்கும் வித்து ஆண்டாளின் பாசுரங்கள் என்றால், அந்தத் திருவுடை நாச்சியாரின் அவதாரப் பெருமை பேசவும் எளிதோ?

காட்சிக்கு அரும்பொருளாய், வேதத்துக்குக் கருப்பொருளாய் - பிராட்டியார் அவதரித்த திருத்தலத்தில்' நம் கால்களும் பட என்ன பேறு பெற்றோமோ நாம்....!

உள்ளத்தால் கசிந்துருகி அந்த திருவுடை நாச்சியார் சந்நிதியை நோக்கி விரைகிறோம்...

பிராட்டியின் சந்நிதிக்குத் திருமஞ்சன நீர் சென்றதும், திருக்கதவைத் திறக்கிறார் ஒரு ஸ்தானிகபட்டர். பக்தர்கள் சூழ்ந்து நிற்கின்றனர். ஆண்டாள் திருப்பாசுரங்களையும் — திவ்யபிரபந்தங்களையும் இசைநயத்துடன் பெருமாளிடம் விண்ணப்பிக்கும் அரையர், அதியாயனம் சேவிக்கும்

பொன். பாஸ்கர மார்த்தாண்டன்

பெரிய நம்பி, கவி சாத்தும் வேதபிரான் பட்டர் (பெரியாழ்வாரின் 729-ம் சந்ததி இவர்) — தாத்தய்யங்கார் ஸ்வாமிகள் என்னும் தீர்த்தக்காரர்கள் வரிசையாகக் காத்து நிற்கின்றனர்.

ஒரு புறத்திலிருந்து காராம் பசு வருகிறது.

பிராட்டியான ஆண்டாள் கண் மலர்ந்து விசுவரூப தரிசனம் தருவதைச் சேவிக்கவே இந்தப் பக்தர் கூட்டம் - பணிபுரியும் தீர்த்தக்காரர் கூட்டம்... பசுவின் வருகை...

திரை விலகுகிறது. தேஜோமயமாக தேவியின் திவ்ய விசுவரூப தரிசனம் கண்டு சேவித்து நிற்கிறோம்.

பிராட்டியின் திருப்பார்வைக் கடாட்சத்துக்காக எதிரே காராம்பசு பின்புறமாக நிற்கிறது. தேவி காராம்பசுவைப் பார்த்துக் கண் விழிப்பதாக ஐதிகம். தட்டொளி என்னும் கண்ணாடியும் எதிரே பொருத்தப்பட்டிருக்கிறது.

கண்ணாடியிலும், காராம்பசுவின் முகத்திலும் கண்விழிப்பது லட்சுமிகரமானது என்பது மனித நம்பிக்கை. லட்சுமி தேவியையே அவற்றின் பார்வையில் திருப்பள்ளியெழுச்சி செய்ய வைத்திருப்பதில் பக்தர்களுக்கு திருப்தி.

பிராட்டிக்கு தீபாராதனை ஆகிறது. தீர்த்தக்காரர்கள் பாசுரங்களைச் சாற்றுகின்றனர்.

அதைத் தொடர்ந்து அந்த மகிமை நிகழ்கிறது.

பிராட்டிக்கு முன்னிரவில் அணிவித்த மாலையைப் பக்தி சிரத்தையுடன் ஸ்தானிகபட்டர்கள் கழற்றி எடுத்து, அதைப் பெருமாள் சந்நிதிக்கு எடுத்துச் செல்கிறார்கள்..

நாச்சியார் சந்நிதிக்கு இடதுபுறமாக அமைந்துள்ள சந்நிதியில் வடபத்திர சாயி பெருமாள், ஆண்டாள் நாச்சியார் இரவில் சூடிக்கொண்டு இப்போது களைந்து கொடுத்தனுப்பும் மாலைக்காக காத்திருக்கிறார். தேவியின் மாலை சென்ற பிறகுதான் பெருமாளின் விசுவரூப தரிசனம் தொடங்கும். ஆம்! பிராட்டி சூடிக்கொடுத்த மாலையை அணிந்தபிறகுதான் பெருமாள் கண் விழித்து திருப்பள்ளியெழுந்து காட்சி யளிப்பார்.

அந்தத் தலத்தில் நடந்த அற்புத வரலாற்றின் நடைமுறைக் கொண்டாட்டம் அது—

அது வேதகாலத்தில் நடைபெற்றதல்ல... காலத்தை நிர்ணயிக்கமுடியாத இதிகாச காலத்தில் நிகழ்ந்ததல்ல...!

இந்தக் கலியுகத்தில் சில நூறு ஆண்டுகளுக்கு முன்புதான்... ஆம்! கி.பி. ஒன்பதாம் நூற்றுண்டில்தான் நடந்த அற்புதம்...

அதோ...! எங்கு பார்த்தாலும் மலர்கள் மலர்கள்... செண்பகம், மல்லிகை, பாதிரிப்பூ, மருவு, செங்கழுநீர், புன்னைப்பூ, குருக்கத்திப்பூ, இருவாட்சி, கருமுகைப்பூ.....

இவற்றைத்தொடுத்துப்பெருமாளுக்கு சூட்டிக் கொண்டிருக்கின்றன இரு வேதக்கரங்கள். வேதியர் குலத்துதித்த விஷ்ணு சித்தன் என்ற பெயர் கொண்ட - தொண்டுக்கே ஆளாகிய பெரியாழ்வாரின் பக்திக் கரங்கள் அவை.

அவர் ஆழ்வார்களில் எல்லாம் பெரியவர்... அதனால் பெரியாழ்வார் எனும் பெயர் பெற்றவர்.

மற்றவர்கள் பெருமாளை, 'வேதமே! வித்தகப் பெருமாளே...' என்று பணிந்து வேண்டிக் கொண்டிருந்தால், பெரியாழ்வார் மாத்திரம், 'கண்ணே, என் மைந்தா.... மழைமுகில் செல்வா..' என்று பிள்ளைப்பாசம் கனிய அழைத்துப் போற்றுவார். அவருடைய பக்திப் பெரும்நிலை — இறைவனையே பிள்ளையாக மாற்றி அழைக்கும் 'வாத்ஸல்ய சக்தி' என்னும் நிலையாகும். அவர் தன்னை யசோதையாகவும், தம் இல்லத்தை நந்தகோபன் அரண்மனையாகவும், தான் வாழ்ந்த ஸ்ரீவில்லிபுத்தூர் நகரை கண்ணன் வளர்ந்த கோகுலமாகவும் — தன் நினைவுப் பாவனையில் அமைத்துக் கொண்டு பெருமாளைச் சீராட்டிச் சேவிப்பார்... அவர் தன் கற்பனை பாவனையில் கண்ணனை, 'மைந்தா வருக...' என்றழைத்து—அவனைத் தன் கரத்தில் ஏற்றி நிலா காட்டி, பொற் கிண்ணத்திலிட்ட அக்காரவடிசிலை ஊட்டுகிறார்... காலில் கிடத்தித்



விசுவரூப தரிசனம் காணவந்த பக்தர்கள்

திருமஞ்சன நீராட்டுகிறார்... 'ஐயோ! இந்த சேட்டை செய்யும் பிள்ளையை எப்படித் திருத்துவேன்?' என்று செல்லமாய்க் கோபித்து மயங்குகிறார்...

இப்படி இறைவனையே குழந்தையாக்கிப் பூஜிக்கும் தகுதி அவர் ஒருவருக்கேதான் உடையதாக இருந்தது.

ஒரு முறை - அவர் காலத்தில் மதுரையை ஆண்ட வல்லபதேவன் அரசவைக்கு பெருமாளின் கட்டளைப்படி சென்று, அங்கே அரசவையில் 'ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள்' என்று வாதித்து நிலைநாட்டி, அந்த வாதப் போருக்கு பரிசாகக் கிடைத்த பொற்கிழியையும் கைக்கொண்டு வரும்போது, அவருக்கு பெருமாள் ஸ்ரீதேவி சமேதராக காட்சி அளித்தார்.

அந்தக் காட்சியைக் கண்ட பெரியாழ்வார் இறைவனை நோக்கி வணங்கவில்லை. அதற்குப் பதிலாக இறைவனுக்கு பல்லாண்டு பாடினார்... பெரியோர்கள் தம்மை வணங்கும் இளையோருக்கு 'பல்லாண்டு' என்று ஆசி வழங்குவது வழக்கம்.

ஆனால் மனிதப் பிறவி கொண்ட பெரியாழ்வாரோ, பரமசொரூபனை மதுசூதனனுக்கே பல்லாண்டு பாடினார்.

'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு பல கோடி நூறுயிரம். மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா, உன் சேவடி செவ்வித் திருக்காப்பு! அடியோரும் நின்றேரும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு' என்று பெருமாளைத் தன்னேடு இணைத்துப் பல்லாண்டு



ஆண்டாள் அவதரித்த நந்தவனம்

பாடினுர். அத்தோடு விடவில்லே; அருகிலிருந்த தேவதேவியான லட்சுமியைப் பார்த்து, 'வடிவாய் நின் வலமார்பில் வாழ்கின்ற மங்கை பல்லாண்டு' என்றுபிராட்டிக்கும், பல்லாண்டு பாடுகிருர். கூடவே, அவர் பார்வை ஸ்ரீமந்நாராயணனின் கையிலிருந்த சக்கரத்தின்மீது படுகிறது. அந்த சக்கரத்துக்கும், சங்குக்கும் சேர்த்து, 'வடிவார் சோதி வலத்துறையுஞ் சுடராழியும் பல்லாண்டு! படைபோர் புக்கு முழங்கும் அப் பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே!' என்று வாழ்த்தினுர்.

—இப்படி இறைவனுக்கே பல்லாண்டு பாடிய பெரும் நிலே அவருக்கு 'எப்படிச் சித்தித்தது? அவருக்கு மட்டும் ஏன் அந்தத் தகுதி...? இந்த மர்மம் ஓர் ஆடி மாதம் பூர நட்சத்திரத்தில் மலருகிறது..

அன்று பெரியாழ்வார் நந்தவனத்தில் திருப்பணி செய்து கொண்டிருக்கும் அந்த அதிகாலைப் பொழுதில் திடீரென்று ஒரு பேரொளி.

பகவானின் பச்சைமாமேனி போல் படர்ந்திருந்த திருத்துழாய் செடிப் படுகையின் மத்தியில் கோடிசூரியப் பிரகாசத்துடன் ஒரு பெண் குழந்தை—

அங்குத் தோன்றும்போதே ஐந்து வயதுப் பிராயத்துடன் படுத்திருக்கிறது.

அத்திருக்காட்சி கண்டு பெரியாழ்வார் திகைத்து நின்ருர். அச்சமயம் அக்குழந்தை சிரித்து, 'தந்தையே, நான் உமது மகள்.... இத்துளசி செடிதான் என் தாய்!' என்று கூறிவிட்டு - ஐந்து வயதுக் குழந்தையாக இருந்த மகவு திடீரென்று கைக்குழந்தையாக மாறி விட்டது. இந்த அற்புதத்தைக் கண்டு திகைத்த பெரியாழ்வார் குழந்தையைக் கரத்தில் ஏந்தி தாம் வழிபடும் வட பெருங்கோயிலுடையான் சந்நிதிக்கு எடுத்துச் சென்று கிடத்தி, பெருமாளே வணங்கி நிற்கிருர். அச்சமயம், "இக் குழந்தையை நீரே வளர்ப்பீர்!" என்று தெய்வாக்கு பிறக்கிறது.

அக்குழந்தையை எடுத்துச் சென்று 'கோதை' என்று பெயரிட்டு வளர்த்தார் ஆழ்வார்...

இக் கலியுகத்தில் பெரியாழ்வாரின் கையில் கோதையாகத் தவழ்ந்த இந்தக் குழந்தை, திரேதாயுகத்தில் சீதையாக ஜனகன் கையில் தவழ்ந்தது.. இவளே ராதையாகவும் ஆயர்பாடியில் தோன்றி வளர்ந்தாள்...



ஆம்! பிராட்டியைக் குழந்தையாகப் பெற்று, வளர்க்கும் பேறு பெற்ற பெருமைதான், பரம்பொருளான பெருமாளுக்கே 'பல்லாண்டு' பாடும் தகுதியை உருவாக்கி வைத்திருந்தது.

ஆழ்வாரின் பெருமையை உலகுக்கு உணர்த்த அப்படி, கருவில் அடங்காத உருவாக அவதரித்த பிராட்டி, அந்த ஸ்ரீவில்லிபுத்தூர் தலத்தைப் பெருமைப் படுத்தத் தன் அடுத்த மகிமையையும் நிகழ்த்தத் தொடங்கினுள்....

(தொடரும்)



இவ்விதழில் வெளியான கதைகள் கற்பனையே. கதைகள், கட்டுரைகள், ஆகியவற்றைத் தபாலிலும் அனுப்பலாம்; நேரிலும் பெற்றுக்கொள்ளப்படும்.
கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர் ப. அண்ணமலே. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
முகவரி: 44-A, மௌண்ட் ரோட், கிண்டி, சென்னை-600 032.

விஜயா ஒத்துக்கொள்ளவில்லை. 'எனக்கு படம் வராவிட்டாலும் பரவாயில்லை. நல்ல ரோல் வந்தால்தான் நடிப்பேன்' என்று வைராக்கியமாக இருந்தார். அவருடைய விரதத்துக்குப் பலன் கிடைத்தது. 'ஓகோ' என்று வளர்ந்தார். படங்களின் எண்ணிக்கையை விட, அழுத்தமான பாத்திரங்கள் மூலம் கிடைக்கும் உயர்ந்த இடம்தான் பொருள் விஷயத்திலும் அதிக வளத்தைக் காலப்போக்கில் தரும்.

இப்படி நீங்கள் செய்வதால் புதியவர்களுக்கு மறைமுக உதவி செய்தவர்களாகவும் ஆவீர்கள். உங்கள் திறமை முழுமையும் தேவைப்படாத சின்ன ரோல்களில் பல புதுமுகங்கள் அறிமுகமாக முடியுமே...! — சும்மா இரண்டு டான்ஸ்... உப்புச்சப்பில்லாத நாலைந்து சீன்... அல்லது வெறும் கதாநாயகர்களின் காதல் ஜோடி (காதலிப்பதைத் தவிர வேறு வேலையில்லாத மாமூல் பாத்திரம்)... இப்படிப்பட்ட பாத்திரங்களிலிருந்து கொஞ்சம் விடுபட்டு உயர்ந்து முன்னேறுங்களேன்!

இப்படி நீங்கள் ரோல்கள் விஷயத்தில் 'அழுத்தமான ரோல்களைத்தான் ஏற்றுக் கொள்கிறேன்' என்று கண்டிப்பாக இருந்தால், உங்களைப் பற்றி இன்னொரு நடிகை கூறும் ஒரு புகாருக்கு மதிப்பே இருந்திருக்காது. அந்தப் புகார் என்ன என்று உங்களுக்கே தெரியுமே...!

கோடிகாட்டினுல் புரிந்துகொள்ள மாட்டீர்களா...? 'முருகன் பிரசாத'மாக புதிதாக தமிழ்ப்படம் எடுக்கும் ஒரு டைரக்டரிடம் ஏற்கெனவே ஒப்பந்தமாகியிருந்த இசை நடிகையை ரத்து செய்துவிட்டு உங்களைப் போடும்படி நீங்கள் கேட்டீர்களாம்.... அந்த இசை நடிகைக்கு ராசி (லக்) இல்லை என்றும், உங்களைப் போட்டால் படம் துரிதமாக வெளிவருகிற யோகம் உண்டு என்றும், வேறொரு முன்படத்தைக் காட்டி சொன்னீர்களாம்! சம்பந்தப்பட்ட இசை நடிகை, 'எனக்கு 'லக்' இல்லை என்று சொல்லலாமா?' என்று குமுறலுடன் பத்திரிகையாளர்களிடம்சொல்லி ரொம்ப வேதனைப்படுகிறுர். இது உண்மையாக இருந்தாலும், இதை நீங்கள் உங்கள் சுபாவப்படி வேடிக்கையாகக்கூடச் சொல்லியிருக்கலாம். இருந்தாலும் வம்பு ஏன்? யார் வேண்டுமானுலும் எந்தப் படத்திலும் மகாலட்சுமியாக நடித்துவிட்டுப் போகட்டுமே...!

உங்களுக்கு என்ன குறை? உங்களுக்கு என்ன திறமைக்குப் பஞ்சமா? சான்ஸ் வருவதில் குறைவா? இதற்கிடையே மூட்டைப்பூச்சிக் கடி மாதிரி இந்த மாதிரி புகார்கள் வருவதற்கு ஏன் இடம் தரவேண்டும்?

போனது போகட்டும்...! நாலு அலமேலு பாத்திரங்களைத் தேர்ந்தெடுத்து நடித்துப் பெயர் பெறுவதில் கவனம் செலுத்துங்கள். கொடிகட்டிப் பறப்பீர்கள்!

சின்னச் சின்ன வெறும் அலங்கார ரோல்களுக்கு ஒரு ஸ்ரீப்ரியா தேவையா? அப்படி 'சும்மா' வேடங்களும் உங்களுக்குத் தேவையா?

## சங்கிலிப் புதிர்

72-ம் பக்கத் தொடர்ச்சி

புது மாப்பிள்ளையாகப் போகும் கமலின் இந்தப் போஸைப் பார்த்தா?

அதுவும் இருக்காது.. கமலுக்கு இது பழகிய தோற்றம்தானே! '16 வயதினிலே' படத்திலேயே வருகிறுரே!

அப்படியானுல் லட்சுமி வாயை மூடிக்கொண்டதற்குக்காரணம்...?

யாருக்குத் தெரியும்...? சும்மா ஜலதோஷமாகக்கூட இருக்கும்!

படங்கள் : ரவி



# ...தரிசனம்

*மாலே மணிவண்ணா!*



'மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த
பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து
என்னைக்
கைத்தலம் பற்றக் கனுக் கண்டேன்
தோழி, நான்!'
—ஆண்டாள் (நாச்சியார் திருமொழி)

## 3

பெண்ணுய்ப் பிறக்க பெருந்தவம் செய்ய வேண்டும் என்பார்கள்.

ஆனுல் இரு பெண்கள், தம் மண்ணில் பிறக்க வேண்டும் என்பதற்காகப் பெருந்தவம் செய்திருந்த திருநாடு ஒன்று உண்டு. அதுதான் பாண்டிய நாடு.

அந்த நாட்டில் பிறந்து அமர நாட்டின் பெருமையையெல்லாம் அந்த நாட்டுக்கு அளித்த பெண்கள் வேறு யாருமில்லை; அகிலாண்டங்கள் கோடிக்கும் நாயகியரான பார்வதி தேவியும், லட்சுமி தேவியும்தாம்.

அங்கயற்கண்ணியாம் மீனுட்சியாக அவதரித்து, மதுரையைப் பெருமைப் படுத்தினுர் பார்வதிதேவி.

ஆண்டாளாக அவதரித்து இன்னெரு பாண்டிய நாட்டு நகரான ஸ்ரீவில்லிப் புத்தூரைப் பெருமைப் படுத்தினுர், ஸ்ரீதேவியான லட்சுமி!

அவதாரப் பெருமையால் மட்டுமல்ல பெண்ணினத்துக்கு அருளிய ஆட்சிப்





பெருமையாலும் இந்தத் தலங்களை மகிமைப் படுத்தினார்கள் அந்தத் தேவ-தேவியர்.

சாதாரணமாகப் பெண்கள், நாயகன் பிறந்த இடம் சென்று வாழ்ந்து பெருமை சேர்ப்பர். இந்தத் தலங்களில் மானிடப் பெண்களாக அவதரித்து, இறைவனையே அங்கே வருவித்து வாசம் செய்ய வைத்தனர், மீனாட்சியும் ஆண்டாளும்.

அங்கயற்கண்ணியை மணக்க வந்து, தேவி அவதரித்த மதுரையிலேயே கோயில் கொண்டமர்ந்து விட்டார், சொக்கநாதர்.

அதேபோல் கோதை நாச்சியாரான ஆண்டாளை ஆட்கொண்டு, பெரியாழ்வாரின் கோரிக்கைப்படி, ராஜ கோலத்தில் ரங்கமன்னாராக ஸ்ரீவில்லிபுத்தூரிலேயே ஆண்டாள் சமேதராகக் கோயில் கொண்டுவிட்டார் ஸ்ரீரங்கநாதர்.

இவை இரண்டும் பெண்மையை பெருமைப்படுத்த இறைவன் கோயில் கொண்ட திருத்தலங்கள்.

இதனால் ஸ்ரீவில்லிபுத்தூர் இன்னொரு பெருமையையும் அடையப் பெற்றது. ஸ்ரீமந் நாராயணன் கோயில் கொண்ட வைணவத் திவ்யதேசங்களுள் ஸ்ரீவில்லிப்புத்தூரே மிகச்சிறந்த பதி என்னும் பெருமையே அது!

சிற்பி

பொன்.பாஸ்கர மார்த்தாண்டன்

ஆம்! அதை விளக்கிச் சொல்கிறது ஒரு வரலாறு.

அதாவது: 'ஸ்ரீரங்கநாதர் கோயில் கொண்டுள்ள திருவரங்கத்தையே பூலோக வைகுண்டம் என்று ஆழ்வாராதிகளும் ஆசார்யர்களும் போற்றி வந்திருக்கின்றனர். அந்த சீர் உலாவும் திருவரங்கத்தில் நித்யவாசம் செய்யும் 'அ'கார வாச்யனான அழகிய மணவாளன், அங்கிருந்து ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளி, 'உ'கார வாச்யையான திருக்கோதை நாச்சியாருடனும் சேதன சொருபரும் 'ம'கார வாச்யருமான பெரிய திருவடியுடனும் காட்சிதந்து, உயிர்கள் அனைத்துக்கும் வேண்டிய வரங்களைத் தந்தருளும் பொருட்டு செங்கோல் தரித்த திருக்கையுடன் நித்ய மணவாளராக சாந்நிதியம் செய்தருளுகையாலே, திருவரங்கத்தைக் காட்டிலும் ஸ்ரீவில்லிபுத்தூரே சிறப்புற்றது...'' என்று கூறப்பட்டிருக்கிறது.

இந்தப் பெருமையை ஸ்ரீவில்லிபுத்தூர் அடைய அங்கே நடந்த அற்புதம்தான் என்ன...?

அதோ...

அந்த வேதியர் இல்லத்தில் தூண்டாமணி விளக்கு சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. நாள் முழுவதும் நந்தவனத்தில் நின்று பூமாலை தொடுத்து, எடுத்துச் சென்று அதைப் பாமாலையுடன் பெருமாளுக்குச் சாத்தி மகிழ்ந்திருந்தும் கூட நள்ளிரவு ஆகியும் அயர்ந்து தூங்க முடியவில்லை ஆழ்வார் பெருமானை விஷ்ணுசித்தருக்கு. அவர்



ஸ்ரீ சுதர்சனமும் நரசிம்ம மூர்த்தியும் மூன் பின்னாக இணைந்த திருவுருவச்சிலை.

நாவிலும் சிந்தையிலும் நாராயணனே கொலுவீற்றிருக்கிறான். விளக்கு ஒளியில் ஏடு ஏடுகளாகப் பிரபந்தங்களை யாத்து இசைத்துக் கொண்டிருக்கிறார் அவர்.

அவருடைய இசையில், தேமதுரத் திவ்ய பிரபந்தங்களில் ஆயர்பாடிக் கண்ணன் ஆடிவிளையாடிக் கொண்டிருக்கிறான். நேரமாகிக்கொண்டே இருக்கிறது. அவர் மெல்ல மெல்ல, மறுநாள் விழிப்பதற்காக நாராயண ஸ்மரணையுடன் துயில் கொள்கிறார்.

அப்போதும் தூங்காமல் இரு மலர் விழிகள் அவரருகே விழித்துக் கொண்டிருக்கின்றன. ஆம், கோதைதான் அது!

அரங்கனைப்பற்றி பெரியாழ்வார் பாடப்பாட ஆயர்பாடி ராதையாகவே தன்னை மனத்தால் வரித்துக்கொண்டு, கண்ணனின் கள்ளத்தனத்தில், பிள்ளை விளையாட்டில் உள்ளத்தைப் பறி கொடுத்து பேரின்ப ஈர்ப்பில் சிக்குண்டு மயங்கி நிற்கிறாள், கோதை. அவள் நினைவெல்லாம் கண்ணன்... உணர்வெல்லாம் கண்ணன்.. காணுமிடமெல்லாம் கோகுலம்... பிருந்தாவனம்... ஆயர்குலச் சிறுமியர்...

விடிகிறது. சிற்றுடை புனைந்து, சிற்றில் அமைத்து விளையாட அவள் தோழியர் வருகின்றனர். சின்னஞ்சிறு அல்லிமலர்க் கரங்களால் சிறு வீடு கட்டி விளையாடுகிறார்கள். அச்சிறுமியரில் ஒரு குறும்புக்காரத் தோழி ஒரு சிற்றிலை சிதைக்கிறாள்.. கோதையின் பார்வையில் அந்தத் தோழியின் உருவம் தெரியவில்லை. கம்சனை காலால் எட்டி உதைத்த கண்ணனின் செங்கமலச் சீர்ப்பாதங்களே அந்தச் சிற்றிலையும் சிதைப்பதாகத் தோன்றுகிறது.

பொய்க்கோபம் கொண்டு 'நாமமாயிரம் ஏத்த நின்ற நாராயணா, கள்ளமாதவா, கேசவா! செங்கண் மாலே, செய்யதாமரைக் கண்ணனே, எங்கள் சிற்றிலை வந்து சிதைக்காதே!' என்று சிணுங்குகிறாள்.. தோழியர் ஏதும் புரியாமல் விழிக்கின்றனர்.

ஆட்டம் முடிகிறது... தோழியர்களுடன் நீராடச் செல்கிறாள் கோதை. ஆடை களைந்து திருமுக்குளத்துக்குள் இறங்குகிறாள். உடனே அவள் கண்முன் ஸ்ரீவில்லிபுத்தூர் திருமுக்குளம் யமுனை நதி தீரமாக மாறுகிறது. குளக் கரையிலிருக்கும் ஆடைகளை அதோ

கண்ணன் எடுத்து மரக்கிளையில் ஒளித்து வைப்பதுபோல் பிரமை...

''மாயவா, மதுசூதனா இது என்ன விளையாட்டு! நீ குரங்குகளுக்கு அரசன் என்பதால் அந்தக் குணத்தைக் காட்டுகிறாயா' என்ன! ஆடைகளைத் தர மாட்டாயா? உன்னைச் சொல்லிக் குற்றமில்லை. உன்னை இப்படித் திரிய விட்டிருக்கும் உன் அன்னை யசோதையைச் சொல்ல வேண்டும்! வஞ்சகப் பேச்சி பாலுண்டாயல்லவா? அதனால் தான் அவ்வளவு அழுத்தமாக இருக்கிறாய்...! ஐயோ, மாதவா... எங்கள் மானம் போகிறதே.... தோழியரும் நானும் தொழுகிறோம்.. இனியென்றும் பொய்கைக்கு வரமாட்டோம்!'' என்று நீரினுள் நின்று இறைஞ்சுகிறாள்... பாடுகிறாள்..

பக்கத்தில் நீராடிக் கொண்டிருக்கும் தோழியர் பரக்கப்பரக்க விழிக்கின்றனர். அவர்கள் கண்ணுக்கு எதுவும் தெரியவில்லை. எப்படித் தெரியும்? பரமனைப் பார்க்கும் பரிபக்குவம் எல்லாருக்கும் வந்துவிட்டிருந்தால் எல்லாருமே கோதையாகியிருப்பார்களே..!

நாளாக நாளாக நாரணன் நம்பியின் நினைவில் நங்கை கோதை உருகுகிறாள்.. முதலில் பார்க்குமிடமெங்கும் பரந்தாமனைக் கண்ட கோதையின் மனோபாவத்தில் ஒரு புதிய மாறுதல் ஏற்பட்டு விட்டது.

கண்ணன் எதிரே இல்லை; தனக்குள்ளே அடங்கி விட்டான்.. தன்னோடு கலந்து விட்டான் என்ற ஐக்கிய பாவம் அவள் உள்ளத்துள் நிறைந்து விட்டது.

'நான் கண்ணனுக்குரியவள்... கண்ணன் எனக்குரியவன். அதனால் கண்ணனுக்குரிய பொருட்கள் எல்லாவற்றிலும் எனக்கும் உரிமை உண்டு.' இப்படி ஓர் புதிய மனவேகம் கோதையை ஆட்கொள்கிறது.

அப்போது அவள் பார்வையில், பெரியாழ்வார் இறைவனுக்காகத் தொடுத்து வைத்திருந்த புத்தம் புது மலர் மாலை படுகிறது. அந்த மாலையைப் பார்த்து மயங்கி நிற்கிறாள்.. பின் அந்த மாலை கண்ணனின் தடந்தோளை அலங்கரிக்கும் அற்புதக் காட்சியை மனத்தால் நினைத்துப் பார்க்கிறாள்... அன்றலர்ந்த மலர் மாலையை, அரங்க மாநகருளான் அணிந்து செம்பவள வாய் மின்ன சிரித்து நிற்கும் கோலம் அவள் நெஞ்சில் தோன்றுகிறது. அந்த அழகில் சொக்கி நிற்கிறாள். திடீரென்று அவள் மனத்தில் ஒரு புதிய பிரமை. இப்போது கண்ணன் தன் தோளிலிருந்த மாலையைக் கழற்றுகிறான். மாலை அவன் கையிலிருக்கிறது. மாலையும் கையுமாக மாதவன் கள்ளச் சிரிப்புச் சிரிக்கிறான். 'மாலே, மாயவா, மாலையை யார் கழுத்தில் சூடப் போகிறாய்...' என்று பரிதவிக்கிறாள்



திருமுக்குளம்

கோதை. 'கோதாய், உன் கோலத் திருக்கழுத்திலே சூடுகிறேன்' என்று கண்ணன் அவள் கழுத்திலேயே மாலையைச் சூட்டி விடுகிறான்... ஆனந்தப் பரவசத்தில் திளைக்கிறாள் கோதை... அவள் பிரமை கலையவில்லை. கண்ணன் அந்த மாலையைத் தன் கழுத்திலேயே சூட்டிவிட்டான் என்ற நினைவில் எழுந்த பேரானந்தப் பிரமை நிலையில் பித்தாகி நிற்கிறாள் கோதை.

அவள் எண்ணத்தின் பிரதிபலிப்பாக அவள் ஐம்புலன்கள் இயங்குகின்றன. அவள் கரங்கள் எதிரே இருந்த மாலையை எடுக்கின்றன. 'தானே கண்ணன்' என்று கண்ணனோடு மனத்தால் ஒன்றிய கார்குழலாளின் கரங்கள், கண்ணனின் கரங்களாகவே மாறி அவள் கழுத்தில் மாலையைச் சூட்டுகின்றன...

அந்த மாலையோடு நந்தவனத்தில் உள்ள கிணற்றடிக்கு ஓடுகிறாள். கிணற்று நீரில் சூடிய மாலையுடன் அழகு பார்க்கிறாள். அங்கே ஒரு கணம் தன்னுருவைக் காண்கிறாள். மறுகணம்

## அடுத்த இதழில்
## சித்ரகுப்தன், சாரு
## கட்டுரைகளுக்கு
## பிரபல திரைப்பட டைரக்டர்,
## நட்சத்திரங்கள் பதில்!

மாலையணிந்த மாதவனின் தோற்றத்தை தன்னில் காணுகிறாள். மனம் துள்ள மகிழ்ச்சியால் கூத்தாடுகிறாள் கோதை..

திடீரென்று பெரியாழ்வாரின் குரல்..

கோயிலுக்குப் புறப்பட அவர் ஆயத்தம் செய்யும் குரல்.. ஒரு விநாடி கோதையின் பிரமை கலைகிறது.. 'தான் விஷ்ணுசித்தரின் மகள்... பெருமாளுக்கு சூட்டப்படவேண்டிய மாலை தன் கழுத்தில் இருக்கிறது' என்ற உலகியல் உணர்வு. சட்டென்று மாலையைக் கழற்றி கூடையில் வைத்து விடுகிறாள்..

மாலை ஏற்கனவே கோதையால் சூட்டப்பட்டதை அறியாமல் விஷ்ணுசித்தர் மாலையை எடுத்துக்கொண்டு சென்று பெருமானுக்குச் சாற்றுகிறார். அந்த மாலையை சூடியதும் மாயவனான எம்பெருமானின் தோற்றத்திலேயே ஒரு புதுப் பொலிவு... புன்னகையில் ஒரு புதிய ஒளி! அதைக் கண்ட பெரியாழ்வாருக்குப் பெரும் திகைப்பு. 'பெருமானின் திருமேனியில் இன்று மட்டும் ஏன் ஒரு புத்தொளி.. ஒருவேளை நம் கைங்கரியப் பலன் கனிகிறதோ?' என்று எண்ணி மகிழ்கிறார்...

அன்று முதல் அந்த நாடகம் தொடருகிறது. கோதை சூடிக் கொடுத்த மாலைகளை சொர்க்கவாசன் ஏற்று அணிந்து சுந்தரப் புன்னகையுடன் சுடர்விடுகிறான்..

ஒருநாள்.

பெரியாழ்வாரின் அகக் கண்களைத் திறக்க மனம் கொள்கிறான் பெருமான். கோதை யார் என்று அவருக்கு உணர்த்தும் காலம் கனியத் தொடங்கி விட்டது. அவள் மாலை சூடிக் கொடுக்கும் காட்சியை அவர் கண்களுக்குக் காட்டிவிட்டான்.

இறைவனுக்காகத் தான் தொடுத்த மாலையைச் சூடிய கோலத்தில் நின்ற சுடர்க்கொடியைக் கண்டதும் 'அபசாரம் அபசாரம்!' என்று அரற்றினார் ஆழ்வார். மகள் அணிந்துவிட்டதால் அபசாரமாகிவிட்ட மாலையை பெருமானுக்குச் சாத்தும் துணிவு வரவில்லை அவருக்கு. அன்று, மாலை சாற்றும் கைங்கர்யம் தடைப்பட்டுப் போயிற்று.

தன் இல்லத்திலேயே துவண்டு கிடக்கிறார் பெரியாழ்வார். மாயையில் சிக்கி விடுபடாத மனம் 'மாயவனுக்கும் அபசாரம் நிகழ்ந்துவிட்டதே' என்று புலம்பிக் கொண்டிருக்கிறது.

அன்று 'ஆதிமூலமே' என்ற யானையின் குரல் கேட்டு அருள் புரியவந்த நாரணன். திரௌபதியின் குரல்கேட்டு துயர்களைய வந்த திருத்துழாய் மாலை மார்பன் - ஆழ்வாரின் அஞ்ஞானப் புலம்பல் கேட்டு புறப்பட்டு வருகிறான்.

(தொடரும்)

இவ்விதழில் வெளியான கதைகள் கற்பனையே. கதைகள், கட்டுரைகள், ஆகியவற்றைத் தபாலிலும் அனுப்பலாம்; நேரிலும் பெற்றுக்கொள்ளப்படும். கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர் ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன். முகவரி: 44-A, மௌண்ட் ரோட், கிண்டி, சென்னை-600 032.

கிறீர்கள். அத்துடன் பத்திரிகை விற்பனைக்காகவும் இப்படிப்பட்ட நிலையை உருவாக்கியும் இருக்கலாம் என்றும் நினைக்க வேண்டியுள்ளது. எனவே, தாங்கள் இனி இப்படிப்பட்ட கீழ்த்தரமான காரியங்களில் ஈடுபடமாட்டீர்கள் என்று நினைக்கிறோம். அப்படி தொடர்ந்து எழுதவேண்டிய நிலை தங்கள் பத்திரிகைக்கும், தங்களுக்கும் உண்டானால் தமிழகம் முழுவதும் தங்கள் பத்திரிகையை தீயிட்டு கொளுத்த முயற்சி எடுத்துக்கொள்வோம் என்பதனை தங்களுக்கு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம். அகில இந்திய ரீதியில் உலகப் புகழ்பெற்று விளங்கிவரும் எங்களது ஆருயிர் அண்ணன் நடிகர் திலகம் அவர்களை கூலிக்கு மாரடிக்கும் ''நக்கீரன்'' அவர்கள் விமர்சனம் செய்வது நல்லதல்ல என்பதை எச்சரித்துக் கொள்ள விரும்புகிறோம். அவர் மயக்கத்தோடு எழுதிவருவாரேயானால் அந்த மயக்கத்தை உடனடியாக போக்க எங்களுக்கு தைரியம் உண்டு என்பதையும் பத்திரிகை ஆசிரியர் என்ற முறையில் தங்களுக்கு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறோம்.

அன்புள்ள,

தளபதி வி. சண்முகம்.

கண்டனம் தெரிவிக்கவந்த ரசிகர்கள்



14—2—78 அன்று காலை பத்துமணி அளவில், அகில இந்திய சிவாஜி மன்றத் தலைவர் தளபதி. வி. சண்முகம் அவர்கள், தம் மன்றச் சகாக்களுடனும் - ஆர்வமிக்க சிவாஜி ரசிகர் களுடனும் 'இதயம் பேசுகிறது' அலுவலகத்துக்கு வந்து ஆசிரியர் மணியனைச் சந்தித்து, மேலே காணும் மறுப்புரைக் கடிதத்தைக் கொடுத்தார். அப்போது அவருடன் அ. இ. சிவாஜி மன்றப் பொதுச் செயலாளர் புரசை குமரன், துணைத் தலைவர் அ. பால் பாண்டியன், வட சென்னை சிவாஜி மன்றத் தலைவர் எம். எழில்மணி, தென் செங்கை-சென்னை சிவாஜி மன்றத் தலைவர் மு. ஞானசேகரன், வட செங்கை சிவாஜி மன்றத் தலைவர் எஸ். காண்டீபன், பூவை இளைஞர் காங்கிரஸ் தலைவர் சேகர், கட்டபொம்மன் ஆகியோரும் வந்திருந்தனர்.

சிவாஜியைப் பற்றி நக்கீரன் எழுதிய கட்டுரைக்கு தம் ஆட்சேபத்தை நயம்படத் தெரிவித்தனர். இனிய சூழ்நிலையில் சுமுகமாக ஆசிரியர் மணியனும்—மன்றப் பிரதிநிதிகளும் மனம்விட்டுப் பேசிக் கொண்டனர்.

''சிவாஜி அவர்களைப் பற்றி எழுதியது தவறு!'' என்றார் திரு. தளபதி சண்முகம்.

''அண்ணன் சிவாஜிக்காக எதையும் செய்வோம்'' என்று திரு. மு. ஞானசேகரன் கூறி, நடிகர் திலகம் சிவாஜி கணேசன்மீது தன்போன்ற இளைஞர்கள் பலர் கொண்டிருக்கும் பற்றை வெளிப்படுத்தினார்.

அவர்கள் தந்த மறுப்புரைக் கடிதத்தை வெளியிடுவதாக வாக்களித்த ஆசிரியர் மணியன், ''திரு. சிவாஜி கணேசன் அவர்கள்மீது எனக்கு உள்ள மரியாதை அளவற்றது. தமிழகத்தின் பெருஞ்சொத்து அவர். ஈடு இணையற்ற ஒரு மாபெரும் நடிகர் அவர். அவர்மீது எந்த அவதூறும் படிய நான் என் பத்திரிகையில் அனுமதிக்க மாட்டேன். அதேசமயம், பொது வாழ்வில் ஈடுபட்ட—நம் மதிப்புக்குரிய இந்திரா காந்தி முதல் சாதாரண குடிமகன்வரை அனை வரையும் விமர்சிக்க அனைவருக்கும் உரிமை உண்டு. பத்திரிகை ஆசிரியர் என்ற முறையில் பலவிதக் கருத்துக்கள் இடம் பெறும் சங்கப்பலகையாக என் பத்திரிகையை அமைத்திருக்கிறேன். அதன்படிதான் திரு. சிவாஜியின் பொதுவாழ்வை ஆக்கபூர்வமாக அலசியிருந்த நக்கீரனின் கருத்துக்களையும் வெளியிட்டிருக்கிறேன். அதற்கு மறுப்பாக நீங்கள் தெரிவிக்கும் கருத்துக்களையும் வெளியிட்டு மக்கள் பார்வைக்கு வைக்கிறேன். இது என் பத்திரிகை தர்மம். இதை நீங்கள் ...ர்கள்'' என்றார்.

# தேவி தரிசனம்

(மாலே மணிவண்ணா)

4

'வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறைகொண்ட ஆற்றை, அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன
சங்கத் தமிழ்மாலை, முப்பதும் தப்பாமே
இங்கு இப்பரிசுரைப்பர் ஈரிரண்டு மால்வரைத் தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்று இன்புறுவ ரெம்பாவாய்!'

—ஆண்டாள் திருப்பாவை

காலங்கள் தோறும் உண்மைகளை உணர்த்த கண்ணன் நடத்திக்காட்டும் நாடகங்கள் எத்தனை எத்தனையோ!

'மனிதனே! பூமியில் நிகழும் எந்தக் காரண காரியங்களுக்கும் நீ பொறுப்பானவன் அல்ல; வெறும் கடமையை மட்டும் செய்வதற்காகவே பூமியில் ஜன்மம் எடுத்தவன்; பலன்களுக்கு நானே கர்த்தா' என்ற தத்துவத்தை விஜயன் மூலம் உலகத்துக்குச் சொல்ல, குருக்ஷேத்திர மண்ணில் பதினெட்டு நாள் பாரதப் போரையே நடத்தினான் கிருஷ்ணன்.

பரமாத்மாவான ஆண்டவனை அடைய ஜீவாத்மாக்கள் என்ன செய்யவேண்டும் என்ற தத்துவத்தை விளக்க, சர்வலோக பிராட்டியான லட்சுமி தேவியை ஆண்டாளாக அவதாரம் எடுக்கச் செய்து ஸ்ரீ வில்லிபுத்தூர் மண்ணில் எம்பெருமான் ஆடிய நாடகங்களும் எண்ணற்றவை.

தான் சீராட்டிப் பாராட்டி வளர்க்கும் செல்வ மகள் கோதை, ஸ்ரீலட்சுமியின் அவதாரம்தான் என்று பெரியாழ்வாருக்கு உணர்த்த அவன் ஆடிய நாடகம்தான், அந்த 'மாலை சூட்டல் விளையாட்டு.' கோதை சூடிக் கொடுத்த மாலையைத் தான் பெருமாளுக்கு சூட்டியதால் 'அபசாரம்' நேர்ந்து விட்டது என்று புலம்பித் தவித்த பெரியாழ்வாரின் கனவிலே காட்சி தந்து, ''ஆழ்வாரே, உமது புதல்வியின் பெருமையை நீர் அறியவில்லை. அவள் எம்முடையவள். அவள் சூடிக் கொடுத்த மாலைதான் எமக்கு உகந்தவை. இனி தினமும் அவள் சூடித் தரும் மாலைகளையே நீர் எமக்குச் சாற்ற வேண்டும்!'' என்று கூறி அருளினான்.

அன்று அந்த வார்த்தையைக் கேட்டு ஆழ்வார் பரவசமடைந்தார். 'தான் சூடிக் களைந்த மாலையை எம்பெருமானுக்கே அளிக்கும் அளவு என் மகள் பெருமை பெற்றவளா?' என்று பூரித்தார் அவர்.

ஆனால், பரம நாயகனான ஸ்ரீமந் நாராயணனே அந்த சம்பவத்தின் மூலம் உலகுக்கு மறைபொருளாக ஓர் அரிய தத்துவத்தை உணர்த்திய வாறு ஒளிமயமாகப் புன்னகை பூத்து நின்றான்.

ஆண்டாள் சூடிக் கொடுத்த 'அபசாரத்தை' எம்பெருமான் உண்மையில் அபசாரம் என்று கருதியிருந்தால், அந்த அபசாரத்தை மன்னித்து அதை அன்றோடு நிறுத்தச் செய்திருப்பான்.



பொன்.பாஸ்கரமார்த்தாண்டன்



ஆனால், பெருமானே, தினமும் ஆண்டாள் சூடிக் கொடுத்த மாலையையே தமக்குச் சாற்ற வேண்டும் என்று திருவுளம்பண்ணிக் கட்டளையிட்டான்.

எம்பிரானின் அக்கட்டளைக்குக் காரணம் என்ன...?

அந்த தேவ விளையாட்டின் உண்மை நமக்கு எளிதில் புலப்படவில்லை... ஒருவேளை பெருமாளின் சந்நிதியில் அந்த விளக்கம் கிடைக்குமோ? அவரை தரிசிக்க விழைகிறோம்.

அதோ! ஆண்டாள் சந்நிதியிலிருந்து முந்தியநாள் இரவு பிராட்டி சூடிக் களைந்த மாலை ஸ்தானிகர்களால், மேளதாளங்களுடன் வடபுறமிருக்கும் வடபத்ர சாயி பெருமாள் சந்நிதிக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. நாமும் தொடருகிறோம்...

அந்தத் திருக்கோயிலில் நம் பாதம் படும்போது நம் உள்ளம் பரவசத்தால் புல்லரிக்கிறது. எத்தனை மகிமை பெற்ற திருத்தலம் அது!

இன்றிருக்கும் ஆண்டாள் நாச்சியாரின் சந்நிதி அன்று பெரியாழ்வார் வாழ்ந்த மாளிகையாக இருந்தது. தான் மனிதப் பிறவி எடுத்து வளர்ந்த இடத்திலேயே மணாளரான ரங்கமன்னருடன் கோயில் கொண்டிருக்கிறாள், தாயாரான ஆண்டாள். அதை அடுத்துப் பிராட்டி அவதரித்த பெரியாழ்வாரின் நந்தவனம். ஆண்டாள் நீராடி மார்கழி மாதம் பாவை நோன்பு நிறைவேற்றிய திருமுக்குளம், அவள் மாலை சூடி அழகு பார்த்த கண்ணாடித் தீர்த்தம். மற்றும் விஷ்ணு தீர்த்தம், திருப் பாற்கடல், சக்ர தீர்த்தம், நூபுர கங்கை, கோனேரி தீர்த்தம், ரெங்க தீர்த்தம், பஞ்ச தீர்த்தம் ஆகிய ஒன்பது தீர்த்தங்கள். – இப்படிப் பல புனிதப் பெருமைகளும் லௌகிக மாந்தருக்குப் பிரமிப்பூட்டும் சில 'பெரிய' பெருமைகளும் பெற்ற திருத்தலம் அது. ஆம்! தமிழ்நாட்டிலேயே பெரிய தேர்களில் ஒன்று ஸ்ரீ வில்லிபுத்தூர் ஆண்டாள் திருத்தேர். (இன்னொன்று திருவாரூர் தியாகராஜர் தேர்). அதே போல் கோபுரமும்! 'மகாமேரு மலை போன்றது' என்று கவியரசர் கம்பர் உவமானம் கூறிப் புகழ்ந்திருக்கும் பிரம்மாண்டமான கோபுரம்.

இத்தகைய பெருமைகளுக்கும் தலையாய தலப்பெருமை ஒன்று உண்டு. அதாவது: ஆண்டாளின் இத் திருக்கோயிலை

நிர்மாணித்த ஆதித் தர்மகர்த்தா, பெரியாழ்வார்; கோயில் கொண்டிருப்பவர்கள், உலகாசார வழக்கப்படி - தர்மகர்த்தாவின் மகளும்—மருமகனும்!

மனித குலத்தோடு இப்படி மனோரம்ய உறவுகளைத் தோற்றுவித்து மாய நாடகம் ஆடும் மகாவிஷ்ணுவின் தரிசனம் காண நடக்கிறோம்....

பாதையெங்கும் பக்தி மணம்... அதோ காலத்தை வென்ற கீத மணம் அங்கு வீசுகிறது. ஆண்டாள் அவதாரத்தால் பெருமை பெற்ற — பெரியாழ்வார் உருவாக்கிய அந்த நந்தவனத்தைத் தரிசிக்கும் போது, பெரியாழ்வாரின் பிரபந்தங்களும் ஆண்டாளின் பாசுரங்களும் நம் காதுகளில் ஒலித்து மெய் சிலிர்க்க வைக்கின்றன..... பக்தியும், காதலும் பாமாலையாக மணம் வீசுகின்றன, அங்கே. ஆண்டாளின் கனவுகளையும், கற்பனைகளையும் 'கண்டும், கேட்டும்' அனுபவித்த கல்லும், மண்ணும் இன்றும் அங்கேதான் இருக்கின்றன....



வேதபிரான் பட்டர்



பாபு அய்யங்கார்

அந்த நந்தவனத்தில் நடந்த மகத்தான சம்பவங்களை-இன்றும் மாதாந்திர, வருடாந்திர திருவிழாக்களாக ஸ்ரீவில்லிபுத்தூர் திவ்யதேசம் நினைவு கூர்ந்து கொண்டிருக்கிறது....

ஆடி மாதம் பூர நட்சத்திரத்தில் ஆண்டாள் அவதரித்ததை நினைவுபடுத்த 10 நாட்கள் திருவாடிப் பூர உற்சவம். அந்த உற்சவத்தில் நடக்கும் பெரியாழ்வார் மங்களாசாசன விழா...

மார்கழி மாதத்தில் ஆண்டாள் பாவை நோன்பு ஏற்று நிறைவேற்றிய எண்ணெய்க் காப்பு உற்சவம்... தான் விரும்பிய நாரணனை திருமணம் செய்ய ஆண்டாள் கைக்கொண்ட பாவை நோன்பு விழா..... திருப்பாவை பாடி, தோழியருடன் திருமுக்குளத்தில் நீராடி நோன்பு நிறைவேற்றிய அந்தக் காட்சி நம் நினைவில் நிறைகின்றன.



ஆண்டாள் திருக்கல்யாணத்தை நடத்தி வைக்க வந்து அருகிலிருக்கும் திருவண்ணாமலையில் எழுந்தருளிய ஸ்ரீனிவாசப் பெருமாள் கோயில்

'ஊனிடை யாழி சங்கு உத்தமர்க் கென்று
உன்னித் தெழுந்த என் தடமுலைகள்
மானிடவர்க் கென்று பேச்சுப் படில்
வாழகில்லேன் கண்டாய்....'

"ஸ்ரீசங்கு சக்கர நாயகனை ஸ்ரீமந் நாராயணனை அல்லாமல் மானிடர் எவரையும் மணக்கும் பேச்சில்லை" என்று அறிவித்து—அவனை அடைந்தே தீருவேன் என்று பக்தி பெரும்நோன்பு ஏற்கிறாள் ஆண்டாள்.

மகளின் வைராக்கியத்தைக் கண்ட விஷ்ணுசித்தர் திகைத்து — பின் மனம் தெளிந்து, 'கோதையே, எத்தலத்தில் உறையும் பெருமானை நீ கைத்தலம் பற்ற விரும்புகிறாய்?' என்று வினவுகிறார். 'குணதிசை பாதம் நீட்டி குடதிசை சிரசு வைத்து வடதிசை பின்பு காட்டி தென்திசை இலங்கை நோக்கிப் பள்ளிகொண்டிருக்கும் திருவரங்கனே என் நாயகன்' என்கிறாள் ஆண்டாள்.

அரங்கநாதப் பெருமான் தெற்கு நோக்கிப் பள்ளி கொண்டிருப்பது தெற்கே உள்ள இலங்கையை நோக்கித் தான் என்று ஆழ்வார் என்றோ பாடியது சரியல்ல என்று அப்போதுதான் தெரிகிறது. தெற்கிலிருக்கும் ஸ்ரீவில்லிபுத்தூரைப் பார்த்து — அங்கு பிறக்க விருந்த ஆண்டாளை ஆட்கொள்ள காலம் நோக்கித்தான் அரங்கன் அப்படி தென்திசை நோக்கிப் பள்ளி கொண்டிருந் திருக்கிறானோ...?

தன் திருமகளின் குறிப்புணர்ந்து பெரியாழ்வார் திருவரங்கப் பெருமானை வேண்டுகிறார். ஆண்டாளைத் தன்னிடம் அழைத்துவர அரங்கனின் அழைப்பு கிடைக்கிறது. கோலாகலத்துடன் ஆண்டாளைத் திருவரங்கத்துக்கு அழைத்துச் செல்கிறார் பெரியாழ்வார். அங்கே, அரங்கனுடன் ஆண்டாள் கலந்து தன் அவதாரப் பெருமையை நிறைவு செய்கிறாள். பங்குனி உத்திரத் திருநாளில் ஆண்டாள் பெருமாளால் ஆட்கொள்ளப்பட்டு வதுவை கொண்ட வைபவம் திருவரங்கத்திலேயே நிகழ்ந்ததாக ஒரு வரலாறும், பெரியாழ்வாரின் விருப்பத்துக்கு இணங்க ஸ்ரீ வில்லிபுத்தூரில் நிகழ்ந்ததாக ஒரு வரலாறும் கூறுகிறது.

ஸ்ரீரங்கம் ஆனால் என்ன, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆனால் என்ன? அவன் இல்லாத தலம் ஏது...? எங்கும் நிறைந்த அந்தப் பரம்பொருள், பார்ப்பவர்களுக்குப் பார்க்கும் இடம் எல்லாம் பார்க்க விரும்பும் கோலத்தில் காட்சி தந்திருப்பானே...!

அவன் நடத்தாத லீலைகள்தான் ஏது.. ஆடாத நாடகம்தாம் ஏது?



வடபத்ர சாயி என்னும் பெயர் கொண்டு சேவை சாதிக்கும் பெருமாள், ஆண்டாள் நாச்சியார் சூடிக் கொடுத்த மாலையை ஏற்று ஆனந்தத்துவமாய் சுடர்விட்டுச் சிரிக்கும் சிரிப்பில் சிந்தும் மாயங்கள் எத்தனை..... மாயையை அறுத்து முக்தி தரும் மகிமைகள் தாம் எத்தனை! எத்தனை!!

அந்தத் திருத்தலத்தில் நிகழும் ஆறுகால பூஜையிலும், அரியது—அந்த மாலை சூடும் விசுவரூப தரிசன பூஜைதான்.

பெண்கள் தம் மலர்க் கரங்களால் தொட்டுக் கணவனைத் துயிலெழுப்புவார்கள். ஆண்டாளோ தான் அணிந்த துளசி மலர் மாலையை அனுப்பி, நாயகனும் கண்ணனைத் துயிலெழுந்து விசுவரூப தரிசனம் அளிக்கச் செய்கிறாள்!

## வாழ்த்துப்பெறும் வாரப்பிரமுகர்



பிப்ரவரி 3-ம் தேதி. இரவு சுமார் பத்து மணி. மதுரையில், பாண்டியன் போக்குவரத்து கார்பொரேஷன் பஸ் ஒன்று 3-ம் நம்பர் ரூட்டில், ஓடிக் கொண்டிருக்கிறது. திடீரென பிரயாணம் செய்யும் முத்துராக்கு என்ற 25 வயதுப் பெண்ணுக்கு பிரசவ வேதனை உண்டாகிறது. டிரைவர் வி. பழனிச்சாமி பஸ்ஸை வேகமாக ஓட்டிச் சென்று மருத்துவமனைக்கு முன்னால் நிறுத்துகிறார். பஸ்ஸிலிருந்த டாக்டர் ஒருவர் மருத்துவ உதவி புரிகிறார். பாண்டியன் பஸ்ஸில் பிறந்த அந்த ஆண் குழந்தைக்கு 'பாண்டியன்' என்றே பெயரிடுகிறார்கள்!

இரவு மணி பத்து என்றபோதிலும், தன் கடமையைப் பொறுப்புடன் செய்து தக்க சமயத்தில் தாயையும்—சேயையும் காத்துப் பணிபுரிந்த **டிரைவர் பழனிச்சாமியை**—இந்த வாரப் பிரமுகராகப் பாராட்டி வாழ்த்துகிறோம்.

(போட்டோ உதவி: பாண்டியன் போக்குவரத்துக் கழகம்)

திருமாலின் விசுவரூப தரிசனம் கண்டு தொழுது நிற்கிறோம். பிராட்டியரான ஸ்ரீ தேவியும், பூதேவியும் திருவடிகள் பற்றி நிற்க; நாபிக்கமலத்தில் பிரம்மா எழுந்தருளியிருக்க; பஞ்சாயுதங்களான சங்கு, சக்கரம், கதை, கத்தி, வில் ஆகியவை பஞ்சமூர்த்திகளாகச் சேவித்து நிற்க, தும்புரு நாரதர் முதலான தேவர்கள், ரிஷிகள் சூழ்ந்து நிற்க; சூரியன் — சந்திரன், பிருகு, மார்க்கண்டேயன் ஆகியோர் வணங்கி நிற்க — அந்தத் திருக்கோலம் கண்ட கோடானுகோடிப் பக்தர்கள் உருகி நிற்க - எம்பெருமான் போக சயனத்தில் பள்ளி கொண்டிருக்கிறார்.

அண்ணலின் அழகுக்கு அழகாக அணி செய்து மணம் வீசிப் பொலிகிறது ஆண்டாள் நாச்சியார் சூடிக்கொடுத்து அனுப்பிய மாலை...

அந்த மாலையை வைத்து மாதவன் நடத்தும் மாய நாடகம் அத்தோடு முற்றுப் பெறவில்லை.

ஆண்டாளின் மாலை அரங்கன் மார்பை அலங்கரித்ததோடு அமைந்து விடவில்லை. அதன்பின் அதைக் களைந்து அருகே தனிக் கோயில் கொண்டு நித்ய தவம் செய்யும் பெரியாழ்வாருக்கு பிரசாதமாக அனுப்பப்படுகிறது.

இப்படி ஒரு மாலை பரிவர்த்தனை நிகழ்த்தி அந்தத் தலத்தில் மாயவன் உணர்த்தும் அந்தத் தத்துவம்தான் என்ன?

புரியாத அந்தக் கேள்விக்கு அந்தப் போக சயன லீலாவிநோதனிடமே பொருள் கேட்டுக் கைகூப்பி நிற்கிறோம். புவனங்களைத் தன் பொன்னொளிர் புன்னகையாலே காத்து நிற்கும் அந்தக் கார்மேக வண்ணன் — கள்ளமாய் கனிவாய் கருணையாய் வேதங்களின் கருப்பொருளாய் சிரிக்கின்றான்.

வேதவிளக்காய் ஜொலிக்கும் அவன் சிரிப்பில் புரியாத புதிர்கள் பொருள் படுகின்றன. அஞ்ஞானத் திரைகள் அகலுகின்றன. ஜெகஜோதியான அவன் சிரிப்பொளியில் மெய்ஞ்ஞானம் பூத்துச் சிரிக்கின்றது....

அதோ! அவன் மனித குலத்துக்கு அருள்விளக்கம் தருகிறான்.

பக்தி செய்யும் பாதையை உலகுக்குக் காட்டவே பாற்கடல் நாயகியான லட்சுமி தேவி ஆண்டாளாக இப் பூமியில் அவதரித்தாள்....

மனித குலம் முதல் அத்தனை ஜீவ ராசிகளும் மாதவனின் ஓர் அம்சம் என்று உணர்த்தவே மானிடப்பெண்ணாகத் தேவி அவதரித்தாள். மாதவனின் பொற்பாத கமலங்களைப் பற்றிக் கொள்வ மனிதர்கள் செய்யவேண்டுவது வேறொன்றுமில்லை....

உள்ளமே கண்ணன் நினைவாய்-பேரின்பக் காதலாகிக் கசிந்துருகினால் போதும்! கண்ணன் கைக் கொடுத்து ஆட்கொள்வான். இதுவே கோதையாக லட்சுமி அவதரித்து நிகழ்த்திக் காட்டிய பக்திக் கதையின் தத்துவசாரம்...

மாலையை சூடிக் கொடுத்த அந்த மகத்துவத்தின் பொருள் என்ன...? 'மாலை என்பது பகவானை அடைய மனிதன் கைக்கொள்ள வேண்டிய வேதஞானமும் — அறநெறியும்தான்.'

அந்த அறநெறியை உபாசித்து தொழுவது, மாலையைக் கண்ணனுக்கு சாத்துவது போலாகும். ஆனால், கண்ணன் வெறும் உபாசனையையும், தத்துவ துதிகளையும் மட்டுமே ஏற்றுக் கொள்வதில்லை. இறைவனை அடையும் மாலைகளான அறநெறிகளையும் தத்துவ வழிகளையும்முதலில் ஜீவாத்மாக்களாகிய மனிதர்கள் தாமே சூடி, அதாவது கைக்கொண்டு கடைப்பிடித்து, அந்த அறநெறிகளால் தம் ஆத்மசரீரத்தை சுத்தி செய்து மணம் பெறச் செய்தபின்— அவற்றை ஆண்டவனுக்கு அர்ப்பணித்தால் போதும்! அறநெறிகளைத் தாம் சூடி புனிதம் பெற்றவர்களையே பெருமாள் ஆட்கொள்கிறார்...

**அடுத்த இதழில்**
**திருக்கடவூர்**
**அபிராமி அம்மன் தரிசனம்**
**காணச் செல்கிறோம்...**

இந்தத் தத்துவத்தை விளக்கத்தான் அந்தத் தலத்தில் அந்த மாலை நாடகம் ஆடினாரோ, எம்பெருமான் திருமாலும் ஸ்ரீதேவி லட்சுமி பிராட்டியும்...?

மாலே மணிவண்ணா! உன் கோலத் திருமார்பில் திருத்துழாய் பூண்டு, திருநாடு காக்கப் பறவையேறி வரும் பரமதயாளா! தாழ்வுற்ற மனிதப் பிறவிக்கு நின் தாமரை மலர் நாயகியோடு வாழ்வளிக்க வந்த வைகுந்தா! மாயனே, மன்னுபுகழ் வடமதுரை மைந்தனே! தூயனே, எங்கள் நாயகனே! ஆயர் குலத்துதித்த மணிவிளக்கே! நின் நாமம் பாடி, நீள்பிறவி அறுக்க பொன்னொளி போல் வழிகாட்டினாய்... பற்றினோம் நின் பொற்பாதம். போற்றி! போற்றி!!

('மாலே மணிவண்ணா' நிறைவுற்றது)




இவ்விதழில் வெளியான கதைகள் கற்பனையே. கதைகள், கட்டுரைகள், ஆகியவற்றைத் தபாலிலும் அனுப்பலாம்; நேரிலும் பெற்றுக்கொள்ளப்படும்.
கஸ்தூரியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர் அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
[illegible]

# தேவி தரிசனம் (அபிராம வல்லி)

'பூத்தவளே! புவனம்பதி ஞன்கையும் பூத்தவண்ணம்
காத்தவளே! பின் கரந்தவளே! கறைக்கண்டனுக்கு
மூத்தவளே! என்றும் மூவா முகுந்தற் கிளையவளே!
மாத்தவளே! உன்னை அன்றிமற்றோர் தெய்வம் வந்திப்பதே!'

அபிராமி அந்தாதி

1

தெய்வமே, இறைவன்.

உண்மையே! அண்ட புவனங்களையும் வழிநடத்தும் பேரொளி!

—இதுதான் வேதாந்த சாரம். உலகியல் அறநெறிகளின் விளக்கமும் இதுதான்!

ஆனல் இந்த உண்மை தலைகீழாக மாறிவிட்டால் என்ன ஆகும்...?

ஆம்! உண்மையே பொய்யாகவும்,; பொய்யேஉண்மையாகவும் மாறினல்....

உலகம் அழிந்து போகாதா? ஊழிப் பெருநெருப்பு மூண்டுவிடாதா? அண்ட சராசரங்களும் திசைமாறிப் போகாதா? அனைத்துயிர்களும் கதிமோட்சமற்றுத் தடுமாறிப் போகாதா...?

...ஆம்! அத்தனை உற்பாதங்களும் நடந்துவிடத்தான் செய்யும். வேதங்களும் பிரணவ தத்துவங்களும் அப்படித் தான் சொல்கின்றன.

ஆனல் அப்படியொரு மாற்றத்தை—அதாவது தெய்வாம்சமான உண்மை பொய்யாகவும்; பொய் உண்மையாகவும் புரண்டுவிடும். மாற்றத்தை வேதநாயகனன பரமேசுவரனும், சர்வலோக நாயகியான அம்பிகையுமே செய்துகாட்டினர்கள் என்ருல்...?

ஆமாம்! அப்படியோர் அற்புதம், நினைக்க முடியாத புதிரான திருவிளையாடல்கள் திருக்கடவூர் திருத்தலத்தில் நிகழ்ந்திருக்கிறது. இறைவனும் இறைவியுமே அந்தத் திருவிளையாடல்களை நிகழ்த்தியிருக்கிறர்கள்.

பொன். பாஸ்கர மார்த்தாண்டன்

எதிரே: அபிராமி அம்மன் கோயில் தோற்றம்

(சில்பியின் வரைகோட்டு ஓவியம்)



**ப**தினாறு வயதில் மார்க்கண்டேயனுக்கு மரணம் என்பது பிரமன் வகுத்த விதியின் நியமம். சத்தியத்தின் கட்டாயம். அந்த சத்தியம் கடைப்பிடிக்கப் பட்டால்தான் திரிபுவனங்களின் இயக்கம் முறைப்படி நடக்கும். அதன்படிதான் எமன் தன் கடமையைச் செய்ய - உண்மையை நிலைநாட்ட மார்க்கண்டேயனுடைய உயிரைக் கவர்ந்து செல்ல வந்தான். குறிப்பிட்ட நேரத்தில் திருக்கடவூர் தலத்திலிருந்த மார்க்கண்டேயன் மீது தன் பாசக் கயிற்றையும் வீசினான்.

ஆனால் நடந்தது என்ன...? உண்மை ஊழியனாக தர்மத்தையே தன் பெயரில் கொண்டு, சத்தியத்தை நிறைவேற்ற வந்த எமதர்மராஜனை - அந்த உண்மையை நிறைவேற்ற விடாமல் இறைவனே தடுத்ததோடு-சத்தியத்தின் ஊழியனை எமனை சம்ஹாரமும் செய்து விட்டார்!

இப்படி, ஓர் உண்மையை அழித்து அதைப் பொய்யாக்கினார் இறைவன்.

அதேபோல் சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு தை அமாவாசை தினத்தில்— தன் பக்தனான அபிராமி பட்டருக்காக ஒரு பொய்யை உண்மையாக்கினாள் சத்திய தத்துவநாயகியான அம்பிகை.

அமாவாசை தினமான அந்த நாளில் சந்திரோதயம் ஆகும் என்று பக்திப் பிரமை நிலையிலிருந்த அபிராமிபட்டர் தன்னையறியாமலேயே ஒரு பொய்யான கூற்றை சொல்லிவிடுகிறார்.

அந்தப் பொய்யை உண்மையாக்க தன் தாடங்கத்தை வானில் எறிந்து சந்திர ஒளியைக் காட்டினாள், பொய்யறு புவனேசுவரியான அன்னை அபிராமி!

ஏன், இப்படி சத்தியத்தையே மாற்றிக் காட்டினார்கள், பரமனும்தேவதேவியும்?

மாந்தர் குலத்தை மாய மயக்கத்தில் ஆழ்த்தவா?

...அல்லது மயக்கத்திலிருந்து மக்களை விடுக்கவா?

இந்த இறை விளையாட்டின் மர்மம் என்ன? உண்மை, பொய் என்ற தத்துவங்கள் எல்லாம்வெறும்மாயைதானா...?

**ஏ**துவும் புரியாமல் அண்டமெல்லாம் பூத்த அபிராமவல்லி கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருக்கடவூர் சந்நதியில் நின்று கொண்டிருக்கிறோம்...

'உதிக்கின்ற செங்கதிரே...!' என்று கணீரென்ற குரலில், நானூறு மைல் தொலைவிலிருந்து அன்னையைத் தரிசிக்க வந்திருந்த கோமதி என்ற பெண்மணி நெக்குருகப்பாடி அன்னையின் சந்நிதியில் துதித்துக் கொண்டிருக்கிறார்.

வலது மேற்கரத்தில் ஜெபமாலை-இடது மேற்கரத்தில் செந்தாமரை, வலது முன்கரம் அபயஹஸ்தம், இடது கீழ்க்கரம் வரதஹஸ்தம் மருங்கையில் கரும்புவில் அணைத்து அருள்ஜோதியாக நின்றருள் புரியும் அன்னை அபிராமி புன்னகை ஒளிவீசிச் சிரிக்கிருள்.

பக்தர் கூட்டம் மெய்சிலிர்த்து, அன்னையின் தேஜோமயமான புன்னகையில் கட்டுண்டு நிற்கிறது.

இந்தப் புன்னகை-இந்தக் கருணை - இந்த ஒளி பொய்யா...?

கடவுள் என்ற இறைமை, உண்மைக்குள்ளோ பொய்மைக்குள்ளோ அடங்கியது அல்ல. ஆனல் உண்மையையும் பொய்மையையும் தனக்குள் அடக்கி அவற்றினும் கடந்து நிற்பது அது. சத்தியத்தால் இறைவனைத் தரிசிக்க முடியும்; ஆனல் சத்தியமே இறைவனின் முழு உருவம் அல்ல.. அதற்கு மேலும் ஏதோ ஒன்று இருக்கிறது...

அதை உலகுக்கு உணர்த்தத்தான் சிவபெருமானின் அட்ட வீரட்ட தலங்களுள் ஒன்ருன (அதாவது இறைவனின் வீரத் திருவிளையாடல்கள்-வீரட்டானம்-வெளிப்பட்ட திருத்தலம்) திருக்கடவூரில் அபிராமிபட்டரைக் கருவியாகக் கொண்டு பொய்மைக்கு ஒரு மாற்றம் காட்டினுள் அன்னை அபிராமி. மார்க்கண்டேயனைக் கருவியாகக் கொண்டு உண்மைக்கு ஒரு மாற்றம் காட்டினுர் உமாமகேஸ்வரர்.

அவர்கள் உணர்த்திய அந்தத் தத்துவம் - உண்மையிலும் மேம்பட்ட அந்த பேருண்மை என்ன...?

ஃ ஃ ஃ

பிறவா வரம் கேட்டு பூமியிலுள்ள ஞானிகள் எல்லாம் தவமிருப்பர். ஆனல் அமர உலகத்துத் தேவர்களோ, இறவா வரம் கேட்டு, இறைவனை வேண்டினர். திருப்பாற்கடல் கடைந்து அமுதம் அருந்தினல் மரணம் இல்லை என்று அறிவிக்கப்பட்டது. மேரு மலையை மத்தாகவும், வாசுகி எனும் பாம்பை கயிருகவும் கொண்டு தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்தனர். பின் தேவர்கள் திருமால் உதவியால் அதைத் தாம் மட்டுமே உட்கொள்ளும் பேறு பெற்றனர்.

அதை எங்கே வைத்து உண்பது என்பது பிரச்னையாயிற்று.

''பூவுலகில் வில்வாரண்யம் என்னும் ஞான பூமி ஒன்றிருக்கிறது. அங்கு சென்று அருந்துக!'' என்று இறைவனின் கட்டளை பிறந்தது.

இன்றைய திருக்கடவூர்தான் அன்றைய வில்வாரண்யம். முன்பு ஞானோபதேசம் பெற விரும்பி பிரமதேவன் இறைவனை வழிபட்டான். அப்போது இறைவன் வில்வ விதைகளைப் பிரமனிடம் தந்து, 'இந்த வில்வ விதையைப் போட்ட ஒரு முஹூர்த்தத்துக்குள் எந்த இடத்தில் முளைக்கின்றதோ அந்த இடத்தில் தங்கி எம்மை வழிபடு!



இது திருக்கடவூர் மசானக் கோயிலில் இருக்கும் ஓர் பார்வதி தேவி திருவுருவம். நடராஜரின் அற்புதத் திருநடனம் கண்டு அன்னை உமையவள் மகிழ்ந்திருக்கும் கோலம் இது. இதைப்பற்றி காலம் சென்ற தமிழ் அறிஞர் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் 'பெண்மையின் அடக்கமும் அமைதிப் பரவசமும் நயத்துடன் அமையப் பெற்ற அற்புத உருவச் சிலை' என்று கூறியிருக்கிருர்.

(சமீபத்தில் தேவி தரிசனத்திற்காக பொன். பாஸ்கர மார்த்தாண்டன் திருக்கடவூர் சென்றிருந்தபோது அவரிடம் கூறப்பட்ட தகவல் இது.)

அங்கு உனக்கு ஞானோபதேசம் சித்திக்கும்' என்று அருளினான். அவ்வாறே பிரமன் பல இடங்களிலும் விதைத்துப் பார்த்துப் பயனின்றி, இறுதியாக இந்தத் திருக்கடவூர் தலத்தில் இட்டதும் மறுவிநாடியே அங்கு வில்வ மரங்கள் அடர்ந்த வனமாக தோன்றிவிட்டன. அதனாலேயே அது வில்வாரண்யம் எனப் பெயர் பெற்றது.

ஞானங்களுக்குத் தலைவியான சரஸ்வதி மணாளனான பிரமனுக்கே ஞானம் பெற உதவிய அந்த ஞான பூமிக்கு, அமுதத்தைப் பகிர்ந்துண்ண வருகின்றனர் தேவர்கள்.

அங்கு பொங்கும் 'ஞான வாவி' என்ற தடாகத்தினருகே அமுதத்தை வைத்துவிட்டு நீராடச் சென்றனர். சென்று திரும்பி வரும்போது அமுதத்தைக் காணோம்! அந்த அமிர்த கடம் (குடம்) பாதாளம்வரை ஊடுருவிச் சென்று சுயம்பு மூர்த்தியான சிவலிங்கமாக மாறி நின்றது. அந்த லிங்கமே இன்றும் பக்தர்களுக்கு காட்சிதரும் அமிர்த கடேஸ்வரர்!

தாம் பெற்றுவந்த அமுதம், லிங்கமாக வடிவு கொண்டதும் தேவர்கள் மனம் தளர்ந்து ஈசனை வேண்டி, ''எங்களுக்கு மரணம் இல்லா சிரஞ்சீவி வாழ்வுதரும் அமுதம் லிங்கமாகிவிட்டதே.... அமுதத்தை தந்தருள வேண்டும்!'' என்று புலம்பினர்.

என்ன பேதமை! தேவர்களானாலும், அவர்களுக்கும் அஞ்ஞானம் விலகவில்லையே! 'இறவா வரம் தரும் அமுதம் உண்மையில் வேறெதுவுமில்லை; இறைவனே முக்தி என்னும் சிரஞ்சீவி வரம் தரும் அமுதம்!' என்பதை உணர்த்தத் தானே அமுதத்தை சிவலிங்கமாக மாற்றிக் காட்டினார் ஈசன்! அப்படியிருந்தும் தேவர்களுக்கு அஞ்ஞான மாயை விலகவில்லை. மீண்டும் அமிர்தம் வேண்டும் என்றே இறைவனிடமே கேட்டனர்.

இறைவன் மோகனமாகப் புன்னகைத்து, 'இன்னும் அமுதம்தான் வேண்டுமா?' என்று மனத்தில் நினைத்துக் கொண்டு, ''நீங்கள் இந்த இறவா வரம் பெறுவதற்கு முன் முழுமுதற் கடவுளான கணபதியைத் தொழுதிருக்க வேண்டும். அவரைத் தொழுங்கள்.'' என்றார்.

கணபதியை தொழுதாலாவது ஞான வழியைப் புரிந்து கொள்வார்கள் தேவர்கள் என்று இறைவன் திருவுளம் கொண்டார். அப்போதும் அவர்கள் புரிந்துகொண்டபாடில்லை.

அவர்கள் கணபதியைத் தொழுது அமுதம் வேண்டினர்.

கணபதி வரம் தந்து அவர்களை மீண்டும் ஞானவாவியில் அமுதத்தைத் தேடச் செய்தார். அப்போதும் அமுதம் அவர்களுக்குக் கிட்டவில்லை....

அமுதத்தை அவர்கள் கண்ணுக்குப் புலப்படாமல் மறைத்து சோதித்ததால், 'கள்ளவாரணப் பிள்ளையார்' என்று அத்தலத்தில் பெயர் பெற்றார் கணபதி.



வில்லேந்திய சிங்கார வேலர்.

கோவிந்தராஜன் என்ற இளைஞர் இரண்டாவது வகுப்புவரையே படித்தவர். இடையில் தனக்குவந்த முடக்கு வாதத்துக்கு வேறு மருந்து கிடைக்காமல் இத்தலக் கோயிலில் இடம்பெற்ற வில்லை ஏந்திய சிங்கார வேலவரைத் தொழுதே அவர் அருளால் குணம் அடைந்த பிறகு பக்திப் பிரசங்கம் செய்யும் அளவு புலமை பெற்றிருக்கிறார். இன்றும் இக்கோயிலில் தெய்வப்பணி புரிந்துவருகிறார்.

கணபதி ஞானமுதல்வர். அவரைத் தொழுதபின் தொடர்ந்து ஞானத்தின் எல்லையான மகாசக்தியையும் அவர்கள் தொழுதிருக்க வேண்டும். அதை உணராமல் தடாகத்தில் அமுதத்தைத் தேடிக்கொண்டிருந்த தேவர்களுக்கு மீண்டும் கட்டளை பிறந்தது.

''மகா சக்தியான உமையவளின் திருவருள் இன்றி உங்கள் முயற்சி





மார்க்கண்டேயன் காசியிலிருந்து புறப்பட்டு ஒவ்வொரு திருத்தலமாக இறைவனை வணங்கி வந்து கடைசியில் தனது 16-ஆம் வயதில் வழிபட்ட தலம் இது. தன் சிவ பூஜைக்காக கங்கையையும் உடன்கொண்டு வந்ததாக இதிகாச வரலாறு கூறுகிறது. அப்போது அக்கங்கை நீரோடு ஒரு ஜாதி மல்லிகை மலரும் வந்ததாம். அதுவே இன்றும் இறைவனுக்குச் சாத்தப்படுகிறது. இங்கு உள்ள ஜாதிமல்லிக்கொடி வருடம் முழுவதும் இறைவனுக்காக பூத்து மலர் தரும் காட்சி ஓர் அதிசயம். பொதுவாக ஜாதி மல்லிகை குறிப்பிட்ட ஒரு காலத்தில் தான் பூக்கும்.

எதுவும் சித்திக்காது. அவளைத் தொழுங்கள்!'' என்றார் இறைவன்.

திருமால் அவர்களுக்கு அபயம் தந்தார். தன் மார்பில் அணிந்திருந்த ஆபரணமான மாதணியைக் கழற்றி வைத்து பார்வதி தேவியை அந்த ஆபரணத்தில் காட்சிதர வேண்டினர்..

அடுத்த கணமே - அஞ்ஞான இருள் மண்டிக்கிடந்த வில்வவனமே ஜோதி ஒளியாய்ப் பிரகாசித்தது... ஆபரணத்திலிருந்து உதிக்கும் செஞ்சுடராய், அந்த அணிக்கு அழகாய், அணுகாதவர்களுக்கும் பிணியாய், அதிசய வடிவாய், அந்தரியாய், சுந்தரியாய், அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லியாய் எம் அன்னை அபிராமவல்லி அங்கே பிரசன்னமானாள்!

(தொடரும்)



வழக்கம் போலத்
தானே வலிக்கும்
நானும் வழக்கம்
போலத்தானே
கத்தணும் ?
நிதிமந்திரி
பட்ஜெட்

இன்னிக்கு
பத்திரிகையிலே
விபத்துச்செய்தி
ஏதாவது உண்டா?
பேப்பரே
வரல்லே!
மெஷின்
உடைஞ்சு
போச்சாம்!

தேர்தல்
ஓட்டுச்சாவடி
ஓய்!
கைரேகை!
ஓட்டுச்சாவடி
பக்கத்துலே
இருக்கிறதைப்
பார்க்கல்லியா..
கிளப்பு, கிளப்பு!

## வெறும் 'கை' அமைச்சர்

ஆடம்பரத்தை விரும்பாதவர் அமைச்சராக இருக்க முடியுமா...? முடியும். எடுத்துக்காட்டு...

உள்ளாட்சித்துறை அமைச்சர் கா. காளிமுத்து.

மந்திரிப் பதவிக்கு வந்தபிறகுகூட இவர் கையில் கடிகாரம் கட்டிக் கொண்டதில்லை. கடிகாரம் கட்டாத ஒரே தமிழக அமைச்சர் இவர்தான். வலது கையில் ஒரு மோதிரம் மட்டுமே அணிந்துள்ளார்.

எட்டு முழ வேட்டி கட்டி, முழுக்கை சட்டையை மடக்கிவிட்டுக் கொண்டு எளிமையாக சட்டசபைக்குள் நுழைவது இவர் வழக்கம்.

''படிக்கும் பொழுதே காதலித்துத் திருமணம் செய்து கொண்டவர்'' என்று யாராவது இவரைப்பற்றிச் சொன்னால் நம்பமுடியவில்லை.

## துண்டுக்கு ஒரு போடு

சமீபத்தில் காலஞ்சென்ற சி. பி. சிற்றரசு பற்றி ஒரு நண்பர் கூறிய செய்தி இது:

''அண்ணா திராவிடநாடு கோரி வந்த நாளில் சி. பி. சிற்றரசு ஒரு மேடையில் பேசிக் கொண்டிருந்தாராம். கூட்டத்திலிருந்த ஒருவர் ஒரு துண்டுக் கடிதத்தில், 'நீங்கள் எதற்காக துண்டு போட்டுக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டுத் துண்டுக் கடிதம் கொடுத்து அனுப்பினாராம்.

உடனே அக்கடிதத்தைப் பிரித்துப் படித்துவிட்டு மைக்கில் அவர் பதில் சொல்லலானார்...

''நான் துண்டு போடுவதில் ஆசைப் படுபவன். அதிலும் நாட்டைத் துண்டு போட்டுப் பார்க்க நிரம்ப ஆசைப் படுபவன். அதைப் பாராட்டும் வகையில் எனக்குத் துண்டு போட்டிருக்கிறார்கள் என்பதை இந்தத் துண்டுகள் (கடிதத்தைக் காட்டி) உணரட்டும்'' என்று ஒரு போடு போட்டாராம்!

# "நோட்ஸ்"


அமைச்சர் காளிமுத்து

## அகதி என்றால் அலர்ஜி

அகதிகள்!

இப்படியொரு வார்த்தையை சமூக நலத்துறை அமைச்சர் பி.டி. சரசுவதியிடம் யாராவது சொன்னால் உடனே அவருக்குக் கோபம் வந்துவிடும். அப்படிச் சொன்னவரைப் பார்த்து முகம் சுளிப்பார். இனிமேல் அவர்களை அப்படிக் குறிப்பிடாதீர்கள். 'தாயகம் திரும்பியவர்கள்' என்று குறிப்பிடுங்கள் என்பார்.

திருமகள் தையல் இயந்திரம் பரிசளிப்பு விழாவில் அதன் உரிமையாளர் ஏ. கிருஷ்ணமூர்த்தியை அனைவரும் 'பர்மாவிலிருந்து அகதியாக வந்தவர்' எனக் குறிப்பிட்டுப் பேசிய பொழுது அமைச்சர், 'அவர் அகதியல்ல. தாயகம் திரும்பியவர்' என்று திருத்தம் கூறினார்.

## ஜெயப்பிரகாஷின் அம்மா

அமைச்சர்கள் நீங்கலாக மற்ற எம்.எல்.ஏ.-க்களை எடுத்துக்கொண்டால், பெண்களின் பிரதிநிதியாக தமிழக சட்டசபையில் இடம் பெற்றிருக்கும் ஒரே ஒரு பெண் எம். எல். ஏ. மொடக்குறிச்சி சுப்புலட்சுமிதான். பி.எஸ்ஸி., பி.டி., பட்டதாரி இவர்.

இவர் தங்கியிருக்கும் சட்டமன்ற உறுப்பினர் விடுதி அறை எண். 201. இந்த அறைக்கும் பெண் எம்.எல்.ஏ.-க்களுக்கும் ஒரு தொடர்பு உண்டு. தி. மு. க. ஆட்சி காலத்தில் தாராபுரம். பெண் எம்.எல்.ஏ. பழனியம்மாள் தங்கியிருந்ததும் இதே 201-ம் எண் அறையில்தான்!


சுப்புலட்சுமி

சுப்புலட்சுமியின் தொகுதியான மொடக்குறிச்சி அமைந்துள்ள இடம் காவேரி நதியின் மையப்பகுதியாகும். (நீளத்தில்). இத்தொகுதியிலிருந்து இவர் சமீபத்தில் வெள்ள நிவாரண நிதிக்காக 67,000 ரூபாய்வரை நிதி வசூல் செய்து கொடுத்துள்ளாராம். அதிக தொகை வசூல் செய்து கொடுத்த எம்.எல்.ஏ. இவர்தான்.

திருமணமான இவருக்கு ஒரே ஒரு மகன் உண்டு. பெயர் ஜெயப்பிரகாஷ்.

— அப்சர்வர்



# தேவி தரிசனம்

'அழகுக்கு ஒருவரும் ஒவ்வாதவல்லி; அருமறைகள்
பழகிச் சிவந்த பாதாம்புயத்தாள், பனி மா மதியின்
குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்பு இருக்க
இழவுற்று நின்ற நெஞ்சே! இரங்கேல், உனக்கு
என் குறையே!'

—அபிராமி அந்தாதி

## 2

"பள்ளிக்கூடத்தில் போய் படித்துக் கொண்டு வா!' என்று ஒரு மாணவனை அனுப்புகிறோம். பள்ளிக்கூடத்துக்குப் போன பையன், பரீட்சை முடிந்ததும் வீட்டுக்குத் திரும்பவேண்டியதுதானே... பள்ளிக்கூடம் சுகமாக இருக்கிறது என்பதற்காக அங்கேயே தங்கிவிட முடியுமா?''

என்று ஒரு நயமான கேள்வியை, நம்மிடம் பேசிக் கொண்டிருக்கும்போது கேட்கிறார்கள், தருமபுரம் ஆதினம் 26-வது குரு மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்.

அன்னார் குறிப்பிட்ட பள்ளிக்கூடம் வேறொன்றுமில்லை; மனிதப் பிறவிதான்.



அமிர்த கடேசுவரர் கோயிலின் வடக்குப்பிரகாரம்

# (அபிராம வல்லி)

மாணவன் என்பது ஆத்மா, வீடு என்பது இறைவனடி.

''பூமியில் மனிதனுகப் பிறந்து உன் ஆத்மா கடைத்தேறப் பக்குவப்பட்டு பரீட்சை எழுதி முடித்துவிட்டு எம்மிடம் வந்து சேர்!'' என்று ஒவ்வொரு ஜீவனையும் இறைவன்(பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவதுபோல்) பூமிக்கு அனுப்புகிருன். ஆனுல், மனிதனே மாயையில் மயங்கி, பூமியில் சுகம் கண்டு ஆசாபாசங்களுக்குள் சிக்கிக்கொண்டு விடுகிருன். மரணத்தைக் கண்டால் நடுங்குகிருன். இறைவனடியாகிய சொந்த வீட்டுக்குத் திரும்பிப் போகவேண்டுமே என்று நினைக்காமல், 'பூமியிலேயே இன்னும் கொஞ்சம் தங்கமாட்டோமா' என்று அஞ்ஞானத்தோடு அலைமோதிக் கொண்டிருக்கிருன்!

இதுதான், குரு மகாசந்நிதானம் அவர்கள் கூறிய விளக்கம்.

இந்த அஞ்ஞானம் — இறப்பின்றி என்றும் பூமியில் இருக்க வேண்டும் என்ற ஆசை—அதாவது மரணபயம்— சாதாரண மனிதர்களுக்கு மட்டுமல்லாது இறைவனுடைய காலடியாகிய வீட்டில் இருந்த அமரர்களுக்கும் இருந்ததற்குச் சாட்சியாகத்தான் அமிர்தம் கடைந்தெடுத்த சம்பவம் நிகழ்ந்தது.

'இறவா வரமாகிய முக்தியைத் தரும் அமிர்தம் நானே' என்று உணர்த்த இறைவன் சிவலிங்கமாக மாறிய பின்னும் அவர்கள் புரிந்து கொள்ளாமல் கணபதியையும் அம்பிகையாம் அபிராமவல்லியையும் தொழுது அமிர்தம் பெற்றனர்.

தேவர்கள் புரிந்து கொள்ளாத இந்தப் பேருண்மையை பூலோகத்திலுள்ள மனிதர்களாவது புரிந்து கொள்வார்களா? அதை உணர்த்தத்தான் அந்தத் தலத்தில் இன்னெரு அற்புதத்தையும் நிகழ்த்திக் காட்டினுன் இறைவன்...



அபிராமி அம்மன் திருக்கோயிலைப் பராமரிக்கும் திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதினம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

பொன்.பாஸ்கர மார்த்தாண்டன்

இதோ வடபுலத்தில்... கங்கை நதி தீரம். பதினாறு வயதுகூட நிரம்பாத ஒரு 'ரிஷிகுமாரன். ரிஷப வாகனனை பரம்பொருளின் நினைவன்றி வேறெதுவும் சிந்தையிலின்றி, ஒவ்வொரு தலமாக சிவ பூஜை செய்து கொண்டு தெற்கு நோக்கி வந்து கொண்டிருக்கிறான். அவனைத் தொடர்ந்து கூடவே கங்கை வருகிறது. மலர்ச்செடிகள் வருகின்றன. காணும் சிவலிங்கத்தை யெல்லாம் கங்கையால் அபிஷேகம் செய்து மலர்களால் அர்ச்சித்துக் கொண்டு அவன் வழிநடந்து கொண்டிருக்கிறான். அவனோடு இன்னொருவனும் கண்மறைவாய் தொடர்ந்து கொண்டிருக்கிறான். அவன்தான் மரணத்துக்கு அதிபதியான யமதர்மராஜா. ஆம்! அந்தச் சிறுவனுக்கு விதி முடிந்து கொண்டிருக்கிறது.

பிள்ளைவரம் கேட்ட அவனுடைய தகப்பனார் மிருகண்டு முனிவரிடம் ஈசுவரன் தோன்றி, ''நீண்ட ஆயுள்வரை வாழும் துஷ்ட குமாரன் வேண்டுமா?, பதினாறு வயது வாழ்ந்துவிட்டு இறைவனடி சேரும் சத்புத்திரன் வேண்டுமா?' என்று கேட்டபோது, அந்த முனிவர் 'சத்புத்திரனே வேண்டும்' என்று கேட்டார். அதன்படி 'பதினாறு ஆண்டுதான் உலகவாழ்வு' என்று விதித்து அந்த முனிவருக்கு ஓர் ஆண் குழந்தையை அருளினான் இறைவன்.

அந்தக் குழந்தைதான் அப்போது தலயாத்திரையாக தெற்கு நோக்கி வந்து கொண்டிருந்த அந்த ரிஷிகுமாரனை மார்க்கண்டேயன். அவனுக்கு வயது பதினாறு முடியப் போகிறது. உலக வாழ்க்கைப் பந்தம் அற்றுவிடப் போகிறது. அந்த விதிப்படி-பிரம்ம கட்டளைப்படி - அவனுடைய உயிரைப் பறிக்க பாசமும் கையுமாக மரணதேவன் பின்தொடர்ந்து வருவதை அறியாமல் பாலகனை மார்க்கண்டேயன் தலம் தலமாக நடந்து கொண்டிருக்கிறான்.

மூப்பு - பிணி - சாக்காடு எல்லாவற்றையும் வென்ற அமிர்தசொரூபனை அமிர்தகடேஸ்வரர் கோயில் கொண்டிருக்கும் திருக்கடவூர் அருகே அவன் வரும்போது அவனுக்குப் பதினாறும் வயது முடிந்து கொண்டிருக்கிறது. யமதர்மராஜன் தன் கொலைக்கருவியான பாசக்கயிற்றைத் தயார் செய்து கொண்டிருக்கிறான்.... இன்னும் சிறிது நேரத்தில் அதற்கு வேலை இருக்கும்.

அந்த சிறிதுநேரத்திலும் - விதி முடிந்து கொண்டிருக்கும் அந்த வேளையிலும் - விரிசடைக் கடவுளின் திவ்ய சொரூபமான சுயம்புலிங்க மூர்த்தியாம் அமிர்தகடேஸ்வரரைத் தொழுது கொண்டிருக்கிறான் மார்க்கண்டேயன்.

'வித்தகா' வேத முதல்வா! பிறவியறுக்கும் பெருமானே!' என்று இறைவனைத் தொழுது கொண்டிருக்கிறான் — அந்த விதியறியாப் பாலகன்.

இதோ, வேளை வந்துவிட்டது; விதி முடிந்துவிட்டது. நீதி வழுவா எமதர்மராஜன் தன் பாசக்கயிற்றை வீசுகிறான். அதுகண்டு பதறிய மார்க்கண்டேயன், 'அபயம்அருள்வாய்அமிர்தகடேஸ்வரா!'



என்று சிவலிங்கத்தை அணைத்துக் கொள்கிறான். யமன் வீசிய பாசக் கயிறு மார்க்கண்டேயன் மீது மட்டு மல்லாமல் அவன் அணைத்துக் கொண்டிருந்த சிவலிங்கத்தின் மீதும் விழுகிறது.

மறுவிநாடி எங்கும் உக்கிர அனல் வீசுகிறது. எட்டுக் கரங்கள் எரி குன்றங்களாக மின்ன, முக்கண்களும் திறந்து அக்கினி ஜுவாலை வீச, லிங்கத்திலின்றும் ருத்ரமூர்த்தியாக எழுந்து நின்றார், தேவதேவன். பரமேசுவரனின் அந்த அழிவுக் கோலம் கண்டு, அண்ட சராசரங்களும் விதிர்—விதிர்த்துக் கலங்கின. பஞ்சபூதங்கள் அடங்கி விட்டன. ஆழிசூழ் உலகமெங்கும் ஊழிப் பெருநெருப்பு மூண்டது. சர்வலோக நாயகன் சம்ஹார மூர்த்தியானார். இடதுகாலினால் ஓர் உதை! எமதர்மராஜன் எரியுண்டு சாம்பலானான்!



தன்னை வணங்கும் பக்தர்களுக்கு மரண பயத்தை நீக்கியருள் புரிந்த காலசம்ஹாரக் கடவுளாக இறைவன் அமர்ந்து அருள் புரியும் இத்தலத்தில் பெருமளவில் பக்தர்கள் வந்து சஷ்டியப்தபூர்த்தி விழாப் பூஜைகளையும், ஆயுஷ் ஹோமங்களையும் நடத்துகிறார்கள். அவற்றை அத்தலத்தில் நடத்துவது விசேஷம்.

தன் பிறந்த நாளை ஒட்டி ஆயுஷ் ஹோம பூஜை ஒன்றை இத்தலத்தில் நடத்த குடும்பத்துடன் இலங்கையிலிருந்து வந்திருந்தார் கொழும்புவைச் சேர்ந்த திரு. முதலிகே.

"இலங்கையிலிருந்து பல பக்தர்கள் அடிக்கடி நாடிவரும் தமிழ்நாட்டுத் தலம் இது" என்கிறார் ராஜன் சாஸ்திரிகள்.

அந்தச் சம்பவத்துக்குப் பின்னர் எமன் இல்லாமல், யாருக்கும் மரணமின்றி பூமிபாரம் அதிகமாகவே-ஈசன் சாந்தமாகி எமனை உயிர்ப்பித்தது பின்கதை.

ஆனால் அன்று, அந்தக் கணத்தில் இறைவன் எமதர்மராஜனை அழித்தது. ஓர் உண்மையை அழித்ததுபோல் அல்லவா? ஈசனின் சத்தியக்கட்டளையை நிறைவேற்றவந்த எமனுக்கு ஏன் அக்கினித் தண்டனை....?

'பதினாறு வயதுவரை வாழ்வு' என்று மார்க்கண்டேயனுக்கு வரையறை விதித்த இறைவனே, இவ்வாறு எமனை அழித்து மரணத்தை நீக்கியதன் மூலம், தன் வாக்கையே பொய்யாக்கி விடவில்லையா?

பரம்பொருளே இப்படி முரண்பட்டு பொய்யாகிவிடலாமா...?

—இதெல்லாம் பாமர மாந்தரின் அஞ்ஞான மயக்கம் நிறைந்த கேள்விகள்.

மார்க்கண்டேயனுக்கு எமவாதனையைப் போக்கி அவனுக்கு என்றும் பதினாறு வயதாக்கினாரே ஈசன்.. அதற்கு உண்மையில் என்ன அர்த்தம்?

எமன் அவனுடைய உயிரைப் பிடித்திருந்தாலும் என்ன செய்திருப்பான்? சத்புத்திரனை அவன் ஆத்மாவை இறைவனடியில் கொண்டு போய்ச் சேர்த்திருப்பான். இப்போதும் அதுதானே நடந்தது? எமன் செய்திருக்க வேண்டிய வேலையை ஈசனே செய்து மரணம் இல்லாமலேயே மார்க்கண்டேயனைத் தன் பாதத்தில் சேர்த்துக் கொண்டார்.

மார்க்கடேயன் மீண்டும் பூமியில் தந்தை மிருகண்டு முனிவரோடோ..., அல்லது மனைவி மக்களை அடைந்து மண வாழ்க்கையிலோ—அன்றி பிரம்மச்சரிய தவம் செய்யவோ இல்லை. மரணத்தைத்தான் வென்றானே தவிர மறுபடியும் பூமியில் அவன் வாழவில்லை. பஞ்சமூர்த்திகளாக அவனுக்குக் காட்சி தந்து, அவனை என்றும் பதினாறு வயது சிரஞ்சீவியாக்கித் தன்னோடு ஐக்கியப் படுத்திக் கொண்டார் பரமேசுவரன். வாழ்பவர்களுக்குத் தானே வயது ஏறும்....? பூமிவாழ்வை முடித்து இறைவனோடு இணைந்து விட்டவர்களுக்கோ பிறவியும் அற்றுப் போகிறது; பின் வாழ்வும் வயதும் இல்லா மகோன்னத சிரஞ்சீவி நிலை ஏற்பட்டு விடுகிறது.



எமதர்மராஜன்

அந்த நிலையைத்தான் மார்க்கண்டேயனும் அடைந்தான். ஆம்! எமன் வந்தபோது ஈசனை அபயம் என்று சரணாகதி அடைந்த அவனுக்கு இறவா நிலையும் - பின் பிறவா நிலையும் தந்து தன்னோடு இணைத்துக் கொண்டார் பரம்பொருள்.

தான் தந்த ஆதி சத்திய வாக்கான 'பதினாறு வயது பூமிவாழ்வு - பின் என் பாதம் சேர்வான்' என்ற உண்மையை ஈசன் மீறவில்லையே....

''தன்னையே நம்பினோர் மரணம் என்ற எமவாதனையின்றிப் பேரின்ப நிலையோடு தன்னை வந்து அடையலாம்' என்பதை உணர்த்தத்தான் மார்க்கண்டேயனைக் கொண்டு இத் திருவிளையாடலை நிகழ்த்தினான் சர்வேஸ்வரன்.

'இறைவனைப் பற்றிக் கொண்டால் மரணம் இல்லாமல் பூத உடம்புடன் உலகில் சகல சுகபோகங்களுடன் வாழ்ந்து கொண்டிருக்கலாம்; வாழலாம்' என்று அதற்குப் பொருள் அல்ல.

இறவா வரம் தரும் அமிர்தம் நானே என்று ஈசன் உணர்த்தியதை தேவர்களும் புரிந்து கொள்ளவில்லை.

'மரணபயத்தைப் போக்கி என்னோடு இணையும் நிலையை என்னை அண்டியோருக்குத் தருகிறேன்' என்று மார்க்கண்டேயன் வரலாறுமூலம் பரமன் உணர்த்தியதைப் புவிமாந்தரும் புரிந்து கொள்ளவில்லை.



'மண்ணும் மண்ணுலக வாழ்வுமே' என்ற அஞ்ஞான இருள் பூமியை ஆட்கொண்டிருந்தது.

அந்த அஞ்ஞான இருளை அகற்றிப் பூமியை உய்விக்க திருவுளம் கொண்டாள், இறைவனின் சக்தி உருவமான அம்பிகை.

அந்தத் திருக்கடவூர் திருத்தலத்திலேயே அந்த அற்புதத்தையும் நிகழ்த்துகிறாள், அம்பிகையான அபிராமவல்லி...

ஆஹா! அன்னை அபிராமியின் சந்நிதி நிர்மானுஷ்யமாக இருக்கிறது. அந்த நிர்மானுஷ்ய சூழ்நிலையில் அமானுஷ்யமாக ஒரு குரல் எழுகிறது....

'கிளியே! கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்து ஒளிரும் ஒளியே, ஒளிரும் ஒளிக்கிடமே!'

—அம்பிகை முன்னிருந்து அந்த மனிதர் நெக்குருகிப் பாடிக் கொண்டிருக்கிறார்.

அவர் வாய், இறைவியாம் அன்னை அபிராமியின் புகழன்றி வேறொன்றையும் துதிப்பதில்லை.

அன்னை ஜோதித் திருவுருவம் அன்றி வேறொன்றையும் அவர் காண்பதில்லை. தன் நெஞ்சத்துள் உறையும் அபிராமி அன்றி வேறு தெய்வத்தையும் வழிபட்டவரில்லை அவர்!

காணுமிடமெல்லாம் எம் அம்மை அபிராமியே அவருக்குக் காட்சிநாயகியாய் இருந்தாள்.

இப்படித் தன்னை மறந்து உலகத்தை மறந்து, அன்னை அபிராமியே சிந்தையாக வாழ்ந்த அவரைப், பித்தன் என்று பழிக்கிறது உலகம். ஆனால், அவர் அதனைப் பொருட்படுத்தவில்லை.

அம்மட்டோ! அந்த ஆதிபராசக்தியைச் செவ்வொளியாகக் கண்டு சிவானந்தத் தேன் உண்டு மயங்கிக் கிடந்த அவரைக் 'கள்ளுண்டு மயங்கிக் கிடக்கிறார்' என்றும் கடும் மொழி பேசி நிந்தித்தனர், சுற்றியிருந்தவர்கள்...

யார் அந்த பக்தர்...? அவர்தான் அந்தத் தலத்தில்—சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் வேதியர் குலத்தில் கௌசிக கோத்திரத்தில் அமிர்தலிங்க அய்யர் தம்பதியருக்குக் குழந்தையாகப் பிறந்து — சுப்பிரமணிய அய்யர் என்று பெயர் கொண்டு வாழ்ந்து, அபிராமி மீது தனக்கிருந்த பெரும் பக்தியால், அபிராமிபட்டர் என்று பின்னர் சிறப்பிக்கப்பட்டவர்.

பக்தி எனும் பித்தேறிக் கிடந்த அந்த அருள் போதை நெஞ்சம் வாயிலாகத்தான்-முக்தி எனும் பேரின்ப நிலையைப் பற்றிய தத்துவத்தை இவ்வுலகுக்கு உணர்த்தத் திருவுளம் கொண்டாள் அன்னை.

அன்று—தை அமாவாசை...

அன்று நிகழவிருக்கும் அற்புதத்தை முன் உணர்த்துவதுபோல், இருள் பூண்ட ஞாலமெல்லாம் ஒளி மின்ன, அருள் - மின்ன - அணிதிரள் ஞானப் படை மின்ன - அன்னை பராசக்தி ஜோதிச் சுடராய் சுந்தர நகை காட்டிச் சிரித்துக் கொண்டிருக்கிறாள்.

(தொடரும்)

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், பி. அன்னாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
முகவரி: 44-A, மௌண்ட் ரோட், கிண்டி, சென்னை-600 032.



62-ம் பக்கத்தில் இருப்பவர், பத்ரகாளி புகழ் ராணி சந்திராதான், அவர் கடைசியாக நடித்த 'லாகிரி' என்ற மலையாளப் படத்தில் இப்படித்தான் தோன்றுகிறார். பணக்காரக் குடும்பப் பெண் படிக்கச் சென்ற இடத்தில் போதைப் பொருளுக்கு அடிமையாகி கடைசியில் தன் வாழ்க்கையையே இழப்பதாகக் கதை.

சமாளிக்க வேண்டிவரும். சிலருக்கு பயணம் ஒன்று செய்ய நேரலாம். 19-ம் தேதி நல்ல நாள்.

### தேதிகள் 5, 14, 28

இலேசான நீல நிறப் பொருட்களை உபயோகியுங்கள். அவை அதிர்ஷ்டம் தரும். புதன்கிழமை மகாலட்சுமிக்குப் பூஜை செய்வது உங்களுக்கு மிகவும் நல்லது. இந்த வாரத்தில் ஒரு நல்ல காரியமாவது நடந்தாக வேண்டும். உறவினரால் நன்மை ஏற்படும்; செலவும் ஏற்படும். ஆபீஸில் முன்னேற்றம் உண்டாகும். தொழில், வர்த்தகம் ஆகியவை வளர்ச்சி பெறும். தொழிலாளர்களுக்கு நல்ல ஊக்கம் அளிக்கக் கூடிய செய்தி கிடைக்கும். பிரயாணம் ஒன்று ஏற்க நேரலாம். ஸ்பெகுலேஷன் துறைகளில் ஆதாயம் உண்டாகும். கல்யாணம் ஆகாதவர்களுக்கு அது பற்றிய முடிவு செய்யப்படும். மணமானவர்கள் குதூகலமாக இருப்பார்கள். 23-ம் தேதி யோகமானது.

### தேதிகள் 6, 15, 24

24-ம் தேதி யோகமானது. 18, 27ஆம் தேதிகளில் பிறந்தவர்கள் உங்களுக்குப் பயன்படுவார்கள். பச்சைக் கல் பதித்த மோதிரம் அதிர்ஷ்டம் தரும். அதோடு எதிரியின் பலத்தைக் குறைத்து உங்கள் பலத்தை அதிகப்படுத்தும். குடும்பத்தில் அமைதிக்குக் குறைவு இராது. தொழில், வர்த்தகம் செழிப்படையும். ரேஸ், லாட்டரிகளில் ஓரளவு ஆதாயம் கிடைக்கும். ஆபீஸ் வேலைகளில் தீவிரமாக ஈடுபட வேண்டியிருக்கும். பயணமும் மேற்கொள்ளத் தேவைப்படலாம். கடிதப் போக்குவரத்தால் சாதகம் ஏற்படும். தெய்வகாரியங்களில் ஈடுபடவேண்டிய அவசியம் ஏற்பட்டால் தவிர்க்காமல் ஈடுபடுங்கள்.

### தேதிகள் 7, 16, 25

சுமாரான வாரம் இது. ஒரு நல்லது ஏற்பட்டால், ஒரு சங்கடமும் ஏற்படும். ஒன்றுக்கொன்று சரிகட்டிக் கொண்டு போகும். பெற்றோர் நலத்தில் அக்கறை காட்டவேண்டிய அவசியம் ஏற்படும். ஆபீஸில் அதிகப் பொறுப்பு ஏற்படும். சரியான பயன் இராது. தொழில், வர்த்தகத்தில் மிகவும் கவனம் செலுத்த வேண்டும். இல்லாவிட்டால் நஷ்டம் ஏற்படலாம். கடிதப் போக்குவரத்தில் நிதானம் தேவை. ஸ்பெகுலேஷன் துறைகளில் ஈடுபடாதீர்கள்! மனைவி கணவனிடத்திலும், கணவன் மனைவியிடத்திலும் சகிப்புத்தன்மையோடு பழக வேண்டும். இல்லையேல் சச்சரவு ஏற்படும். 20-ம் தேதி நல்ல தினம்.

### தேதிகள் 8, 17, 26

எதிரியின் கை ஓங்கியிருக்கிறது. எச்சரிக்கையாக இருங்கள். உங்களுடைய அறிவுக் கூர்மையால் எதையும் சமாளித்து விடலாம். ஆபீஸில் தகராறு வைத்துக் கொள்ள வேண்டாம். தொழில், வர்த்தகம் தேங்கி நிற்கும். பொறுமையாக இருக்கத்தான் வேண்டும், ஸ்பெகுலேஷன் துறைகளில் ஈடுபடாதீர்கள். 19-ம் தேதி நல்ல நாள். உறவினர்களால் நன்மை ஏற்படும். பழைய நண்பர் உதவி செய்வார். கணவன்-மனைவி உறவு சுமுகமாக இருக்கும். புதிய திட்டம் எதுவும் இப்போது வேண்டாம். யாரிடமும் அளவோடு பேசிப் பழகுங்கள். சனிக்கிழமை சனீசுவரனுக்கு அர்ச்சனை செய்யுங்கள் அல்லது பிரார்த்தனை செய்யுங்கள்.

### தேதிகள் 9, 18, 27

20-ம் தேதி புதுக்காரியத்தில் ஈடுபட வேண்டாம். 1, 10ஆம் தேதிகளில் பிறந்தவர்களோடு உறவு வைத்துக் கொள்ளுங்கள். இந்த வாரத்தில் மிகவும் கவனமாக எதிலும் பிரவேசிக்க வேண்டும். அனாவசியமான குற்றச்சாட்டுக்கு ஆளாக வேண்டிவரும். பொருள் விரயமும் ஏற்படும். எதிர்பாராத ஒரு நன்மை ஏற்படவும் வாய்ப்பு இருக்கிறது. குடும்பத்தாருடன் அன்போடு பழகுங்கள். கடுமையான குரல் வேண்டாம். ஆபீஸில் வேலைகள் சரியாக நடக்கும். உங்களுக்கு வரவேண்டிய நல்ல சந்தர்ப்பம் சற்றுத் தாமதித்துத்தான் வரும். அமைதியைக் கடைப்பிடிப்பது நல்லது.




ஸ்ரீஅமிர்தகடேஸ்வரர் மூலஸ்தான சந்நிதியின்
பின்புறத் தோற்றம்.

# தேவி தரிசனம்

## 3

'இல்லாமை சொல்லி, ஒருவர்தம்பால் சென்று இழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவிரேல், நித்தம் நீடுதவம்
கல்லாமை கற்ற கயவர்தம்பால், ஒரு காலத்திலும்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே!'

—அபிராமி அந்தாதி

**தா**ன் கீதையைச் சொல்வதற்கான ஒரு சூழ்நிலையை உருவாக்கவே கண்ணன் மகாபாரதப் போரை உருவாக்கினான். தான் சொல்லும் கீதையை புவிமாந்தர் சார்பில் கேட்பதற்காகவே பாண்டு குமாரனை அர்ச்சுனனுடன் தோழமை கொண்டு—அவனுக்குச் சாரதியாகவும் அமைந்தான் கண்ணன்.

இது ஏன்...?

ருக் - யஜூர் - சாமம் - அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களையும் இறைவன் உலகத்துக்கு அமைத்துத் தந்த வழி வேறு; ஐந்தாம் வேதமாகிய கீதையைப் பரமாத்மா உலகுக்கு அருளிய முறை வேறு. கீதையை மட்டும் அவன் மனிதப்போராட்டத்தின் பின்னணியில், ஒரு மனிதனுக்குச் சொல்லும் வியாஜ்யத்தில் சொன்னான்.

அதற்குக் காரணம், மனித குலத்துக்குச் சொல்லப்படும் நீதிகளை மனிதர்களிடமோ — மனிதர் வாயிலாகவோ சொல்லி வெளிப்படுத்தினால்தான் அது அவர்கள் மத்தியில் நிலைத்து நின்று பயன் தரும். அர்ஜுனன் என்ற மனிதனுக்குச் சொல்லி பூமியில் பரவ விட்டதால்தான் — மற்றைய வேதங்களை விட, கீதை சாமானிய மனிதர்கள் மத்தியிலும் நிலைத்து நிற்கிறது.

மேலதிகாரிகள் சில சமயத்தில் கிராம மக்களுக்கு ஏதாவது செய்தியைச் சொல்ல வேண்டுமானால் நேரிடையாகச் சொல்வதில்லை. அந்த ஊரில்—கிராமவாசிகளில் ஒருவராக வாழும் பெரிய மனிதரிடம் சொல்லி, மற்றவர்களிடம் விளக்கச் சொல்வார்கள்.

இதைப் போலத்தான் இறைவனுடைய 'திருவிளையாடல்'களும் இப்பூமியில் நிகழ்ந்திருக்கின்றன.

கீதையைச் சொல்ல விஜயன் கருவியாக அமைந்ததைப் போல் அந்தத் திருக்கடவூர் திருத்தலத்திலும் இறைவன் இறைவியரின் அருள் மகத்துவங்கள் வெளிப்படவும் — மாந்தர்களால் உணர்ந்து கொள்ளப்படவும் சில மனிதர்கள் கருவியாக அமைந்தனர்.

பரமன் மீது பற்றல்லால் வேறு பந்தம் நோக்காமல் வாழ்ந்து அருள்வீடு பெற்ற அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவர் குங்கிலியக் கலய நாயனார். அவர் அவதரித்தது இத்திருக்கடவூரில் தான். அவருடைய இயற்பெயர் கலயர் என்பதுதான். நாள்தோறும் அமிர்தகடேஸ்வரருக்கு குங்கிலியப் புகை போட்டு பூஜிக்கும் திருப்பணியை மேற்கொண்ட சிவநேசரான இவர் காரணப் பெயராக, 'குங்கிலியக் கலய நாயனார்' என்ற திருநாமம் கொண்டார். இறைபக்தி என்னும் அருட் செல்வம் சேரச்சேர பொருட்செல்வம் குன்றிக்கொண்டே போகும் என்பது உண்மையோ? வீட்டில் உண்பதற்கு உணவு சமைக்க பிடி அரிசிகூட இல்லா நிலை! இல்லாள் அதைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கும்போது கலய நாயனருக்கோ வேறு கவலை. 'குங்கிலியப் புகை போடும் தன் சிவப் பணியை அன்று செய்ய பொருள் இல்லையே!' என்று.

அவர் துணைவியார் குடும்பத் தேவைகளை நிறைவேற்ற ஒரு வழி

கண்டார். தம் திருமாங்கல்யத்தினைக் கழற்றிக் கணவரிடம் தந்து, ''அரிசி வாங்கி வாருங்கள்'' என்று அனுப்பினார். 'அரனி'ன் நினைவல்லாது வேறு நினைவற்ற நாயனாருக்கு 'அரிசி'யின் நினைவு மனத்தில் தங்குமா...? தெருவழியே செல்லும் போது எதிரே ஒரு வணிகர் குங்கிலியப் பொதியைச் சுமந்துகொண்டு வருவதைக் கண்டார். அவ்வளவுதான்... அரிசியை மறந்தார்! பரனுக்குச் செய்யும் குங்கிலிப் பணி பாக்கியமாக நிற்கிறதே என்ற பதட்டம்தான் முந்திவந்தது. கையில் தான் மனைவியின் திருமாங்கல்யம் இருக்கிறதே...! அதை வணிகரிடம் கொடுத்தார். குங்கிலியத்தைப் பெற்றுச் சென்று ஈசுவரன் முன் அமர்ந்து குங்கிலியத் தூபம் போட ஆரம்பித்து விட்டார். நாழிகை ஆகிக் கொண்டிருக்கிறது. நாயனாருக்கு அதைப்பற்றி என்ன கவலை! அவர்தான் லோக நாயகனின் திருப்பணியில் திளைத்திருக்கிறாரே! திடீரென்று அருள் ஒலியாக அவருக்குத் தெய்வக் கட்டளை ஒன்று பிறக்கிறது:

''அன்ப, நீ வீடு சென்று அமுது அருந்துக...!'' அப்போதுதான் தமக்கு இறையுலகில் உள்ள வீடு மட்டுமின்றி, பூமியிலும் ஒரு வீடு இருக்கிறது; அங்கே மனைவியும் மக்களும் பசியுடன்—தாம் வாங்கி வரும் அமுது பொருட்களுக்காகக் காத்திருப்பார்கள் என்ற உணர்வு தோன்றியது. ஆனாலோ, மாங்கல்யம் குங்கிலியமான பின் எதைக் கொண்டுச் செல்வது...?

தயங்கித் தயங்கி இல்லத்துக்குச் செல்கிறார். அங்கேயோ இல்லாள் வாசலில் நின்று கணவரை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார். 'இன்னும் அரிசி வாங்கி வரவில்லையே!' என்று அல்ல! 'இன்னும் அமுது உண்ண வரவில்லையே!' என்று.

அந்த அம்மையார் கழுத்தில் அவருடைய திருமாங்கல்யம் அழியாமல் அப்படியே இருக்கிறது. இல்லமும் செல்வச் செழிப்பாக மலர்ந்திருக்கிறது. ஆம்! குங்கிலிய வணிகனாக வந்தவர், ஐம்புலனுக்கும் நாயகனை சர்வேசுவரன் தான். ஒரு பிடி அவலை ஏற்றுக் குசேலனை ஆட்கொண்டான் கண்ணன். மாங்கல்யத்தை ஏற்று கலயநாயனாரை ஆட்கொண்டான் மகேசுவரன்.

'வறுமையோ செல்வமோ நீ தேடி அலைந்து பெறுவதல்ல; உன் வாழ்வியல் தேவைகளைக்கூட நீ நினைத்தவண்ணம் உன்னால் நிறைவேற்ற முடியாது. என் பாதங்களைப் பற்றி உன் பணியைச் செய்வது ஒன்றே உன் கடன்' என்னும் தத்துவத்தை மனித குலத்துக்கு உணர்த்த குங்கிலியக் கலய நாயனாரின் வறுமையைக் கருவியாக்கினார் உமா மகேசுவரன்.



அபிராமி அம்மன் சமேதராக அமிர்தகடேஸ்வரர் அமர்ந்திருக்கும் இத் திருக்கடவூர் திருத்தலத்தில் நவக்கிரக வழிபாடு இல்லை. மார்க்கண்டேயருக்காக எமனையே அழித்து, அண்டினோர்க்கு மரண பயத்தைப் போக்கும் கால சம்ஹார மூர்த்தியாக இறைவனே அங்கிருப்பதால் வேறு நவக்கிரக வழிபாடு தேவையில்லை என்பது ஐதிகம்.

அன்னை உமையவளாம் அபிராமவல்லியோ, தன் ஒப்பற்ற திருவருளை உலகுக்கு உணர்த்த தன் பக்தன் அபிராமி பட்டரை உன்மத்தம் பிடித்த பித்தரைப்போல் திருக்கடவூர் தலத்தில் அலைய வைத்து அருள் நாடகம் ஆடிக் கொண்டிருந்தாள்...

''இதுதான் அபிராமி பட்டர் வாழ்ந்த இடம்! இதைப் பராமரித்து வருவதை எங்கள் திருப்பணிகளில் ஒன்றாகச் செய்து வருகிறோம்'' என்று ஒரு மண்டபத்தைக் காட்டுகிறார்கள், அவ்வூர் சிவநேசரான திரு. கனகசபைப் பிள்ளையும், அவர் துணைவியார் ருக்மிணி அம்மாளும். அந்த இடம் திருக்கடவூர் திருக்கோயிலை ஒட்டிய ஒரு வீதியில் இருக்கிறது.

அதே தெருவிலுள்ள இன்னொரு இளைஞர், ''அபிராமி பட்டர் வாழ்ந்தது இந்தத் தெருக்கோடியில் கோயிலுக்குப் பக்கத்திலிருக்கும் வீடு!'' என்று வேறொரு இல்லத்தைக் காட்டுகிறார்.

இந்த இடக் குழப்பத்தில் நமக்கு வியப்பு ஏதும் இல்லை...



'அபிராமி அம்மன் கோயில் கொண்டிருக்கும் திருக்கடவூர் திருத்தலம் எங்கு இருக்கிறது?' என்று பல அன்பர்கள் எழுதிக் கேட்டிருக்கிறார்கள். அது, தஞ்சை மாவட்டம் மாயவரம் நகருக்கு அருகில் உள்ளது. மாயவரத்திலிருந்து தரங்கம்பாடி செல்லும் இருப்புப்பாதையில் ஒரு புகைவண்டி நிலையமாக அமைந்துள்ளது. மாயவரத்திலிருந்து சுமார் 12 மைல் தொலைவிலுள்ள அவ்வூருக்கு பஸ் மூலமாகவும் செல்ல வசதியிருக்கிறது.

அவர் வாழ்ந்து மறைந்து சுமார் முன்னூறுஆண்டுகளுக்குப்பின், 'அபிராமி பட்டர் வாழ்ந்த இடம் இதுவா, அதுவா' என்று இன்றிருப்பவர்கள் மத்தியில் சந்தேகமும் — சர்ச்சையும் ஏற்படுவது ஒன்றும் அவ்வளவு அதிசயத்துக்குரியது அல்லவே!

அபிராமி பட்டரைப் பொறுத்த அளவில், அவர் வாழ்ந்த காலத்திலேயே அவரைப் பற்றித் தோன்றியிருந்த சர்ச்சைகள் - சந்தேகங்கள் ஏராளம்!

'சக்தி உபாசகரான அவர் கள்ளுண்பவர் — மறையவர் குலத்து விதிக்கு மாறாக உணவு வகைகளைக் கொள்பவர் — சித்த சுவாதீனமற்ற பித்தர்.' — இப்படி அவரைப் பற்றிய தூற்றும் மொழிகள் எத்தனையோ!

'அன்னை அபிராமியிடம் கொண்ட பக்தி என்னும் தேனை மட்டும் அருந்தி சக்தி போதை கொண்டதன்றி வேறு போதை மயக்கம் அவரிடம் கண்டதில்லை' என்று அவர் நிலையறிந்தோர் போற்றும் மொழிகளும் ஆயிரம் ஆயிரம்!

'அவரைப் பெண் பித்தர்' என்று தூற்றினர் சிலர்! 'காணும் பெண்களிடம் எல்லாம் தேவி பராசக்தியின் தெய்விகச் சாயலைக் கண்டு அவர்களைத் தொழுது வணங்கி வந்தார்' என்று போற்றினர் வேறு சிலர்.

இந்தப் போற்றுதல்களும் தூற்றுதல்களும் அன்று தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னரிடமே தெரிவிக்கப்பட்டன.

தை அமாவாசை தோறும் கடலாடக் காவிரிப்பூம்பட்டினத்துக்கு வருவது சரபோஜி மன்னரின் வழக்கம். அதன் படி அங்கு வந்த மன்னர் அபிராமி அம்மனைத் தரிசிக்க விரும்பி, திருக்கடவூருக்கும் வந்தார்.

அபிராமி அம்மனின் சந்நிதிக்கு அவர் வரும் சமயம் — அங்குள்ளோர் மன்னரை கண்டு எழுந்து கைகட்டிப் பின் ஒதுங்கி வழி விட்டனர். ஆனால், சந்நிதியில் அம்மனுக்கு எதிரேயிருந்த ஒருவர் மட்டும் தன் மோன நிலையை விட்டகலாமல் இருந்த இடத்திலேயே அமர்ந்திருந்தார்.

அவர்தான் அபிராமி பட்டர்!

அரசன் வந்தும் எழுந்து ஒதுங்கி மரியாதை செய்யாத குடிமகன் ஒருவர் உண்டா...?

கேள்விக் குறியாய்ச் சினந்தார் மன்னர்.

அவருடைய சித்தம் அறிந்த மற்றவர்கள், 'பட்டரே! மன்னர் வந்திருக்கிறார்!' என்று குரல் கொடுத்தனர்.

பட்டர் திரும்பிப் பார்க்கவில்லை; மற்றவர்களின் பதைப்பான குரலும் அவர் காதுகளில் விழவில்லை.

அப்படியே மெய்மறந்த நிலையில் தேவியின்பால் சிந்தையைத் தேக்கி அசைவற்று அமர்ந்து இருந்தார்.

''போதைதான்... அப்போதே நாங்கள் சொல்லவில்லையா...?''

''பித்தம்தான்!''

—அருகிலிருந்தோர் அரசரிடம் பட்டர்பால் பகை உணர்ச்சியைத் தோற்றுவிக்க முயலுகின்றனர்.

அரசர் குழம்பினார்:

'இந்த மனிதரைச் சாதாரண மனிதனாகவும் கொள்ள முடியவில்லை... சாதாரண மனிதன் என்றால் எவ்வளவு போதை நிலையில் இருந்தாலும்கூட

தன் வரவு கண்டு அஞ்சி ஒதுங்குவான் இவரோ அசைவற்றிருக்கிறரே...?

'ஆனல், உருவத்தைப் பார்த்தாலோ மானிடரில் அற்பமானவர் போல் தோன்றுகிறது. மதுவோடு மமதையும் கொண்டு மதி மயங்கி இப்படி உதாசீனப் படுத்துகிறரோ...?'

குழம்பியவராக மன்னர் அவர் அருகில் செல்கிறர். அரசரின் ஆட்கள் பலரும் வருகிற ஆரவார நெருக்கத்தில் ஓரளவு உலக நினைவு வருகிறது பட்டருக்கு.

''பட்டரே, உமக்குப் பித்தமா?'' என்று வியப்புடன் கேட்கிறர் மன்னர்.

''ஆம்! என் சித்தத்தில் உறைகின்ற நாயகியின் திருவடியைப் பற்ற ஒரு பித்தம்தான்!''—அரசர் பக்கம் திரும்பாமலே பதில் கூறுகிறர் பட்டர்.

''எம்மைப் பொருட்படுத்தாத நீர் யார்...?'' – அரசர் சினந்து கேட்கிறர்.

''இறைவன் பணி செய்யும் மறையவன்'' என்கிறர் பட்டர்.

''மறையவன் என்றல் நாள், கோள் தெரிந்திருக்க வேண்டுமே..... இன்று திதி என்ன...?'' என்று சோதனையாகக் கேட்கிறர் சரபோஜி மன்னர்.

பட்டர் பதில் சொல்லாமலிருக்கிறர்.

மற்றவர்கள் திகைக்கிறர்கள். அரசன் கேட்டது ஒரு சாதாரணக் கேள்வி தானே! அன்று அமாவாசை என்று சொல்ல பஞ்சாங்கம்கூடப் பார்க்க வேண்டியதில்லையே? அரசர் கடலாட வந்திருக்கிறர் என்றலே அன்று அமாவாசை என்று எளிதாகச் சொல்லி விடலாமே...!

ஆனல், பட்டர் பதில் சொல்லவில்லை...

எல்லாரும் அவரைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனல், அவரோ அன்னை அபிராமியின் திருமுகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார். அந்த அருள் முகம் ஜோதி மயமாய் ஜொலித்துக்கொண்டிருக்கிறது. மின்னல் ஆயிரம் ஒரு மெய்வடிவாகி நிற்கும் அன்னையின் முக ஒளியில் தன்னை மறந்து கரைந்து நிற்கிறர் பட்டர்.

அவரைச்சுற்றி எல்லாமே அன்னையின் வடிவாக — அன்னையோ ஒளிமயமாக நிற்க — மனம் கனிந்து, 'பொருளே, பொருள் முடிக்கும் போகமே, அருளே, அருள் போகம் செய்யும் மருளே, மருளில் வரும் தெருளே, என் மனத்து வஞ்சத்து இருள் ஏதும் இன்றி ஒளி வெளி ஆகி நிற்கும் தாயே!' என்று அம்பிகையை ஒளி வடிவில் மனக்கண்ணால் அவர் தரிசித்துக் கொண்டிருக்கும் போது, மீண்டும் ''திதி என்ன?'' என்ற அரசரின் குரல் சற்று கடுமையாக ஒலிக்கிறது.

அன்னை என்னும் அருள் ஒளியைத் தரிசித்த அவருக்கு எங்கும் பூரண ஒளியாகத் தோன்றவே,

''இன்று பௌர்ணமி!'' என்று தன்னை மறந்து கூறுகிறர் பட்டர்.

அனைவரும் திகைக்கின்றனர். அமாவாசையை மாற்றி பௌர்ணமி என்கிறரே என்று. பட்டரின் மனத்தில் உள்ள ஒளிப் பிரகாசத்தை யார் அறிவார்...?

அரசர் சினந்து, ''இன்று பௌர்ணமி என்றல் சந்திரன் தோன்றுமல்லவா?'' என்று கேட்கிறர்.

பட்டர் மனக்கண்ணில்தான் அன்னையின் முக வடிவாகிய சந்திர ஒளி தோன்றிக் கொண்டிருக்கிறதே...!

அதனல் சற்றும் தயங்காமல், ''ஓ... சந்திரன் தோன்றமல் என்ன?'' என்கிறர்.

அரசரின் சிற்றம் அதிகமாகிறது. ''பட்டரே, நீர் கூறியபடி இன்று சந்திரன் தோன்றவிட்டால் அரச தண்டனைக்குள்ளாவீர்... இன்று மாலை உமது கூற்று நிரூபிக்கப்படவேண்டும்!'' என்கிறர்.

(தொடரும்)

அடுத்த இதழில்

சில்பி வரைந்த அபிராமி அம்மன் வண்ணப் படம்

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
ஆசிரியர் குழு: ...



அருள்மிகு அபிராமி அம்மன்—திருக்கடையூர். 'இதயம் பேசுகிறது' இதழுக்காக
ஓவிய மேதை சில்பி பிரத்தியேகமாக வரைந்தது.






# தேவி தரிசனம்

## (அபிராம வல்லி)

### 4

'தனம் தரும், கல்வி தரும் ஒருநாளும் தளர்வு அறியா
மனம் தரும், தெய்வவடிவும் தரும், நெஞ்சில் வஞ்சம் இல்லா
இனம் தரும், நல்லன எல்லாம் தரும், அன்பர் என்பவர்க்கே
கனம் தரும் பூங்குழலாள், அபிராமி கடைக் கண்களே!'

— அபிராமி அந்தாதி

தெருவில் குழந்தை விளையாடிக் கொண்டிருக்கும்போது, ஒரு குறும்புத் தனமோ, தவறோ செய்துவிடும். ஆனால், அதன் விளைவு பாதகமாக இருந்தால் ஓடோடி வந்து அம்மாவின் முன்றானையைப் பிடித்துக் கொண்டு அழ ஆரம்பித்து விடும்.

தாய்க்கு நன்றாகவே தெரியும். தன் குழந்தை தவறு செய்திருக்கிறது என்று. இருந்தாலும், குழந்தைக்குப் பரிந்து நின்று, பிறரைப் பாதிக்காத குழந்தையின் அறியாமைத் தவறையும் கூட சாமர்த்தியமாக மறைத்துச் சமாளிப்பாள். இது தாய்மையின் ஓர் அம்சம்.

## பொன். பாஸ்கரமார்த்தாண்டன்

ஜீவராசிகளின் தாயான அன்னை ஆதிபராசக்தியும் அப்படித்தான் பல திருவிளையாடல்களைப் புரிந்து காட்டி யிருக்கிருள்.

திருக்கடவூரில் அன்று நிகழ்ந்ததுவும் அதுதானே...?

''இன்று சந்திரன் ஒளி வீசுவதை நாம் பார்க்க வேண்டும்! இன்றேல், 'இன்று பௌர்ணமி' என்று கூறிய உமக்கு அரச தண்டனை தப்பாது'' என்று சரபோஜி மன்னர் கூறிச் சென்றபின் அபிராமி பட்டர் உலக நினைவுக்கு வந்தார்.

நிலைமை புரிந்தது. இன்று அமாவாசை! சந்திரன் தோன்றப் போவதில்லை... அரச தண்டனையும் தவறப் போவதில்லை.

எல்லாம் புரிந்தும் எதற்கும் பதற்றப் படவில்லை, அவர்.

அவர் பதற்றப்பட என்ன இருக்கிறது...? வானத்தில் சந்திரனைக் கொண்டு வருவது என்பது அவரால் முடிகிற காரியம் இல்லை. தன்னுல் முடிகிற காரியம் எதற்கும்தான் மனிதன் பதற்றப்படலாமே தவிர, தன் சக்திக்கு மிஞ்சிய செயலை நினைத்து அவன் பதற்றப்படுவதில் பொருள் என்ன...?



இது அபிராம பட்டர் வாழ்ந்த இடம் என்கிருர்கள்!

வானத்தில் அன்று சந்திரன் தோன்ற வேண்டுமானுல், அண்ட சராசரங்களையும் யார் ஒருவர் ஆட்டி வைக்கிருரோ அந்த ஒருவரான லோகமாதாதான் அதை நிறைவேற்றிவைக்க வேண்டும்.

'தாயே, நீ உன் ஒளிமிக்க தரிசனத்தால், என்னை உன்மத்தனுக்கி, இரவைப் பகலாகவும், அமாவாசை இருளை பௌர்ணமி ஒளியாகவும் எண்ண வைத்தாய். நீ தந்த காட்சி யினுல் என் மனத்தில் தோன்றியதைத் தான் நான் அரசனிடம் சொன்னேன். அதனுல், 'நன்றே வருகினும் தீதே விளைகினும் நானறிவது ஒன்றுமில்லை! எல்லாம் உன் அருள்!' என்று பாரத்தை அன்னையின் பாதத்தில் வைத்து விட்டார் பட்டர்.

நேரமாகிக் கொண்டிருக்கிறது. கதிரவனும் சாய்ந்தாகி விட்டது. இப்போது பட்டரின் கூற்றுப்படி சந்திரன் தோன்ற வேண்டிய காலம்.

அபிராமி அம்மன் கோயிலின் முன்...

அரசன், பரிவாரங்கள் புடைசூழ நிற்கிருன்.

''எங்கே.... சந்திர ஒளி தோன்றக் காணுேமே?'' என்று அரசன் வினவு கிருன்.

எங்கும் திகைப்பு—ஆவல் — பரபரப்பு. 'என்ன ஆகுமோ?' என்று பதற்றம்.

தன்னைச் சுற்றியிருந்த சூழ்நிலை அச்சுறுத்தல்களை ஒரு கணம் கவனித் தார் அபிராமி பட்டர். மறுகணம் அவர் கண்களை மூடிக் கொண்டார். மூடிய கண்களுக்குள் முழு முதல் ஒளியாய் அம்பிகை விசுவரூபம் எடுத்து எழுந்து நின்ருள்...

அவரைச் சுற்றி நின்ற அத்தனை பேரும் சந்திர ஒளியைத் தேடிக் கொண்டிருந்தபோது, அபிராமி பட்டரோ தன் மனக் கண்ணெதிரே ஜாஜ்வல்யமான செங்கதிர்ச் சூரியனின் பேரொளியாய் அன்னையின் தரிசனம் கண்டுகொண்டிருந்தார்.

கணீரென்று...

'உதிக்கின்ற செங்கதிர், உச்சித் திலகம், உணர்வுடையோர் மதிக்கின்ற மாணிக்கம்....' என்று உள்ளம் பொங்க உணர்ச்சிப் பொங்க அன்னை அபிராமி பேரில் அந்தாதியாகப் பாமாலை சூட்டத் தொடங்கினுர்.

('அக்கினி குண்டம்' ஒன்றை அமைத்து, அதன் மேலாக உறி ஒன்றினைக் கட்டி அதில் அமர்ந்து அன்று அந்தாதிப்



சமயப்பற்று மிக்க திருக்கடவூர் கே. கனகசபை பிள்ளை - ருக்மிணி அம்மாள் தம்பதியர் இல்லத்தில் உள்ள பூஜை அறையில் பகவான் சத்திய சாயிபாபா படம் ஒன்றிருக்கிறது. அப்படத்திலிருந்து விபூதி தானுகக் கொட்டிக் கொண்டிருக்கிறதாம்! 'வியாழக்கிழமைதோறும் அந்த விபூதியைத் திரட்டி எடுப்போம்' என்கிறுர்கள் அத் தம்பதியர். அங்கே வைக்கப்பட்டிருந்த இன்னொரு படத்திலிருந்து குங்குமம் கொட்டிற்றும். ஆனால், அதைக் கையினுல் தொட்டு வழித்து எடுத்ததும் கொட்டுவது நின்று போயிற்றும்!

பாடினுர் அவர் என்று ஒரு கதை சொல்லப்படுகிறது. அப்படி நடந்திருக்க வாய்ப்பில்லை என்று ஆன்ருேர் பலர் கூறுகிருர்கள்)

பக்திப் புனலாய் அந்தாதிப் பாடல்கள் பட்டரிடமிருந்து ஆற்ருெழுக்காய் வெளிப்பட்டுக் கொண்டிருந்தன...

சூழ்ந்து நின்ருேர் மெய், வாய் கட்டுண்டு மெய்மறந்து நின்றனர்.

எங்கும் பேரின்பப் பக்திப் பெருக்கு!

பட்டர் அன்னையோடு இரண்டறக் கலந்த உணர்ச்சிப் பெருநிலையில், அன்னையின் திருவுருவை பாதாதிகேசமாக வருணித்துத் துதிக்கிருர்...... அன்னையின் மேனி நிறம் மாணிக்கமோ, மாதுளை அரும்போ, மின்னல்கொடியோ நறுமணக் குங்குமமோ என்றெல்லாம் போற்றுகிருர். 'தாயே, தவப் பெருங் கருணையே' என்று தொழுகிருர். நான்மறை துதிக்கும் நாயகி, நான்முகி, நாராயணி, நளின பஞ்ச சாயகி, சாம்பவி, சங்கரி, சாமளை, சாதி நச்சு வாய் அகி மாலினி, வராகி, சூலினி, மாதங்கி என்று வாய் மணக்க வாழ்த்திப் புகழுகிருர். 'என்னை

ஆட்கொண்ட தேவி, உன்னிடம் அ
பூண்டு கொண்டேன், நின் புக
அன்றி வேறு புகழ் பாடேன்!
மேனிப் பிரகாசம் அன்றி வேறெத
காணேன்' என்று மெய்சிலிர்
பரவசக் கூத்தாடுகிருர்.

கடைசியில் ஆவேசம் பொ
தன்னைச் சூழ்ந்து நிற்கும் பகை தெற
அன்னையை நோக்கி, ''தாயே
விழிக்கே அருளுண்டு; வேதம் சொ
உன் வழிக்கே வழிபட நெஞ்சு
எமக்கு. அப்படியிருக்க, இதோ என்
பற்றி வீண் பழி சொல்லிப் பாவ
செய்து பாழ்நரகக் குழிக்கே அழு
கயவர் தம்மோடு எனக்கு எ
கூட்டு? அவர்களுக்கும் எனக்கும் உ
பந்தத்தை அறுத்துவிடு!'' எ
கதறுகிருர்.

மறுவிநாடி அனைவருடைய கண்க
கூசும் வண்ணம் வானில் ஒரு பேரெ
தோன்றியது. அந்த விநாடி
அமாவாசை இருள் அகன்றது. பூர
சந்திரன் ஒளி தோன்றும் பௌர்
நாளைப் போல் எங்கும் தண்ணொ

அப்படியோர் ஒளிவீச்சை
பாராத மாந்தர் கூட்டம், 'அது எ
ஒளி? எப்படித் தோன்றியது' எ
விண்டுணர முடியாமல், பட்
வெற்றியைக் கண்டு வியந்தனர்.

''சந்திரன்தான் தோன்றிவிட்டா
என்று மிரண்டனர் பலர்.

''இல்லை; தன் பக்தனை அபிர
பட்டரின் வாக்கினைப் பொய்யா
கூடாது என்பதற்காக, அபி
அன்னையே தன் காதுகளில் அ
தோடு ஒன்றினை எடுத்து வானில் எ
சந்திர ஒளியாக்கிக் காட்டின
என்று துதித்தனர் ஒரு சாரார்.

உண்மையில் என்ன நடந்த
யாரறிவார், அந்த தேவ ரகசியத்

இன்று பகவான் அய்யப்ப
சபரிமலையில் தோன்று மகரே
எப்படித் தோன்றுகிறது எ
யாரறிய முடிகிறது...?

இப்படித்தான் அன்றும் அபிர
பட்டரின் ஆவேசப் பக்திக்கருளி
பேரொளியை உருவாக்கிக் காட்டி
அம்பிகை.

மாயையிலே உழன்று, மாயை
உண்மை என்று நம்பும் மனித
அன்றும் இன்றும் தேவதேவியின் ம
திருவிளையாட்டை முற்றும் உண
கொண்டதில்லை.

சந்திரனுக்கு இயல்பாக ஒளியில்லை; சாதாரணக் கிரகம்தான். அதற்கு பனிடமிருந்துதான் ஒளி கிடைக் து' என்று உணராமல் அன்று யாமை மாயையிலிருந்த மனிதர்கள், யில்லா சந்திரனிடத்து ஒளியை னில் காட்ட வேண்டும் என்று டரிடம் கேட்டனர்.

நூரியன் மூலம் கிடைக்கும் ஒளியை, சுந்தரப் புன்னகையினாலேயே ரேனுக்குக் கிடைக்கச் செய்து ட்ட தேவி தன் அருள்சுடரை மின்னச் ப்திருக்கலாம்... யாரே கண்டார்!

அன்று அந்தத் தலத்தில் அம்மை த்திய அற்புதம் மெய்யைப் பொய் க்கியதோ; பொய்யை மெய்யாக்கி தா அல்ல....

மெய்யென்று மனிதர்கள் நினைப்ப ல்லாம் மெய்யல்ல... சந்திரனுக்கு உண்டு என்று அன்று மனிதன் ரத்தது மெய்யா....?

அப்படியே பொய்யென்று அவன் க்கணித்தது பொய்யுமல்ல...

மெய்யும், பொய்யும் மனிதன் அறிவு வளர வளர, மாயை க விலக, ஞானம் தழைக்கத் ழக்கப் புரிந்து கொள்ளத் தக்க துவங்கள்தாம்—

ான்றும்மெய்யென்று அவன் பற்றிக் ாள்ள வேண்டியது தெய்வத்தின் திருப்பாதங்களைத்தாம்..... மார்க் கண்டேயனும் அதைத்தான் செய்தான்; அபிராமி பட்டரும் அதைத்தான் செய்தார்.

அவர்களுக்கு அகிலமே வியந்து திகைக்கும் வண்ணம் அற்புதமாய் அருள் புரிந்து, 'எவ்வுயிர்க்கும் கதி மோட்சம் இறைபாதங்கள் அன்றி வேறெதுவும் இல்லை' என்று உணர்த் தினர், தேவதேவியர்.

அதை இன்றும் புரியாதவரும் புரிந்து கொள்ளத்தான், அதோ, அன்னை அபிராமி கருணைக் கரம் ஏந்தி, கண்களில் அருள் பேரொளி மின்ன, அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி யாய், மின் ஆயிரம் ஒரு மெய் வடிவு கொண்ட ஜோதிச் சுடராய், ஒன்றாய் அரும்பி, பலவாய் விரிந்து, இவ்வுலகு எங்குமாய் ஓங்கி — ஞானப் பெருஞ் சுடராய்க் கோலத் திருமுகம் காட்டி நிற்கிறாள்...

கோடானுகோடி பக்த உள்ளங்கள், கல்பகோடி காலமாய் அவள் திருப் பாதம் பற்றி, 'அன்னே, உலகுக்கு அபிராமி என்னும் அருமருந்தே, பொன்னே, பொன்மலர் கோமளமே, உன்னையல்லால் எமையார் காக்க வல்லார்!' என்று கரைந் துருகி நிற்கின்றனர்.

('அபிராமவல்லி' தொடர் முற்றும்)

**அடுத்த இதழில், 'திருவேற்காடு தேவி கருமாரியம்மன்' தரிசனம்..**

# அமரர் கொத்தமங்கலம் சுப்பு கவிதைப் போட்டி



"அமரர் வாசன், மாலி, தேவன், ராஜு" ஆகியோரின் நினைவாகப் போட்டி களை அறிவித்திருக்கும் நீங்கள், அமரர் கொத்தமங்கலம் சுப்புவை மறந்து விட்டீர்களா?" என்று பல அன்பர்கள் எழுதியிருக்கிறார்கள்.

அமரர் கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் தமிழ் இலக்கியத்துக்கு ஆற்றியிருக்கும் பணியை மறக்கமுடியுமா...? 'தில்லானா மோகனாம்பாள்' போன்ற உயிரோட்டம் உள்ள நவீனங்களைப் படைத்தும், 'இவர்களை சந்தித்தால்' என்ற தலைப்பில் 'ஆனந்த விகட'னில் வெளியான பகுதியைத் தயாரித்து தருவதில் அமரர் வாசன் அவர்களுடன் பணியாற்றியதையும், எண்ணற்ற அற்புத கிராமியக் கவிதைகளைப் படைத்து அவர் தமிழ் இலக்கியத்தை வளப்படுத்தியதையும் யார்தான் மறக்க முடியும்?

'பேச்சுக்கு பேசிவரும் பேச்சு - நம்ப பேனா வில் வந்தால் சாசனமாச்சு! — இப்படிப்பட்ட அவருடைய ஜீவனுள்ள கவிதை வரிகள் காலத்தால் அழிக்க முடியாதவை.

அமரர் சுப்பு அவர்களின் நினைவாக இந்த கிராமியக் கவிதைப் போட்டியை அறிவிக் கிறோம். பதினாறு வரிக்குள் அடங்கக் கூடியதாக, மண் வாசனை சிறக்கும் கிராமியக் கவிதைகளை எழுதி அனுப்புங்கள். சிறந்த கவிதைக்கு அமரர் கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் திருவுருவம் கொண்ட பொற் பதக்கம் பரிசளிக்கப்படும்.

**போட்டி முடிவுத் தேதி 80-4-1978**

# வே(பே)ய் நக்கீரரே..?

தமிழர்களின் பித்தம் ஒருபோதும் தெளியாது என்பதை விமரிசித்து விளாசித் தள்ளியதைப் படித்த பின்பாவது அது தெளியுமா என்பது சந்தேகத்திற்கு உரிய விஷயமே!

ஹைதராபாத். ரா. வத்ஸலா.

நக்கீரன் அவர்களே! நீர் எழுதியிருப்பது என்ன ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை என்ற நினைப்போ....?

'எக்ஸார்ஸிஸ்ட்' படத்தில் மேக்கப், குழந்தையின் நடிப்பு, படப்பிடிப்பு எல்லாம் முதல் தரமாக இருப்பதை உம்மைத் தவிர ஆயிரக்கணக்கான ஜனங்கள் உணர்ந்திருக்கின்றார்கள். டாக்டர்கள் ரத்தக் குழாயில் மருந்து ஏற்றி மூளையில் செல்லும் ரத்தக் குழாய்களை 'எக்ஸ்ரே' மூலம் பார்ப்பது முதல்; மனோதத்துவ நிபுணர்கள், இரு பாதிரியார்கள் பேயை ஓட்டுவதற்குக் கடைசிவரை முயற்சிப்பது வரை எவ்வளவு யத்தனங்கள் செய்கிறார்கள்.

இந்த மூன்று படங்களும் நிஜமாகவே முதல் தரமாக இருப்பதால்தானய்யா, இந்த ஓட்டம் ஓடுகின்றன.

சென்னை—4. டாக்டர் எஸ். ஜெகதீசன்.

கருப்புத் துணியினுள் மறைத்துக் கொண்டு கையும் காலையும் ஆட்டினால் தமிழ்ப்படப் பேய்க்கதை முடிந்து விட்டது. ஆனால் ஆங்கிலப் படத்தில் அப்படியல்ல என்பதை, அந்தப் படங்களைத் தொடர்ந்து பார்த்த போதே நக்கீரனுக்குப் புரிந்திருக்க வேண்டும். ஏனோ அவருக்குப் புரியவில்லை.

சென்னை—36 கே. கே. பல்குணன்

நக்கீரன் குறிப்பிட்டது நூற்றுக்கு நூறு உண்மை!

'எக்ஸார்ஸிஸ்ட்' படத்திலுள்ள 'பேய்' மேக்கப்கூட பொருந்தாத கோரம்! பேய் பிடித்தவர்களுக்குச் சற்று முகபாவம் மாறும் என்பது உண்மையே. அதற்காக இப்படி மாவைப் பூசிக் கொண்டு - அருவருப்பூட்டும்படி எதையோ வாயிலிருந்து கக்காது. மேல் நாட்டவர் எதை எடுத்தாலும், எப்படி எடுத்தாலும்பாராட்டுவது,வியாதிதான்!

சென்னை—1. ஆர்.முத்துசுப்பிரமணியம்.

யாரையா இந்த 'நக்கீர' பூசாரி...? சும்மா சொல்லப்படாது. நல்லாவே பித்தம் தெளிய வேப்பிலை அடிக்கிறார்!

சென்னை-11. சி. சுந்தரம்.

---

இதைத் தாங்கள் வெற்றிகரமாகச் செய்து முடிப்பீர்கள் என்றால் உமது சித்தாந்தம் மேலும் திருப்தியுறும். அல்லாமல் வெறும் சலசலப்புச் செய்து கொண்டு, மொரார்ஜி தேசாயை அடிக்கடி உமது சார்பில் மன்னிப்புக் கேட்க வைத்துக் கொண்டிருப்பது உமது அரசியல் வீரத்துக்கு அழகு இல்லை. 'இனிமேல் என் சார்பில் மொரார்ஜி தேசாய் மன்னிப்புக் கேட்கவே கூடாது' என்று நீர் ஓர் அறிக்கை வெளியிடும்! சகுனியைக் காய் உருட்ட வைத்து, துரியோதனன் பணயம் கட்டியது மாதிரி இருக்கிறதே—தேசாயின் மன்னிப்பு....

ஜனதாவின் எதிர்காலம் எப்படி இருப்பினும், உமது வெற்றி ஒரு Fluke! அதற்கு அப்புறம் உமது சுகாதார இலாகாவின் சாதனை ஒரு Flop! அரசியல் விதூஷகத்தனத்துக்கு நூற்றுக்கு நூறு மார்க்!

இந்தக் கடிதம் முழுக்க முழுக்க உங்கள் பாணியிலேயே அமைந்திருப்பதைக் கவனித்தீர்களோ...? என்ன செய்வது? உங்களுக்கு எழுதப்பட்ட கடிதம் அல்லவா...?

அன்பு,

**ஜெயகாந்தன்**

**கல்லூரிக் காதல்**

முதல் மடலின்
தொடக்க வார்த்தை..
'அன்பிற்கினிய
அத்தான்!'
இறுதி மடலின்
கடைசி வார்த்தை..
'இப்படிக்கு
உங்கள் தங்கை!'
—கே. அறிவுமதி.

# தேவி தரிசனம்

## (வரம் தருவாள் கருமாரி)

### 1

'கௌமாரி நம்மாய சத்திநீ சித்திநீ
கல்விநயப் பொருளின் முதல்வி
கனவீரி திரிசூலி கமலிநீ விமலிநீ
கருவழி யுருது காப்பாய்!'

—தேவி கருமாரியம்மன் தோத்திரப் பாமாலை

அதோ! ஜோதிப் பிரகாசமாக ஒரு பேரொளி ஜொலிக்கிறது.

கண்ணுக்கு எட்டிய தூரமெல்லாம் கவிந்திருக்கும் கனத்த இருளைக்கரைத்துக் கொண்டு அந்த ஜீவ ஒளி கோடி சூரியப் பிரகாசமாய் தகதகக்கிறது.

நதிகள் எல்லாம் பள்ளத்தை நோக்கித் தான் பாய்வதுண்டு.

ஆனால், அதோ அங்கே மனித நதிகள் கிளை கிளையாக, சாரிசாரியாக - மிகமிக உயரத்தில் - விண்ணவரும் மண்ணவரும் அளந்து காணமுடியாத உயரத்தில் இருந்து பிரகாசிக்கும் அந்த ஒளியை நோக்கி ஓடிக் கொண்டிருக்கின்றன.

உலக மாந்தர்களை யெல்லாம் ஓய்வுத் துயிலில் இட்டுத் தாலாட்டிக் கொண்டிருக்கும் இராக்காலம் — அதோ அங்கே ஆனந்தப் பரவசக் கூத்தாடி விழித்துக் கொண்டிருக்கிறது. இருளின் பிடியில் தூங்கும் சாலைகள் எல்லாம் அப்போது ஆரவாரச் சந்தடியுடன் சிரித்துக் கொண்டிருக்கின்றன.

எத்தனையோ விதவிதமான கார்கள், ஸ்கூட்டர்கள்... எல்லாமே மனிதன் விஞ்ஞான வளர்ச்சியால் கண்டுபிடித்த மிகமிக நவீன வாகனங்கள்தாம்.. ஆனால் அந்தப் புதுமையான வாகனங்கள் எல்லாம் அப்போது எங்கே ஓடிக் கொண்டிருக்கின்றன...? அண்டசரா சரங்களும், ஆதியான சூரிய சந்திராதிகளும், நாழிகளும் கோட்களும்கூட தோன்றுமுன் — சர்வமும் தானுக— தன்னந்தனியாகத் தோன்றிய—மிகமிகப் பழைமையான ஒன்றைத் தேடியே அந்தப் புதுமைகள் எல்லாம் அப்போது ஓடிக் கொண்டிருக்கின்றன...

ஏனென்றால் அந்த ஒரு - ஓரே ஒரு பழைமை இன்றேல் புதுமைகள் இல்லை; புவனங்கள் இல்லை; ஓசைகள் இல்லை;



ஸ்வாமி இராமதாசர்

ஏன், ஓம்கார தத்துவமான பிரணவமே இல்லே! அனைத்தும் அந்த முன்னைப் பழைமையிலிருந்துதான் பிறந்தன; வளர்ந்தன; பெருகின.

எல்லாவற்றையும் தன் தனிப்பெரும் தத்துவத்துள் அடக்கி, தானே எல்லாமாகவும்; எல்லாவற்றிற்குள்ளும் தானேயாகவும் நிறைந்து நிற்கும் அந்த ஒன்றை நோக்கி ஓடுவது ஒன்றே—இந்த உலக உயிர்களுக்கு வாழ்க்கைத் தவம். அப்படித் தேடி ஓடுவதற்காகவே அவர்கள் ஜனிக்கிருர்கள்; அதற்காகவே அவர்கள் வாழ்கிருர்கள்...

அதோ! அந்த கார் நிறைய பெண்கள். இன்றைய நாகரிக மணத்தை சுவாசிக்கும் சாதாரண மனித குலத்தவர்கள்தாம். அவர்கள் மனித குலத்தின் எளிமையான ஆசைகள்.... சபலங்கள்.. இச்சைகள்... இச்சகங்கள் நிறைந்த சாதாரணப் பெண்கள்தாம்! முந்திய நாள் இரவு வரை கணவன்மாருடன் உப்பு புளி மிளகாய்க்கும் — உடுக்கும் துணிக்கும் வாதிட்ட சாமானியப் பெண்கள்தாம்! துளி கருவேப்பிலேக்காகத் தூள் பறக்கப் பேசும் வாய்வளம் பெற்றவர்கள்தாம்! ஆனல், அவர்கள் — அப்போது ஆறு பேர்களாக அங்கு இருந்த போதும்கூட, அவர்கள் அடுத்த வீட்டுப் பெண்மணி தினம் ஒரு சினிமாவுக்குப் போவதைப் பற்றிப் பேசிக் கொள்ளவில்லே; எதிர் வீட்டுப் பெண்மணி பட்டுப்புடைவை வாங்கியிருப்பதைப் பற்றிப் பேசிக் கொள்ளவில்லே. ஏன், பேசிக் கொள்ளவே யில்லே...? ஆமாம்! அவர்களே என்னவோ ஒன்றுஆட்கொண்டிருக்கிறது.

அதோ ஸ்கூட்டரில் ஒரு தம்பதி. முந்திய நாள் மாலேவரை, போனஸ் பணத்தில் அரிசி மணி மாலே வாங்க ஆர்டர் தராததற்குச் சண்டை பிடித்துக் கொண்டிருந்தவர்கள்... கணவன் ரகசியமாக ரேஸுக்குப் போவதைப் பற்றி வாது செய்து கொண்டிருந்தவர்கள்... அப்போது ஆழ்ந்த அமைதியுடன் பறந்து கொண்டிருக்கிருர்கள். பார்வை-மனத்தின் பரவசம் எல்லாம் அந்த 'ஒன்றின்' மேல்தான்.

சைக்கிளில் பின் சீட்டில் தன் எட்டு வயதுப் பெண் கௌரியை உட்கார வைத்து ஓட்டிக் கொண்டிருக்கும் மெக்கானிக் கே. ஆர். சௌந்தரராஜனுக்கு, சென்னே அமைந்தகரையில் இருந்து கிட்டத்தட்ட பத்து மைல் தொலேவு. ஆனல், அந்த நடு நிசியில் வந்தும் களேப்பில்லே; தங்கச் சங்கிலியை தன் மகள் கழுத்தில் போட்டுக் கொண்டிருக்கவும்—தனிவழி வருகிறேமே என்ற பயமில்லே; அந்த ஒன்று தனக்குப் பலமாக காவலாக இருக்கும் தைரியம்... அந்த எட்டு வயதுப் பெண்கூட பெட்டிக் கடை கண்ணுடி சீசாவுக்குள் கண்ணேப் பறிக்கும் சாக்லெட்டைக் கேட்கவில்லே; அந்த ஒன்றைத் தேடிப்போய் தரிசித்து—அந்த ஒன்றிடமிருந்து தனக்குப் புரியாத பரவசத்தில் அதுவும்கூட மலர மலரக் கண் விழித்துக் கொண்டிருக்கிறது...

அந்தச் சாலேயில் அந்த மனிதரால் நடக்க முடியவில்லே. தள்ளாத வயது; பனிக்கும் ஊதல் காற்றுக்கும் பதில் சொல்ல முடியாத அளவு தேய்ந்து போன உடம்பு. தள்ளாடித் தள்ளாடி





நடக்கிறார். கண் பார்வை மந்தம்தான். ஆனாலும், அவர் தேடிப் போகும் அந்த ஒளியை அவரால் பார்க்க முடியுமாம்! கண் கெட்டால் என்ன...? மனம் பளிச்சென்றிருக்கிறதே.....! அந்த ஒன்றைத் தரிசிக்கும் தாகத்துடன் அடிக்கடி நிமிர்ந்து பார்த்துப் பார்த்து நடந்து கொண்டிருக்கிறார்.

இப்படி,

காார்களில்

ஸ்கூட்டர்களில்

சைக்கிள்களில்

நடைபாதையில்...

பரபரத்து ஓடிக்கொண்டிருக்கும் பலவித வாழ்க்கைத் தரத்தைச் சேர்ந்த, பல்வேறு இனத்தைச் சேர்ந்த ஜன சமுத்திரம் - பல்வேறு திசைகளிலிருந்து தேடி ஓடிக்கொண்டிருக்கும் அந்த ஒன்று.

'அதோ.. அதோ!' என்று பஞ்சடைந்த பார்வையுள்ள அந்த முதியவரே, கண்கொள்ளாக் காட்சியைக் கண்ட பேரானந்தத்துடன் உடல் புல்லரிக்க,

'அம்மா தாயே!' கருமாரி! கண் கண்ட தெய்வமே!' என்று பரவசப் பெருக்கில் துதிக்கிறார்.

கற்றவர்கள் கல்லாதவர்கள், பண்டிதர்கள் பாமரர்கள் அனைவரும்—அவரவருக்குத் தெரிந்த மொழியில் - அவரவர் மனவளத்துக்கு ஏற்ப—

'கற்பூர நாயகியே! கனகவல்லி!
காளி மகமாயி! கருமாரியம்மா!'

என்று கவிதையாய்ப் போற்றுவோரும்;



பக்திப் பெருங்கூட்டம்

# சித்திரைச் சிறப்பு

# இதழில்...

## அஸ்திவாரம்



**சுஜாதா** எழுதும்
நெடுங் கதை ஆரம்பமாகிறது

### ஸ்ரீ ஹரியின் கை வைத்தியம்

'ஆனந்த விகடன்', 'கல்கி' போன்ற பத்திரிகைகளில் வைத்தியக் குறிப்புகள் எழுதிப் புகழ்பெற்ற ஸ்ரீஹரியின் ஆயுர்வேத வைத்திய முறையில் பயின்ற அவருடைய மாணவர் டாக்டர் ராகவன் தரும் மருத்துவக் குறிப்புகள்.

### என்ன நடக்கிறது வடக்கே...?

'இதயம் பேசுகிறது' வாசகர்களுக்காக பம்பாய்க்குச் சென்று வந்து சுவையான இந்திப் படச் செய்திகளைத் தருகிறார் சித்ரகுப்தன்.

'கதவுகள் காத்திருக்கின்றன.' கசங்கிய மலர்களின் கண்ணீர்க் கதை—புகைப் படங்களுடன்.

### நேருக்கு நேர்

**சுப்புடு** திரைப்பட இசையமைப்பாளர்களை நேருக்கு நேர் சந்தித்துப் பேட்டி காண்கிறார்.

### இருட்டு நீளி

ஆமாம்! பேய்(க்கதை) ஒன்றும் தொடரப் போகிறது!
பி. டி. சாமி எழுதுகிறார்.

'பஞ்ச சக்தியாக நின்று பார்புரக்கும் நீலியே
பஞ்சசீலஞுகி நின்று ஆடல் செய்யும் மாலியே
பஞ்சநாதமாகியுற்ற பார்பனத்தி சீலியே
பஞ்சமாரி பாரமாரி பூதமாரி தேவியே!'

என்று தத்துவமாய் துதிப்பாரும்;

'கேட்டவர்க்கு கேட்ட வரம் தரும் கருமாரித் தாயே!' என்று கண்ணீர் மல்கி நிற்பாரும்;

'ஏழை யெங்களைக் காக்க வந்த எங்கள் குல நாயகியே!' என்று கையேந்தி நிற்கும் எளிய மக்களின் திருக்கூட்டமுமாய்—

எங்கும் 'ஓம் சக்தி! ஓம் மாகாளி! ஓம் பராசக்தி! ஓம் திரிசூலி! ஓம் பிரணவ நாயகி! ஓம் புவனேசுவரி! ஓம் கருமாரி!' என்று நாத முழக்கமாய் - அன்னை கருமாரியின் சந்நிதியே வேதப்பெருங் குரலில் பிரணவ கேந்திரமாய்ப்பொங்கிப் பிரவகித்து நிற்கிறது.

அந்த ஆதிவாரம் (ஞாயிற்றுக்கிழமை) அதிகாலை - ஆம்! விடியற்காலை மூன்று மணி அளவில் - திருவேற்காடு அன்னை கருமாரியம்மனின் 'கோ பூஜை' தரிசனம் காண—சந்நிதி நிரம்பி - சுற்று மண்டபம் நிரம்பி, முன் வாசல் நிரம்பி, வெளி வழிகள் எல்லாம் நிரம்பி வழியும் அந்த அருட் பெருங்கூட்டத்தின் பக்திப் பேரலைக்கு நடுவில் ஒரு சிறு துரும்பாய் நான் நின்று கொண்டிருக்கிறேன்.

... நிர்வாக அதிகாரி என். சுவாமிநாதன்

அன்னையின் திருக்காட்சி காண வந்திருக்கும் பக்தர்கள் தாம் எத்தனை ரகங்கள்..... அவர்கள் முகங்களில்தான் எத்தனை தாபங்கள் - பரவசங்கள்...

இப்படி ஒரு பக்தி எழுச்சியை — மக்களில் பல்வேறு தரத்தினரும் சங்கமித்து வந்து நிற்கும் சக்திப் பேரருள் பிரவாகத்தை இதுவரை கண்டறியாத ஓர் அபூர்வ மனயெழுச்சியுடன் நான் அன்னையைப் பார்க்கிறேன்.

எவ்வுயிர்க்கும் நாயகியாய் - தன்னைத் தேடி வந்து சந்நிதியில் குவிந்து கொண்டிருக்கும் ஒவ்வொரு ஜீவனுள்ளும் நம்பிக்கையாய், காவலாய், கருணையாய் அமர்ந்திருக்கும் பராசக்தியாய் - தேவி கருமாரி எழுந்தருளி நிற்கிறாள்....

'அம்மா மகமாயி! இத்தனை பேர் உன் நாமத்தை துதித்துப் போற்றி உன் பாதகமலங்களை நோக்கித் தாகித்து மோகித்து ஓடோடி வரும்படி உன்னோடு அவர்களை இணைத்து ஐக்கியப்படுத்தியிருக்கும் உன் சக்தித் திருமகிமைதான் என்னே?' என்று அஞ்ஞான வினவுடன் அன்னை முகம் நோக்கி நிற்கிறேன்.



''முன் காலத்தில் எல்லாம் கிராமத்து எளிய மக்களெல்லாரும் வண்டி கட்டிக் கொண்டும், கால் நடையாகவும் பிரயாணமாகி நகரத்துப் பெருங் கோயில்களை நோக்கிச் செல்வார்கள். ஆனால், தேவி கருமாரி வீற்றிருக்கும் இந்தத் திருத்தலத்திலோ முற்றும் மாறான புதுமை நடக்கிறது! அருகிலிருக்கும் சென்னை நகரம் மட்டுமல்லாது; அனைத்து இந்தியாவில் இருக்கும் நகரங்களிலிருந்தெல்லாம் — இன்று இந்தக் கிராமத்தைத் தேடி தினந்தோறும் பக்தர்கள் வந்து குவிந்து கொண்டிருக்கிறார்கள்...'' என்கிறார். அக்கோயிலின் நிர்வாகப் பொறுப்பிலிருக்கும் அதிகாரியான திரு. என். சுவாமிநாதன்.

பூவுலகத்திலுள்ள மக்கள் மட்டுமா அன்னையின் தரிசனத்துக்கு அந்தச் சிறிய கிராமமான திருவேற்காட்டிற்கு வந்திருக்கின்றனர்...?

அதோ. நம் அகக்கண்களில் அகத்தியர் தோன்றுகிறார்; தம் திருமணக் கோலத்தில் அவருக்குக் காட்சி அளிக்க அந்தத் தலத்துக்கு வந்த எம்பெருமானும் இறைவியும் தோன்றுகிறார்கள். அரக்கர் குலத்தை வேரறுக்க அன்னையிடம் சக்திவேல் வாங்க வந்த முருகப் பெருமான் தோன்றுகிறார். அந்தத் தலத்தில் குமரக் கடவுள் வேல் வாங்கிச் சென்றதால்தானே அந்தத் தலத்துக்கே திரு 'வேற்' காடு என பெயர் வந்தது!

அந்த மண்ணில்தானே அம்மை ஆதிபராசக்தி — அந்தரி, வானத்தி, பார்ப்பனி, விசாலாட்சி, காமாட்சி, மீனாட்சி, கருமாரி என்னும் ஏழு சக்தி வடிவங்களாய் காட்சி தந்தாள்....

அன்னையின் தரிசனம் காண திரிமூர்த்திகளும் தேவாதி தேவர்களுமே அங்கு வந்திருக்கிற போது—அவளுடைய அருமைப் பிள்ளைகளாம் மானிடர்கள் அன்னை முகம் காண அங்கு ஓடோடி வருவதில் என்ன வியப்பு...?

அவர்களை வரவழைத்து வரமருளவே, ஏழுசக்தியரில் இளையதேவியாம் கருமாரி ஆதிபராசக்தியாய், மும்மூர்த்திகளின் சக்திகளைத் தன்னுள் கொண்டு-ஆக்கல், அழித்தல், அளித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களைத் தாமே ஏற்று நிறைவேற்றி அருளாட்சி செய்கிறாள் அத்தலத்தில்.

(தொடரும்)

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
துணை ஆசிரியர்கள்: தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி: 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை-600 032.




# தேவி தரிசனம்

(வரம் தருவாள் கருமாரி)

# 2

'பெருமைபெறு வடவேதா ரண்யதிரு
வேற்காடு
பெருங்கோயி லோங்குந் தேவி
பெண்மையே சுகுமாரி யம்மையே
கௌமாரி
பிறங்கவரு கருமாரியே!'

தேவி கருமாரியம்மன் தோத்திரப் பாமாலை





ஆன்றோர் மத்தியிலும் சான்றோர் வாதத்திலும் ஒரு கேள்வி உண்டு. ''தெய்வத்தை வேண்டும்போது ஒருவன் எப்படிப் பிரார்த்தனை செய்ய வேண்டும்? 'பொருள் கொடு, வியாதியைத் தீரு' என்று மண்ணுலக ஆசைகளைத் தெய்வத்திடம் கேட்கலாமா? 'பிறவி அறுத்து மோட்சம் தா' என்று, பேரின்ப உலகத்துக்கான பிரார்த்தனை மட்டும் செய்யலாமா?'' பேரின்பமயமான இறைவனிடம் 'பேரின்ப வீடு' என்னும் மோட்ச வாழ்வுக்குரிய கேள்வியை மட்டும்தான் கேட்கலாம் என்பதே பலர் கருத்து.

இதைச் சிற்றறிவு கொண்ட என்னால் முழுமையாக ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

மனித ஜீவன் ஓர் அபூர்வக் கலவை!

அவன் பஞ்சபூதங்களால் அமைந்தவன்;

ஐம்புலன்களால் இயங்குபவன்;

அறுசுவையில் மகிழ்பவன்;

நவரசத்தில் திளைப்பவன்;

'ஓம்கார'மானஒரேசக்தித் தத்துவத்தில் கதிமோட்சம் கொண்டு உய்பவன்.

அவனுக்கு இவ்வுலக வாழ்வும் உண்டு; மோட்சம் என்னும் அவ்வுலக வாழ்வும் உண்டு.

இந்த இரண்டு உலக வாழ்வையும் அவன் வாழவேண்டும் என்று விதிப்பவனும்; அந்த இரு வாழ்வுகளை அவன் வாழ அவனுக்கு ஆதாரசக்தியாக அமைபவனும் இறைவனேதான்!

இப்படியிருக்க, உலக வாழ்வு சம்பந்தமாகவும்; உய்வு பெறும் மறு உலகப் பேரின்ப வாழ்வு சம்பந்தமாகவும் ஏற்படும் எல்லாப் பிரச்னைகளுக்கும்—அவன் அண்டி வேண்டிக்கொள்ள வேண்டியது, எல்லாவற்றுக்கும் காரண சக்தியாக இருக்கும் இறைவனைத் தானே...!

குழந்தை அடிபட்டு வேதனை அடைந்தாலும், 'அம்மா' என்றுதான் அழுகிறது;

## பொன். பாஸ்கரமார்த்தாண்டன்

பசிவந்து துடித்தாலும், 'அம்மா அன்னம்தா...' என்றுதான் கேட்கிறது;

ஞானப் பசி வந்தாலும், 'அம்மா நான் படிக்க வேண்டும். கல்வி தரும் பள்ளிக்கு என்னை அனுப்பு!' என்றுதான் கேட்கிறது.

அதைப்போல், மனிதன் இவ்வுலக வாழ்வுச் சிரமங்கள் ஏற்படும் போதும்; மறு உலக வேட்கை வரும் போதும் இறைவனைத்தான் வேண்டக் கடமைப் பட்டிருக்கிறான்.

உலகத்தில் வாழ அவனை அனுப்பி யிருப்பது இறைவன். அந்த வாழ்க்கையில் அவனுக்குப் பிணி வந்தாலும், பசி வந்தாலும், துயரச் சுமைகள் வந்தாலும் நெருக்கடிகள் எதிர்ப்பட்டாலும்—அவற் றிலிருந்து விடுபட அவன் இறைவனை நோக்கிக் கையெடுத்தால் அதில் தவறென்ன...?

அதோ, திருவேற்காடு திருத் தலத்தில் கலைமகளாய், அலைமகளாய், பூமகளாய்—இந்த முப்பெரும் தேவியரும் ஒருருவில் அமைந்த தலைமகளாம் ஆதிபராசக்தியாய், நாரணியாய், நீலியாய், மகா மாரியாய், மகா காளியாய் புவனேசுவரியாய்—கருணையே உருவாய் ஐந்தொழில் நாயகியாம் அன்னை கருமாரி ஈருருவாய் திருவேற் காட்டில் அமர்ந்து ஈரேழு புவனங்களை யும் சாம்பல் பிரசாதத்தால் காத்தருளக் கரம் நீட்டிக் கொலுவிருக்கிறாள்.

அவள் எதிரே எத்தனை எத்தனை ஆசாபாசங்கள்..... எத்தனை எத்தனை பக்திப் பிரபாவங்கள்..... எத்தனை எத்தனை கேள்விகள்... எத்தனை எத்தனை பதில்கள்... எத்தனை எத்தனை பேதமைக் கதறல்கள்—கண்ணீர்கள்- நம்பிக்கைகள்—ஆறுதல்கள்—தேறுதல்கள்...



## கருமாரி

○ மாரி என்றால் மழை. மழைபோல் கருணையை வழங்கும் அம்பிகையின் நிறமும் கறுப்பு என்பது ஐதிகம். எனவே, அன்னைக்கு இத்தலத்தில் கருமாரி எனப் பெயர் வழங்குகிறது என்கின்றனர் சிலர்.

○ மாரியம்மனுன தேவி கருநாக வடிவிலும் காட்சி தருவதால் கருமாரி என்றும் கூறப்படுகிறது.

○ தேவியானவள், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் சகோதரி. யசோதையின் வயிற்றில் உதித்து, ஸ்ரீகிருஷ்ண னுக்குப் பதிலாக சிறைக்குக் கொண்டுவரப்பட்டு - பின் கம்சனிடமிருந்து தப்பித்த மாயை இவளே. கருவிலே மாறியதால் அன்னைக்கு 'கருமாரி', 'கிருஷ்ண மாரி' என்ற பெயர்களும் உண்டு என்றும் சிலர் கூறு கின்றனர்.

○ 'க' என்று எழுத்து கலைமகளைக் குறிக்கும். 'ரு', ருத்ராணியைக் குறிக்கும்; 'மா', மகாலட்சுமியைக் குறிக்கும். இம் மூன்று தேவியரும் ஒருருவாய் அமைந்ததோடு, 'ரி' என்ற ரீங்காரத்தினுள் உறைபவளாக அன்னை இருப்பதால் அவள் கருமாரி ஆயினள் என்றும் சொல்லப்படுகிறது.

அடர்ந்த தாடியுடன் வெண்ணீறும் குங்குமமும் அணிந்து நிற்கும் முதியவர் ஒருவர்.... "எனக்கு என்ன வேணும் இனிமே! ஒண்ணுமில்லே. என் அம்மை பாதத்திலே உயிரை விட்டு அவளோட ஐக்கியமாயிடணும். அதுக்காகத்தான் தினம் அவளைத் தேடி வந்து அவ காலடியிலே காத்துக் கிடக்கிறேன்!"—பக்திப்பரவசத்தில், மோட்சம் மாக இருக்கும் பக்திப் பழமாய் அவர் உருகி நிற்கிறார். இவ்வுலக வாழ்வுக் கணக்கை மனத்தளவில் முடித்துக் கொண்டுவிட்ட விடுதலை நெட்டுயிர்ப்பு—உணர்ச்சிப் பிரவாகமான அவரது கண்களில்.

"குடும்பத்திலே தாங்கமுடியாத வேதனை இருந்ததுங்க. 'தாயே நீதான் எல்லாத்தையும் தீர்த்து வைக்கணும்'னு கருமாரி அம்மன் கோயிலுக்கு ஆறுமாசமா தொடர்ந்து வர்றேம். இப்ப பெண்ணுக்குக் கல்யாணம் ஆயிட்டுது. உடம்புப் பிணி குறைந்து ஓரளவு சுகமா இருக்கு. பையன் பி.காம்., படிக்கிறான். கருமாரி அருளால

மனிதர்கள்...... எத்தனை எத்தனை என்னும் வீட்டுக்கு எந்நேரமும் ஆயத்த பாஸ் பண்ணிடுவான்னு நம்பிக்கை

இருக்கு. அம்மன் சந்நிதிக்கு வந்துட்டுப் போனதிலேருந்து மனசிலே நிம்மதி இருக்கு!'' என்கிறார்—சென்னை ஏழுகிணறு போஸ்ட் மாஸ்டரின் துணைவியார் திருமதி லட்சுமி வெங்கடேஷ்.

''ஐந்து குழந்தைகளோட குடும்பத்திலே எவ்வளவோ நெருக்கடிகள் இருந்தது. அம்மனை வேண்டிக்கிட்டு வந்ததிலேருந்து கொஞ்சம் கொஞ்சமா நிம்மதியாகிகிட்டு வருதுங்க'' என்கிறார் சென்னையைச் சேர்ந்த திருமதி சாந்தி பாலசுப்ரமணியம்.

திருநெல்வேலி கயத்தாறு கிராமத்தைச் சேர்ந்த படித்த இளைஞர் பரமேஸ்வரன் — 1967-லிருந்து வேலை கிடைக்காமல் தவித்துக் கொண்டிருக்கிறார். தன் துணைவியார் திருமதி மீனாவுடன் (அவரும் கற்றவர். தட்டெழுத்துப் பயின்றவர்) வேலை வாய்ப்பைத் தேடி வடக்கு நோக்கி வந்து — இன்று திருவேற்காடு தலத்தில், அன்னையின் கோயிலுக்கு வெளியே ஒரு கடை ஒன்றில் (தன் உறவினருடையது) தங்கியிருக்கிறார்.

''கிட்டத்தட்ட பத்து வருஷமா வேலை இல்லாம சிரமப்பட்டேன். ஆசிரியர் உத்தியோகம் வாங்கித் தருவதற்குக்கூட பல இடைத்தரகர் ஐயாயிரம் ரூபாய்வரை பணம் கேட்டார்கள். நொந்துபோய் இங்கே வந்து கருமாரி அம்மன் காலடியிலே தஞ்சமடைந்தேன். இப்ப வாழ்க்கையிலே நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது'' என்கிறார் பரமேஸ்வரன்.

''வேலை கிடைத்து விட்டதா?''

''இன்னும் இல்லே. ஆனா அம்மன் அருளாலே கிடைத்துவிடும் என்ற நம்பிக்கை பிறந்திருக்கு. இத்தனை காலமா எத்தனையோ வேலைக்கு மனுப் போட்டேன். யாரும் பதில் கூட போடலே. அம்மனை வேண்டிகிட்டு இப்ப போட்ட மனுவுக்கு இன்டர்வியூ கார்டு வந்திருக்கு. சீக்கிரமே வேலையும் தந்துடுவா கருமாரித்தாய்!'' என்கிறார் பரமேஸ்வரன் நம்பிக்கையுடன்.

...இப்படிக் கோடானுகோடி மனித ஜீவன்களின் நம்பிக்கைகளுக்கு—வாழ்க்கைப் பிரச்னைகளுக்கு ஆதர்சமாக,



ஆதாரமாக, நம்பிக்கை ஒளியாக, எல்லாவற்றையும் ஏற்று நடத்தும் நாயகியாக அத்தலத்தில் அமர்ந்திருக்கிறாள். தேவதேவியான கருமாரி.

அவளுடைய ஆலயத்தை திருவேற்காடு தலத்தில் கட்ட பெரும் சக்தியாக நின்ற தேவிதாசர் இராமதாசர் கூறுகிறார்: ''இந்தத் தலத்திலே அம்மனுக்கு கோயில் அமைக்கணும்னு நாங்க முயற்சி பண்றப்போ, அம்மன் எங்களுக்கு கொடுத்த அருள்வாக்கு ஒன்றே ஒன்றுதான்... 'வீணே தீர்த்து ஆலயம் கட்டிக் கொள்கிறேன்' என்று வாக்கிட்டாள். அதன்படியே இங்கு நாடிவரும் பக்த மாஜனங்களின்வினைகளையெல்லாம் தீர்த்து—அவர்கள் அள்ளி அள்ளித்தரும் காணிக்கைகளைக் கொண்டு தனக்கு ஆலயம் அமைத்துக் கொண்டாள் அன்னை. அது நாள்தோறும் பெருகிக் கொண்டிருக்கிறது. அன்னைக்கு திருப்பணிகள் செய்யவும், அபிஷேகக் கட்டளைகள், சங்காபிஷேகங்கள்போன்ற தெய்வப் பணிகள் செய்யவும் போட்டி போடும் பக்தர்கள் கோடி கோடி!''

ஃ ஃ ஃ

வருமருளி கவிதீர்த்து அனைத்து உயிரையும் கடைத்தேற்ற அன்னை ஓர் அற்புத சக்தியுடன் இத் தலத்தில் கருணை கொண்டிருக்கிறாள்.

யுக யுகாந்திரங்களுக்கு முன் — அண்ட புவனங்களும் தோன்றும் முன் — ஜீவ கோடிகள் கருவாகும் முன்—சர்வ வல்லபமாய், சர்வ வியாபகமாய், சக்தி

என்னும் பெருந்தத்துவமாய் எங்கும் நிறைந்திருந்த ஆதி பராசக்தி—ஆக்கல் அழித்தல் காத்தல் என்னும் முப்பெருந் தொழில்களுக்கும் தானே உறைவிடமாக திகழ்ந்திருந்தாள். அந்த மகாசக்தியோடு சிவன், பிரம்மா, விஷ்ணு என்று மும்மூர்த்தித் தத்துவங்களும் ஐக்கியப்பட்டு சங்கமித்திருந்தன. அந்த மகா சக்தியிலிருந்துப் படைப்புத் தொழில் பிரம்ம தத்துவமாகவும், காத்தல் தொழில் விஷ்ணு தத்துவமாகவும், அழித்தல் சிவ தத்துவமாகவும் இயங்கின. அந்த இயக்கத்துக்கு உறு துணையாக ஆதிபராசக்தியின் அம்சங்களான பார்வதி சிவனோடும்; மகாலட்சுமி விஷ்ணுவோடும்; கலைமகள் பிரம்மாவோடும் இணைந்திருந்தனர்.

இப்படி 'இறை' என்னும் மாபெரும் ஆதிபராசக்தி பல ரூபங்களாக ஜீவராசிகளுக்கு அருள்பாலித்து அவர்களை இயக்கி வந்தாலும் — எல்லா அம்சங்களிலும் இறை தத்துவம் ஒளிர்ந்து, பிரணவ தத்துவமாக அண்டசராசரங்களின் இயக்கம் நடைபெற்றது.

பல அம்சமாக வெளிப்பட்ட மூல சக்தி — திருவேற்காடு திருத்தலத்தில் கருமாரி என்னும் பெயரில் ஒரே சக்தியாக அமைந்து சர்வவல்லமையுடன் இயங்குகிறது. இதை அகத்தியன் மூலம் உலகுக்குப் பரமேஸ்வரனே வெளிப்படுத்தியதாக ஓர் இறை வரலாறு கூறுகிறது.



**சென்னைக்கு அருகே.....**

தேவி கருமாரியம்மன் உறையும் திருவேற்காடு திருத்தலம், சென்னையிலிருந்து 12 மைல் தொலைவில் அமைந்திருக்கிறது. சென்னை, பெங்களூர் நெடுஞ்சாலையிலுள்ள வேலப்பன் சாவடி என்ற இடத்திலிருந்து வட திசையில் பிரிந்து சுமார் அரை மைல் தூரம் சென்றால் அம்மனின் திருக்கோயிலைத் தரிசிக்கலாம்.

பூவுலகில் மலைமகளாய் அவதரித்த பார்வதிக்கும் — பரமேஸ்வரனுக்கும் கயிலையில் கடிமணம். தேவர் குலத்தின் வருகையால் பாரம் தாங்காது கயிலை தாழ்கிறது; பாரதத்தின் தென்பகுதியோ சமன் இன்றித் தடுமாறுகிறது. அது சமயம் தென்புலத்துக்குச் சென்று பூமகளை நேர்ப்படுத்த இறைவன், அகத்திய முனிவரை அனுப்புகிறார்.

''இறைவா! தெற்கே செல்லும் நான் உன் திருக்கல்யாணக் காட்சியைக் காண்பது எப்படி?'' என்று கேட்கிறார் அகத்தியர்.

''நீ இருக்கும் இடத்தில் நாம் வந்து காட்சி தருவோம்!'' என்று அருள் பாலிக்கிறார் இறைவன்.

அந்தக் காட்சி திருவேற்காடு திருத்தலத்தில் அகத்தியருக்குக் கிடைக்கிறது. அப்படி காட்சி தந்து கயிலைக்கு இறைவன் திரும்பும்போது அகத்தியர் கேட்கிறார்: ''இறைவா, தேவபுரி நாதா! உன்னைப் பிரிந்து எங்ஙனம் இருப்போம்?'' என்று.

அப்போதுதான் இறைவன், ''அகத்தியரே கவலையை நீக்குக... இத்தலத்தில் சிவம்-சக்தி-விஷ்ணு என்ற சக்தி தத்துவங்களின் தத்துவமாக — சாம்பல் பிரசாதத்திலேயே சர்வ உயிர்க்கும் நாயகியாய் கருமாரி நின்று அருள் புரிந்து வருவாள்!'' என்கிறார்...

அந்த விநாடியே ஏழுசக்தியாய், ஈருருவாய், ஓம்கார தத்துவமாய், ஏழு பிறப்புக்கும் உயிர் நிலையாய், இம்மைக்கும் மறுமைக்கும் ஜீவஒளியாய், எல்லாருக்கும் எல்லாமுமாய் எழுந்து நிற்கிறாள் கருணையை மாரியாகப் பொழியும் எம் அன்னை கருமாரி!

(தொடரும்)

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
துணை ஆசிரியர்கள்: தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி: 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை-600 032.









# அமிர்தாஞ்சன்

## சக்திமிக்க வலி நிவாரணி




# அனோலியம்

## மென்மையான ஜலதோஷ நிவாரணி




அமிர்தாஞ்சன் அதிக சக்தி வாய்ந்தது. தலைவலி, முதுகுவலி, தசைவலி, சுளுக்கு மற்றும் ஜலதோஷத்திலிருந்து விரைவில் விடுபட, அருமையான பத்து மருந்துப் பொருள்களைக் கொண்டது.

அனோலியம் ஜலதோஷம், இருமல் மற்றும் மார்புச் சளியிலிருந்து விரைவாக, நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. மேலும், இது மிருதுவான சருமத்திற்கென்று விசேஷமாகத் தயாரிக்கப்பட்டிருப்பதால் சருமத்திற்கு மிக இதமானதும் ஆகும்.

அமிர்தாஞ்சன், அனோலியம். இல்லந்தோறும் இருக்கவேண்டிய நல்ல மருந்துகள்.

அமிர்தாஞ்சன் லிமிடெட்
80 ஆண்டுகளுக்கு மேலாக குடும்பங்களில் பயன்பட்டுவரும் நம்பகமான மருந்துகளைத் தயாரிப்பவர்கள்.

AM-1578 TAM

## 3

கண்ணுசைக் காட்டிமயல் பெண்கள் நட்பில்
கனிவோடு நயந்துருகும் சபலனம்மா
விண்ணுசைத் தேவர்போல் வாழ, அம்மா,
விதியருள நீபள்ளி யெழுந்தருளாயே!

—தேவி கருமாரி அம்மன் திருப்பள்ளி யெழுச்சி

'தெய்வம் உண்டா, இல்லையா?' -பண்டு தொட்டு எழுந்த பழம்பெரும் சர்ச்சை இது. இதைப் பற்றி வம்பு கொண்டு வாதித்தும், எதிர்வாதம் செய்தும் தம்தம் அறிவு சாமர்த்தியத்தைக் காட்டிக் கொள்வதில் மனிதர்களுக்கு ஒரு கர்வம். அந்தச் சண்டையிலும் வாதத்திலும் பக்தியும் இல்லை; பகுத்தறிவும் இல்லை. இவற்ருல் ஆஸ்திகர்களிடமும் சரி; நாஸ்திகர்களிடமும் சரி — அறிவுக் கர்வமும், வக்கிரவாத சாமர்த்தியங்களும்தான் வெளிப்படுகின்றன.

'தெய்வம் இருப்பதை எப்படி ஒப்புக் கொள்வது?' என்று ஒரு கேள்வியைக் கேட்டு - அதற்கு முற்றுப்பெருத பதில்களைச் சொல்லி, பெருமைப்பட்டுக் கொள்கிறது அறிவு.

'உன் மனத்துள்ளே இருக்கிருன் இறைவன்! அவனே நீயே உணர்ந்து கொள்!' என்று தத்துவமாகப் பதில் சொல்லி வைத்தார்கள் சித்தர்கள்.

உடம்பில் வலியைக் கண்ணுல் பார்க்க முடிகிறதா...? அப்படித்தான் இறைவனும்!' என்று உவமானம் சொல்லி மகிழ்கிருர்கள்.

இந்த வாதங்கள் எல்லாம் ஓர் எல்லையை எட்டும்போது குழப்பமாகி விடுகிறது.

இறைவனை உடம்பு வலிக்கு எப்படி ஒப்பிட முடியும்? ஒரு தாக்குதலினுல் உருவாகும் ஒரு மூன்ரும் சக்தி அது. இறைவனும் அப்படித்தான் வேறு சக்தியால் உருவானவஞ...? பேதமை!

அப்படியாஞல் தெய்வத்தை எப்படிக் காண்பது?



ஓ. வி. எஸ். பாலகிருஷ்ணன்

இதற்கு மனிதனுல் பதில் சொல்ல முடியாது.

ஆனல் பதில் இருக்கிறது. அந்தப் பதிலைத் தெய்வமே சொல்லியிருக்கிறது..

சர்வேசுவரனின் அடியை-முடியைக் காண போட்டிப் போடுகிருர்கள் அரியும், பிரம்மாவும். ஆனல் இருவரும் முயன்று தேடி அலைந்தும், அவற்றைக் காண முடியவில்லை.

அதே சர்வேசுவரன்தான் மதுரையில் பிட்டு விற்று வாழ்ந்து கொண்டிருக்கும் ஏழைக் கிழவியிடம் வலிய போய் விளையாட்டுப் பித்தனைக் காட்சி அளிக்கிருன்; பிரம்படி படுகிருன்...!

இதுதான் இறைவனின் தரிசனத் தத்துவம்.

ஆம்! யாரும்தன்சாமர்த்தியத்தாலோ அறிவு அகம்பாவத்தாலோ இறைவனைத் தேடிச் சந்தித்துவிட முடியாது.

ஆனல் மனத்தில் எளிமை உண்டாஞல் இறைவன் தருணமறிந்து தன்னைத் தானே வெளிப்படுத்துகிருன்...

இன்றும் ஆயிரமாயிரம் கோயில்கள் நாடெங்கும் அமைந்திருந்தும், சில திருத்தலங்களில் மட்டும் சிறப்புற்ற அருள் வேகத்துடன் இறைவன் காட்சி தந்து கொண்டிருக்கும் காரணமும் இதுதான்.

மனிதர்கள் தம் செல்வச் செருக்கில் கட்டி வைக்கிற பல கோயில்கள், அவன்

# பொன். பாஸ்கரமார்த்தாண்டன்

தலைமுறைக்குள்ளேயே சிதிலமாகி யிருக்கின்றன. ஆனால் இறைவன் தானே சுயம்புவாகவோ, அல்லது வேறு பல நிமித்தங்களாலோ தன்னை உணர்த்தி-தாமாக வெளிப்பட்டுக் காட்சி தந்த பல திருத்தலங்கள் தலைமுறை தலைமுறையாக கீர்த்திப் பிரபாவத்துடன் கோடானு கோடி மக்களை வசீகரிக்கும் அருள் கேந்திரங்களாகத் திகழ்கின்றன.

அந்தமுறையில்—

கல்ப கோடி காலம் தொட்டு இன்று வரை கோடானுகோடி நிமித்தங்களால்-வாழ்க்கை வரங்களால்—அருள் பிரசாதங்களால்—கருணை ஒளியால் தேவதேவியான அன்னை கருமாரி தன்னை வெளிப்படுத்தி அருளாட்சி செய்துவரும் திருத்தலம் இத் திருவேற்காடு...!

•

இன்று, அதோ... எண்ணற்றப் பெருங்கூட்டமாக எம் அம்மையின் திருச்சந்நிதியில் — 'தாயே போற்றி, தவப்பயனே போற்றி! நாயகி போற்றி! நாரணி போற்றி! மாரியே போற்றி, மகமாயி போற்றி! காரணி போற்றி, கருணையே போற்றி! கருமவினை தீர்க்கும் எம் அன்னை கருமாரியே போற்றி!' என்று பக்திப் பரவசத்துடன் கரம் கூப்பி, அன்னையின் அருள் மழைக்காகச் சிரம் தாக்கிக் குரல் கொடுத்துத் துதித்துக் கொண்டிருக்கும் பக்தர் கூட்டத்தில், ஒவ்வொருவரும் அன்னையைக் கண்டிருக்கிறார்கள். ஆம்! ஒவ்வொருவருக்கும் தன்னை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறாள் தேவி.

ஒவ்வொருவரும் அவளை ஏதோ ஒரு நிகழ்ச்சியால், நிமித்தத்தால் தரிசித்து அவளைப் பற்றிக் கொண்டு, பற்றெல்லாம் அவள் பாதத்தில் வைத்து பரவித் தொழுது கொண்டிருக்கிறார்கள்.

''14 வருஷத்துக்கு முந்தி நான் வாலிபனா இருக்கிறப்போ எங்க குடும்பத்தோட இந்தக் கோயிலுக்கு வந்திருந்தேன். அப்போ தெய்வத்தின் மேல் எனக்கு நம்பிக்கையே கிடையாது. இங்கு, அம்மன் மருள் வந்து குறிகாரர் ஆடிச் சொன்னதைப் பார்த்துட்டுப் போய், வீட்டில் வைத்து அவர் ஆடின படியே பழித்துக்காட்டினேன். அவ்வளவு தான். மூணு நாளா கண் விழிக்க



நாகராஜ குருக்கள்

முடியாத ஜுரம். நான் செய்த தப்பை உணர்ந்து அம்மனை வேண்டிக் கிட்டேன். ஜுரம் விட்டுடுச்சு. அன்னிக்கு முதல் அம்மனுக்கு பக்தனா மாறினேன். கடைசியிலே அவ கோயிலுக்கே மானேஜிங் டிரஸ்டியா பணி செய்ற நிலையும் எனக்குக் கிடைச்சுது'' என்கிறார் சென்னை, மந்தவெளி வி. எஸ். பாலகிருஷ்ணன்.

தெய்வத்தை எத்தனையோ பேர் பழிக்கிறார்கள். அவர்கள் எல்லாருக்குமே ஜுரம் வருவதில்லை. தெய்வம் தண்டிப்பது இல்லை. திரு. வி. எஸ். பாலகிருஷ்ணனைத் தன் பக்தனுக்கிக் கோயில் பணிக்கு ஆட்கொள்ளவே, ஜுர உருவில் தன்னை வெளிப்படுத்தி அவரைத் தம் பக்கம் வசீகரித்துள்ளாள் அன்னை.

இப்படி மகிமைகள் நிகழ்த்தும் மகமாயியாக - வரமருளும் வாலையாக தம் பெருமையை ஒவ்வொருவர் வாழ்விலும் வெளிப்படுத்தி, கதியற்ற ஏழைகளின் கண்கண்ட தெய்வமாக காட்சி தந்து கொண்டிருக்கிறாள் அன்னை.

மேலும் தன் எளிய பக்தர்களின் காட்சிக்கு எளிமையாக ஒரு விசித்திர வடிவையும் அம்மை இத்தலத்தில் ஏற்றுத் தரிசனம் தருகிறாள்.

அதுதான் கருநாக வடிவம்!

அன்னையின் திருக்கோயிலில் பணி புரியும் நாகராஜ குருக்கள் சொல்கிறார்:

''பல தடவை அம்மன் அந்த உருவில் நடமாடுறதை நான் என் கண்ணாலேயே பார்த்திருக்கிறேன். முதல்லே கோயில் திறக்கும்போது அம்மன் சிலேமேலே படுத்திருக்கிறதையும் பார்த்திருக்கிறேன். ஒரு நாள் என் கையிலே வாலால் அடிச்சிருக்கு. சில நாள் இரவு கோயில்லே படுத்திருக்கும்போது பக்கத்திலே இருக்கிற புற்றிலிருந்து புறப்பட்டுக் கோயிலுக்குள் அம்மன் போகிற ராத்திரி என் கண்ணுக்குக் காட்சி கிடைச்சிருக்கு'' என்கிறார்.

''அம்மனின் இந்த நடமாட்டத்தைக் கண்டு ஜனங்க பயந்துடக் கூடாது என்கிறதுக்காகத்தான் காலையிலே 'கோ'பூஜைக்கு ஏற்பாடு செய்து நடை திறக்க ஏற்பாடு செய்தோம்... ஆனு அம்மனின் மகிமை பாருங்க... இங்க... அம்மனே நாக வடிவிலே இருக்கிறதாலே ஓர் அற்புதமான மகிமை இந்த ஊரிலே இருக்கு. இந்தத் திருவேற்காடு தலத்தில் பாம்பு தீண்டினலும் யாருக்கும் விஷம் ஏறுவதே இல்லே. அந்த அற்புதம் இன்றைக்கும் கண்கூடாக நடந்து கொண்டிருக்கிறது'' என்கிறார் தேவி உபாசகரான சுவாமி இராமதாஸர்.

திருத்தலங்கள் தோறும் உருவங்கள் ஆயிரம் கொண்டவள் ஆதி பராசக்தி. இத் தலத்தில் அவள் கொண்டிருக்கும் கோலங்களோ அருளும் வீரமும் கொண்ட அபூர்வ வல்லமை கொண்டவை.

அன்று திருநீற்றுல் ஐந்தொழிலையும் ... சக்தியான

அன்னை தன் திருவுளம் கொண்டு எழுந்த போது அன்னுள் ஏழு அம்சங்கள் கொண்டு பக்தர்களுக்கு அருள்புரியத் திருவுளம் கொள்கிருள்.

அவை: அந்தரி—வானத்தி—பார்ப்பனி—விசாலாட்சி - மீனுட்சி - காமாட்சி — கருமாரி.

அந்தரி, வானத்தி, பார்ப்பனி அம்சங்களாக அன்னை வானவெளியில் சஞ்சரித்து அருள் புரிகின்றுள், மீனுட்சி அம்சமாக தென்மதுரையில் அமர்ந்தாள். விசாலாட்சி அம்சமாக காசியில் அமர்ந்தாள். காமாட்சி அம்சமாக காஞ்சியில் அமர்ந்தாள். திருவேற்காட்டிலோ கருமாரியாய் அவள் அமர்ந்தாள்.

கருமாரி என்னும் திருஅம்சத்தில் அன்னையின் சக்தி ருத்ர சங்கமத்துடன் பெரும் சக்தி கொண்டு திகழ்கிறது. வேறு எந்த தேவி அம்சத்துக்கும் இல்லாத தனிப்பெரும் சக்தி வெளிப்பாட்டை இந்தத்தலத்தில் காண்கிறோம். அதுதான் அம்மை ஏற்றிருக்கும் சுருரு!

ஒன்று அம்பிகையில் திருவுருவம்; அடுத்தது, தலைகாட்டி மற்றும் நிலை மறைக்கும் கருநாக வடிவம்!

ஆம்! அண்டிரேரின் வினையறுக்க திருமூர்த்திகளின் சக்தி பிரதிபிம்பமாக திரிசூலத்தை ஒரு கையிலும், அஞ்ஞான மாயைகளை அறுத்தெறியும் கட்கத்தை (வாளி) ஒரு கையிலும், 'ஓம்' என்று உச்சரிக்கும் நாதப் பெருவெள்ளத்தில் நானிருக்கிறேன்' என்று உணர்த்த உடுக்கையை ஒரு கையிலும், அண்டிரேருக்கு 'அமுதமாய்' வரமருள்வேன்' என்று உணர்த்தப் பொற்கிண்ணம் ஒரு கையிலும் ஏந்தி - வேற்கண்ணி என்னும் அம்பிகையாய் சிவனேடு இணைந்து ஒரு திருக்கோலத்திலும்; 'காசினியெங்கும் காணும் துஷ்ட சக்திகளைத் தீண்டி வேரறுப்பேன்' என்று உணர்த்த கருநாக அம்சமாக தலைகாட்டி நிலைமறைக்கும் ஒரு உருவம் ஆக இருபெரும் உருக்கொண்டு எழுந்தருளியிருக்கிருள் அன்னை...

இப்படி வினை அறுக்கும் வேற்கண்ணியாக, பகை முடிக்கும் பத்ர காளியாக, உயிர் காக்கும் உமா மகேஸ்வரியாக, அருள் சுரக்கும் கருமாரியாக—வெண்ணீற்றிலும் வேப்பிலையிலும் வித்தாகி, 'ஓம்' என்னும் பிரணவ தத்துவத்தின் சத்தாகி, அன்னை பராசக்தி தன் முழு வல்லமையும் ஒளி வீச இத்தலத்தில் வீறு கொண்டு வெளிப்பட்டதால்தான் — அன்று சூரபத்மன் என்னும் பகைமுடிக்கும் சக்தி வேலை அன்னையிடமிருந்து பெற—தேவ புத்திரனை திருமுருகனே இத் தலத்தைத் தேர்ந்தெடுத்தான்.

வேதபூமியில் ஞான மணத்தை நுகராமல் பேதமை கொண்டு தேவர் களும் அசுரர்களும் மதிமயங்கி நின்றபோது நடந்தது அது...

(தொடரும்)

Idhayam Pesukirathu, Weekly
Registered No. TN/MS (s) 144 மலேசியாவில் விமானப் பதிப்பு 60 காசு

தேவி கருமாரி அம்மன்



# ஸ்ட்ராங்கானது தங்கமானது

# லியோ டஸ்ட் டீ

மிக உன்னதமான தேநீரோடு உங்கள் காலை நன்னாளாகத் துவக்க, இன்றே உங்கள் இல்லத்திற்கு லியோசிங்கத்தை அழைத்துச் செல்லுங்கள். டாடா-ஃபின்லே அளிக்கும் வளமான, தங்கமான டீ. ஒவ்வொரு பாக்கிலும் அதிகமான கோப்பைகள் ஸ்ட்ராங்கான சுவைமிக்க தேநீர் கிடைக்கின்றது. இதனால் இது சிக்கனமானது என்பதோடு மட்டுமல்ல, உங்களுக்கு ஊக்கமளிக்கும் ராஜபோக சுவையையும் உறுதி செய்கிறது என்பது நிருபணமாகிறது.




## லியோ டஸ்ட் டீ

**டாடா-ஃபின்லே தயாரிப்பு**



daCunha/TFLT/2 TM

## வரதட்சணை இன்றி திருமணம் செய்து கொள்ள வேண்டுமா?



''வரதட்சணையை வெறுக்கிறேன்'' என்று உறுதிமொழி கூறும் முற்போக்கு இளைஞர்களையும், மங்கையரையும் உங்களுக்கு அறிமுகப்படுத்தவிருக்கிறது **மங்கையர் மலர்.**

திருமண வயதில் பெண்ணையோ பிள்ளையையோ வைத்துக் கொண்டு, பணமின்றி அவதிப் படுவோருக்கு ஒரு வரப்பிரசாதம்.




விபரங்களுக்கு

இம்மாத **மங்கையர் மலர்** படியுங்கள்.

பெண்களுக்கான முதல் தமிழ்ப் பத்திரிகை

தனிப்பிரதி ரூ. 2/-

வருடச் சந்தா ரூ. 20/-



மங்கையர் மலர்,
B-148, சாஸ்திரி நகர்,
சென்னை-20.

மங்கையர் மலர் நடத்தும் ''இம்மாத இல்லத்தரசி'' போட்டியில் பங்கு பெற்று காளி பிராண்ட் காப்பர் பாட்டம் ஸ்டெயின்லஸ் ஸ்டீல் பாத்திரங்களை வென்றிடுவீர்.

# தேவி தரிசனம்



பொன். பாஸ்கர மார்த்தாண்டன்



# வரம் தருவாள் கருமாரி

## 4

குண்டலி சக்தியாய் நின்றிடுவாள்—அறு
கோணத் திடலின்மேல் சென்றிடுவாள்
விண்ட பகையெல்லாம் வென்றிடுவாள்—
எங்கள்
வீரி முத்துக் கருமாரியம்மா..!

—ஸ்ரீதேவி கருமாரி ஞானக்கும்மி

நெல்லை மாவட்டம் திசையன்விளையைச் சேர்ந்த கே. கணபதி என்ற அன்பர் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்:

'2–4–78 இதழில் வெளியான 'தேவி தரிசனம்' கட்டுரையில் மும்மூர்த்திகளின் சக்திகளைத் தன்னுள் கொண்டு, 'ஆக்கல், அழித்தல், அளித்தல் மறைத்தல் அருளல்' என்னும் ஐந்தொழில்களையும் அன்னை கருமாரியே ஏற்று திருவேற்காட்டில் அருளாட்சி செய்வதாகக் குறிப்பிட்டிருக்கிறீர்கள்.

'அழித்தல்' என்பது வன்கொடுமையான செயலல்லவா..? கருணையே வடிவான கருமாரி அன்னை, அழிவுத் தொழில் செய்வது ஏற்புடையதா..? தயவுசெய்து விளக்குங்கள்.

தெய்வீக சத் விஷயங்களை விளக்கும் அளவுக்கு நான் அறிவார்ந்தவன் அல்ல. அப்பணியை நிறைவேற்ற, ஞானக் கடல்களாகப் பெருந்தவத்து ஆச்சாரிய மகான்கள் இம் மண்ணில் அவதரித்திருக்கின்றனர்.

எனினும், அந்த ஞானப் பெருமக்கள் இட்ட பிச்சையாக நான் கற்றுணர்ந்தவற்றை இங்கு தெரிவிக்கிறேன்.

ஃ

அழித்தல் என்றாலே பீதியூட்டும் வன்தொழில் என்று கொள்வது சரியல்ல.

அழித்தல் இருவகைப்படும்: ஒன்று, சரீரம் உள்ளிட்ட ஸ்தூல பொருட்களின் அழிவு— சம்ஹாரம்.

இரண்டாவது ஆத்மிகமான கொடிய உணர்வுகளின் அழிவு.

இரண்டும் தெய்வத்தின் தனிப்பெரும் கருணைச் செயல்கள்தாம்!

ஆம்! உடலை அழிப்பதனால்தான் ஒரு ஜீவனுக்கு பிறவியிலிருந்து விடுதலை கிடைக்கிறது. அது உண்மையில் பேரின்ப விடுதலை. தெய்விக வாழ்வின் ஆரம்பம். ஆக, மரணம் ஒரு ஜீவனுக்கு இறைவனால் அருளப்படும் மகத்தான விடுதலை. இதை உணராமல்தான் மனிதர்கள் பேதமையுடன், மரணம் என்ற பிறவிச் சரீர அழிவைக் கண்டு புலம்புகிறார்கள். இந்த மரணமும் தெய்வக் கருணையால் தான் நிறைவேறும்.

இன்னொரு அழித்தல் - நம் ஆத்மாவில் சேர்ந்த துர்க்குணங்களை, தெய்வம் பெருங்கருணை கொண்டருளி அழிப்பது. அகத்தில் (மனத்தில்) இருக்கும் காரமான குணமாகிய அகங்காரத்தால் மனிதன் செய்யும் எண்ணற்ற பாவங்களை அழிக்க தெய்வத்தைத் தவிர வேறு யாரால் முடியும்? சக்தி சொரூபமான தெய்வம், கருணைப் பெரும் வேல் கொண்டு அந்த தீவினைகளை — தீய எண்ணங்களை அழித்தால்தானே நம் ஆத்மா உய்வு பெற முடியும்....?

களையை அழித்துப் பயிரைச் செழித்து வளரச் செய்வதுபோல், நம் தீவினைகளை- தீய எண்ணங்களை - பாவங்களை, இறை சக்தி தம் கருணையால் அழித்து நம்மைக் கடைத்தேற்றுகிறது.

அழித்தல் என்னும் இந்த கருணைத் தொழிலை, கருணை மாரியான கருமாரி அன்னை அன்றி பிறிதொருவர் ஏற்க முடியுமோ? அதனால்தான் திருவேற்காட்டில் அவள் அழித்தலையும் ஏற்று நிறைவேற்றுகிறாள்!

இன்றும், அன்னை தன் அளவற்ற கருணையால் - அருளால் நிகழ்த்தும் அரும்பெரும் அழிவுச் செயல்கள்தான் எத்தனை எத்தனை!

அதோ! அத் தலத்தில் அம்மை முன் கரம் குவித்து நிற்கும் சென்னை மின்ட் தெருவைச் சேர்ந்த பாலாம்பிகா ஆட்டோமொபைல்ஸ் திரு. கோபால கிருஷ்ணன், ''என் தாய் கருமாரி என் துன்பத்தை யெல்லாம் அழித்தவள்! என் தொழிலில் நம்பிக்கை மோசடிக்கு உள்ளாகி கிட்டத்தட்ட 23000 ரூபாய் நஷ்டமடைந்து, வாழ்வே சோதனையா மாறிப் போச்சு எனக்கு. அப்ப எனக்கு கை கொடுக்க யாருமில்லை. என் தாய் கருமாரியைத்தான் நம்பி நான் அவ ஆலயத்தை வந்தடைந்து வழிப்பட்டேன். அவ என்வேதனையை அழிச்சு, என் குடும்பத்துக்கு நிம்மதியைக் கொடுத்துட்டா..!'' என்கிறார். இவர் விஷயத்தில் துன்பத்தை அழித்தாள் அன்னை.

காஞ்சிபுரத்தைச் சேர்ந்த நாடகாசிரியர் நடிகர் கே.ரங்கமணி,

**கருநாக வடிவான அன்னையின் கோயில் புற்றுக்கு வணக்கம்**



## ஆலய அதிகாரிகளின் கவனத்திற்கு...!

சமீபத்தில் அன்னை திரு அருள்மிகு கருமாரி அம்மன் கோயில் சென்று தேவியை வழிபடும் வாய்ப்பு கிடைத்தது. அங்கே மிதியடிகளை விட்டுச் செல்லும் இடத்தில் கோயில் தேவஸ்தானத்துக்குச் சொந்தமான ஒரு கூட்டத்தார் டோக்கன் கொடுத்துக் காலணிகளைப் பார்த்துக் கொள்கிறார்கள். அந்த டோக்கன்களில் தேவியின் திருவுருவம் ஒரு பாதியில் அச்சாகி இருக்கின்றது. காலணிகளைத் திரும்பப் பெறுபவர்கள் தரும் டோக்கன்களை அவ்விடத்திலேயே கிழித்துப் போட்டு நம் செருப்புகளைத் தருகிறார்கள். சேறும் சகதியும் அடைந்த நூற்றுக்கணக்கான காலணிகளின் கீழே, தேவியின் திருவுருவம் பதிந்த டோக்கன்களும் மிதிபடுகின்றன. டோக்கன்களில் தேவஸ்தானத்தின் பெயர் இருந்தால் போதாதா? தேவியின் படத்தைச் செருப்பு டோக்கன்களில் போட்டு பல நூறு காலடிகளால் மிதிபடச் செய்வது ஆத்திகர் மனத்தைப் புண்படுத்துகிறது. இந்நிலையை உடனடியாக மாற்றியமைக்கக் கூடாதா...?

—ரஜினி நாராயணன் எம்.ஏ.

''நான் நாடகம் எழுதுவதையும், அந்த நாடகத்தில் நடிப்பதையும் தொழிலாகக் கொண்டவன். அன்னை கருமாரியின் அளவற்ற பெருமைகளைக் கருப்பொருளாகக் கொண்டுதான் நான் நாடகங்கள் எழுதி நடித்து வந்திருக்கிறேன். எனக்கு மனத்தில் ஒரு ஏக்கம். போதிய வாழ்க்கை வசதிகளுக்கான வருமானத்துக்காக, திரைப்படங்களிலும் பணிபுரிய வேண்டும் என்பதுதான் அந்த ஏக்கம். ஆனால் அதற்காக நான் வேறெங்கும் தேடி அலையவில்லை. அன்னையின் மீது பாரத்தைப் போட்டு, அவள் பாத சேவையை மட்டும் செய்து வந்தேன். ஆனால் அன்னையோ அவளுடைய சந்நிதியிலேயே ஒரு திரைப்படப் பிரமுகருக்கும் எனக்கும் உறவை ஏற்படுத்தித் தந்து, என் திரையுலக வாழ்வுக்கு வழிகாட்டி என் ஏக்கத்தை அழித்து, வரமருளினாள்!'' என்கிறார் பக்திப் பரவசத்துடன்.

இப்படி எண்ணற்ற ஜீவன்களின் ஏக்கங்களை, துன்பங்களை, தவிப்புக்களை-தன் 'அழித்தல்' சக்திமூலம் நீக்கி, நலம்தரும் நாயகியாய், வருமருள் வாலையாய்; பாவம் அறுக்கும் பயங்கரியாய், மாசு போக்கும் மகமாயியாய், நீச்சம் ஒடுக்கும் நீலியாய், கலிதீர்க்கும் கருநாக உருக்கொண்ட அருள் வேத்ப் பெருநிதியாய் அன்னை கருமாரி திருக்கோலம் கொண்டு அருள்புரிந்து நிற்கிறாள் இத்தலத்தில்.

அன்னையின் அகண்ட பெரும் சக்திப் பேருருவுள் ஓர் அம்ச நாயகியாய் இணைந்திருக்கும், உமையவள், முன்பு வேற்கண்ணியம்மையாக திருநாமம் கொண்டு எழுந்தருளியிருந்தபோது



அன்னைக்கு சங்காபிஷேகம் நடக்க விருக்கிறது

ஓர் அரிய அழித்தல் பெருஞ் செயல் மூலம் உலகத்தைக் காத்தாள்.

வேத காலம் அது. அகந்தை வந்தால் தேவர்களாயினும் அரக்கராயினும் அழிவு நிச்சயம் என்று ஞாலத்துக்கு உணர்த்த—ஞானமுதல்வனான இறைவன் திருவுளம் கொண்ட நேரம் அது!

அமுதம் உண்டு சாகாவரம் பெற்ற மமதையில் தேவேந்திரன் முதலான அமரர்கள் காமக்குரோத சிந்தனைகளில் தம் ஆத்மாவை மாசுபடுத்திக் கொண்டிருந்தனர்.



காட்சியில் எஸ்.கே. ரங்கமணி - ஸ்வாமி இராமதாஸ்

அச்சமயம் சர்வ வல்லமையுடன் பூலோகத்தில் ஒப்பாரும் மிக்காரும் இன்றி வாழ்ந்த அரக்கனாகிய சூரபத்மன், தேவலோகம் சென்று, ஆத்மாவில் மாசு பட்டுக் கிடந்த தேவேந்திரன் கூட்டத்தை அடிமைப்படுத்தித் துன்புறுத்தினான்.

அவர்களுடைய பாவத்துக்குப் பிராயச்சித்தமாக தேவர்கள் இறப்பில்லாமலே சூரபத்மனால் துன்புற்று மனம் பக்குவப்பட்டனர்.

மனம் திருந்திய தேவர்களுக்குக் கருணை புரியத் திருவுளம் கொண்ட இறைவன், 'கார்த்திகை பாலனும் அறுமுகப் பெருமானின் திருக்கரத்தால் தான் தேவர்களுக்கு விமோசனம் பிறக்கும்' என உணர்த்தினார். உடனே தேவர்கள் திருமுருகனின் பொற்பாதம் பற்றி முறையிட்டனர்.

அண்டி வந்த அமரர்களின் அல்லல் தீர்க்க, ஆறுமுகன் திருவுளம் கொண்டு 'அஞ்சற்க' என அபயம் தந்தார்.

பின் ஆற்றல்மிகு சூரபத்மனை அழிக்கும் உபாயம் என்னவென்று ஆராய்ந்தார். முருகப் பெருமான்.

தெய்விக வரம் பெற்ற அசுரனை வெல்ல அகில புவனங்களையும் வெல்லத்தக்க ஓர் அற்புத சக்தியின் துணை தேவை என்று உணர்ந்தார் குமரப் பெருமான்.

அவர் கண்முன்னே, சூலம் ஏந்தி, சுடர்விடும் ஞான வாளேந்தி, காலனையும் ஒடுக்கும் ஓங்கார சக்தியாய் வேத பூமியாம் திருவேற்காட்டில்எழுந்து நிற்கும் அவருடைய அன்னை வேற்கண்ணியே தோன்றினாள்.

ஆம்! பாவத்தை அறுக்க தாய்மையைவிட உயர்ந்த ஆயுதம் எது...?

தேவர் முதல் அண்டகோடி ஜீவன்களுக்கும் அன்னையாம் மகாசக்தியான அம்பிகை அன்றி வேறு யாரால்தான், பாவம் சூழ்ந்து வாழும் சூரபத்மனை பலி கொள்ள முடியும்?

எனவே, தன் பரிவாரப் படைகளுடன் அன்னையைத் தேடி திருவேற்காட்டுக்கு எழுந்தருளினார் குமரக் கடவுள்.

செந்தில் பதியில் சூரபத்மனை வெல்வதற்கு வரம் கோரி, சிந்தையெல்லாம் அன்னை பராசக்தியின் புகழ்பாட வந்து நின்ற செல்வக் குமரனுக்கு ஞானவேல் தந்து வாழ்த்தினாள் அன்னை.

அன்று அன்னை கொடுத்த ஞானவேல் அரக்கர் குலத்தை அழித்தது; ஞாலமெல்லாம் அருட்பெருவெள்ளமாகப் பாய்ந்து தர்மத்தை நிலைநாட்டியது...

இதோ இன்றும், கற்பூர நாயகியாய்—கனகவல்லித் தாயாராய்—காளி மகமாயியாய் காட்சி தரும் கருமாரி அன்னையின் வேல் விழிகளிடமிருந்து பிரவாகமெடுத்து பாய்ந்து கொண்டிருக்கிறது அருள் என்னும் பெரும்புனல்! அந்தக் கருணைப் பெருவெள்ளத்தில்தான் கல்பகோடி காலமாக அண்டகோடி ஜீவன்களும் உய்வுற்று உயிர்பெற்று தளிர்ந்து தழைத்து நிற்கின்றன.

(தொடரும்)

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர் : மணியன்.

துணை ஆசிரியர்கள் : தாமரை மணாளன். மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி : 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை - 600 032.

இவற்றுடன் – யாரையும் குறைகூறுமல் எல்லாவற்றையும் சமாளித்துச் சமத்காரமாகத்தான் நம்மிடம் பேசிக் கொண்டு வந்தார். ஆனுல்...ஒரு கட்டத்தில்தான், 'அவர் என் மென்னியைப் பிடித்து நெரித்து உயிர்வாதனையை எனக்கு உண்டாக்கி யிருக்காவிட்டால், வீட்டைவிட்டு வந்திருக்க மாட்டேங்க!' என்று தன்னையும் மீறி உடைந்துபோய் வார்த்தைகளையும் கண்ணீரையும் கொட்டி அழுது விட்டார் லட்சுமி.

லட்சுமி பிராமணப் பெண். அவர் கணவர் லீலாராம் வேற்று ஜாதி. 25 வயது ஆகியும் வீட்டில் பெரியோர்கள் அவள் கல்யாணம் குறித்து எந்த முயற்சியும் எடுக்கவில்லை. அதற்குப்பின் அவருக்குப் பிடிக்காத மாமன் ஒருவரைக் கல்யாணம் செய்து கொள்ள வற்புறுத்தினுர்கள் வீட்டில். லட்சுமிக்கு அது பிடிக்கவில்லை. லீலாராமைக் காதலித்து—கோயிலில் வைத்து மாலை மாற்றிக் கொண்டார். அந்தத் 'திருமண'த்துக்கு அவரிடம் அழுத்தமான ஆதாரம் இல்லை. இன்று அந்தக் கல்யாணத்துக்கு 'சாட்சி' அவருக்குப் பிறந்த குழந்தை தான்.

நாலைந்து வருடத் தாம்பத்தியத்துக்குப் பின் அவர்களிடையே கருத்து வேற்றுமை புகுந்திருக்கிறது. அந்தக் கருத்து வேற்றுமைக்கு அடித்தளத்தில் இருந்தது பொருளாதாரப் பற்றுக்குறை.

''அவருக்கு வேலை இல்லை. சம்பாத்தியம் வரலை. முதல்லே நான் பார்த்து வந்த வேலையையும் கௌரவத்துக்காக வேணும்னு சொல்லிவிட்டார். குடும்பத்திலே சிரமம் ஏற்பட்டது. அவர் மனசைக் கஷ்டப் படுத்த விரும்பாமல் நான் அங்கே இங்கே கடன் வாங்கிக் குடித்தனம் செய்தேன். இது அவருக்குப் பிடிக்கலே. ஆனு, அவரையும் பிள்ளையையும் பட்டினிப் போட என்னலே முடியலே. எப்படி யாவது வேலை தேடி அடைச்சுடலாம்னு, நான் தொடர்ந்து கடன் வாங்கிக் குடும்பத்தை நடத்தினேன். 'என்னைக் கேவலப்படுத்திட்டே'ன்னு அவர்



சண்டை போடுவார். அப்புறம் அடிக்கடி 'உனக்கும் எனக்கும் ஒத்துவராது நீ வீட்டை விட்டு வெளியே போ'ன்னு சொல்ல ஆரம்பிச்சுட்டாரு. நான் எங்கே போவேன்..? இவருக்காக என் குடும்பத்தைப் பகைச்சுக்கிட்டு வெளியே வந்தாயிற்று. சாதாரண'மாகவே புருஷனை பகைத்துக் கொண்டு ஒரு பெண் எங்கேயும் போக முடியாது. என் நிலைமையிலே எங்கே எப்படிப் போறது? 'கடன் வாங்கற'னேன்னு ஒருசாக்கைச் சொல்லி, நம்பி வாழ வந்தவளை 'வெளியே போ'ன்னு என்ன அர்த்தம்? நான் எவ்வளவோ பொறுமையா இருந்து பார்த்தேன்... கடைசியிலே என் கழுத்தை நெரிக்க வந்து... என் உயிருக்கே ஆபத்தா வேதனை தாங்க முடியாமல்தான் வெளியேறி இந்த அபய நிலையத்துக்கு வந்திருக்கிறேன்.

''ஏன் சார், எதை வேணும்னுலும் ஒரு வார்த்தையிலே அறுத்திடலாம்... ஆனு... மனைவின்னு வாழ வந்தவளை 'பிடிக்கலே'ன்னு ஒரே வார்த்தை சொல்லி வெளியே தள்ளிட முடியுமா..? அப்புறம் அவ எங்கே போவா...? முறைப்படி பெரியவங்க பார்த்து நிச்சயித்து எனக்கு கல்யாணம் நடந்திருந்தா... பிறந்த வீட்டுக்காவது போகலாம்.... இப்ப காதல்னு வந்துட்டு எங்கே போவேன்?'' என்று கேட்கிறுர் லெட்சுமி.

ஆண் குலத்தின் மனசாட்சியை நோக்கிக் கேட்க வேண்டிய கேள்வி...!

—ரா. பாஸ்கரன்

# தேவி தரிசனம்

## வரம் தருவாள் கருமாரி 5

கற்பூர நாயகியே கனகவல்லி காளி
மகமாயி கருமாரியம்மா!
தோற்ருலும் ஜயித்தாலும் வாழ்வாகினுய்
தொழுதாலும் அழுதாலும் வடிவாகினுய்
போற்ருத நாளில்லை தாயே, உன்னை!
பொருளோடு புகழோடு வைப்பாய்
என்னை!

—தேவி கருமாரியம்மன் தோத்திரப் பாமாலை.

ஐந்தொழில் நாயகியான அன்னை கருமாரியின் திருக்கோயிலில் இன்று எங்கு பார்த்தாலும் பக்தர் கூட்டம். பார்த்த முகங்களில் எல்லாம் பக்திப் பேருவகை!

கோடானு கோடி உள்ளங்களுக்கு நம்பிக்கை ஒளியாய், அனைவரையும் தன் பக்கம் ஈர்த்து அருள்பாலித்துக் கொண்டிருக்கும் தேவதேவிக்கு — சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன் இப்படியொரு கோயில் இல்லை. குறி சொல்லும் சில மெய்யன்பர்களின் 'அருள்வாக்கு' மூலம்தான் தன் மக்களிடம் அவள் பேசிக் கொண்டிருந்தாள்.

அதைப்பற்றி தேவி பக்தரான ராமதாசர் கூறுகிருர் :

''அந்தக் காலத்தில் — அதாவது 1940-ம் வருட வாக்கில், கருமாரித் தாய்க்கு எவ்வளவோ பக்தர்கள் கோயில் கட்டணும்னு நினைத்துத் திட்டம் போட்டாலும் அம்மன் அதற்கு உத்தரவு தராமலே இருந்தாள். அந்தக் காலத்தில் தம்பு பூசாரி சுவாமி—சுவாமி நடேசனுர் ஆகியவர்கள் 'அருள்வாக்கின்' மூலம்தான் அம்பாள் மக்களிடம் பேசிக் கொண்டிருப்பாள்.

பிறகு நாங்கள் எல்லாரும் வருந்திக் கேட்டதற்கப்புறம் அம்மன் கோயில் கட்ட அருள் வாக்கு தந்தாள். அப்போது அவள் சொன்ன வாக்கு: ''வினை தீர்த்து ஆலயம் கட்டிக் கொள்கிறேன்'' என்பதுதான். அந்த ஒரே வாக்குதான் இன்றைக்கும் இந்த ஆலயத்திலே மந்திரமாக இருக்கிறது. தன் குறைகளைச் சொல்லி




தேவி உலாக்காட்சி

அன்னையின் அருளாவேசத்தில் ராமதாசர்

முறையிடுகிற மக்களுக்கு சாம்பார் பிரசாதத்தைத் தந்தே குறைகளைப் போக்குகிருள் அன்னை.

அதன்படி அவளுடைய ஆலயத் திருப்பணிக்கும் சரி; பூஜா கட்டளைகளுக்கும் சரி; அபிஷேகத்துக்கும் சரி; 'நான் நீ' என்று பக்தர்கள் நிதியைக் கொட்டிக் கொண்டிருக்கிருர்கள். எந்தத் திருப்பணியையும் பெரிய மூலதனங்களை வைத்துக் கொண்டு நாங்கள் ஆரம்பிக்கவில்லை. இன்ன பணி ஆரம்பிச்க வேண்டும் என்று சொன்ருல், சொல்லி முடிக்கும் முன் அந்தந்தத் தேவைகளுக்கு யாரும் எதிர்பாராமலே பக்தர்கள் கொண்டுவந்து தந்து விடுவார்கள். அவளுடைய ஆலயத் திருப்பணிகளை அம்மனே நடத்திக் கொண்டிருக்கிருள். அவள் பக்தர்களின் குறைகளைப் போக்குகிருள்; பக்தர்கள் அவளுடைய பணிகளை நிறைவேற்று கிருர்கள்....'' என்கிருர்.

தேவி கருமாரி தன் அருள் பிரவாகத்தில் ஆட்கொண்டிருக்கும் பக்தர்களில்தாம் எத்தனை எத்தனை ரகம்?

சாதாரண ஏழ்மை நிலையில் இருந்தவர்கள்..நடுத்தர வர்க்கத்தினர்.. மேல்தட்டுப் பிரமுகர்கள்...பல்வேறு தரத்தினரும் அன்னையின் முன் ஓர் இனத்துக் குழந்தைகளாகி அன்னைக்குப் பணிபுரிந்த எண்ணற்ற செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன...

ஏழ்மை நிலையிலிருந்து தன் உடலுழைப்பால் வாழ்ந்த திரு. வைத்தி, அன்று முதன் முதலாக அன்னையின் கோவில் அமைப்பதற்காக காடாக கிடந்த இடத்தை தான் தன்னந்தனியே உடலுழைப்பால் சீர் செய்து கொடுத்த நினைவுகளை இன்று – தன் 87–ம் வயதில் விவரிக்கும்போது நமக்குப் புல்லரிக்கிறது!

சென்னை, திருவல்லிக்கேணியில் செல்வாக்கு பெற்றிருந்த காங்கிரஸ் பிரமுகர் திரு. ஆருவமுது ஐயங்கார், தன் அரசியல் செல்வாக்கு புகழ் அனைத்தையும் அம்மனின் கோயில் வளர்ச்சிக்கே பயன்படுத்தி, இறுதியில் அன்னையின் கோயில் எல்லைக்கே சென்று–தன் இன்னுயிரை அவள் திருவடியில் சமர்ப்பித்து அவளோடு ஐக்கியமாகி விட்ட செய்தியைக் கேட்கும் போது நமக்கு மெய்சிலிர்க்கிறது.

''ஒரு சாதாரண பத்திரிகை நிருபராக இருந்த நான், பல லட்சங்கள் வருமானம் வரும் இக் கோயிலில் சில காலம் அறங்காவலர் குழுத் தலைவராகப் பணியாற்றியிருக்கிறேன். அந்தப் பேறு கிடைத்ததற்கு ஒரே காரணம் அம்மனின் அருள்தான்!'' என்று கூறித் தன் வாழ்வில் அன்னை நிகழ்த்திய அற்புதங்களை விவரிக்கிருர் பூந்தமல்லி திரு. பி. ஜி. வேணுகோபாலன்.


திரு. ந. ஜி. வேணுகோபால்

அன்னையின் ஆலயத்தில் அபிஷேகம்தான் மிகச் சிறப்பான ஓர் அம்சம். காலையில் தேவி பூஜை யானதும், ஆலயத்துக்கு அருகே உள்ள புனித கிணற்றிலிருந்து நான்கு பிரம்மச்சாரி அர்ச்சகர்கள் கொண்டுவரும் நீரால் அபிஷேகம் நடைபெறுகிறது. அதன்பின் பக்தர்கள் நடத்தும் அபிஷேகங்கள் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. நவகலசம், சங்காபிஷேகம் இவை மிகச் சிறப்பானவை. அன்னைக்குசெய்யப்பட்ட சங்காபிஷேகத் (1008 சங்கு கொண்டு செய்யப்பெறும்) தீர்த்தம் ஜப்பான் போன்ற வெளி நாடுகளிலுள்ள பக்தர்களுக்கு அனுப்பப்படுகிறது.

அன்னையின் திருக்கோயிலின் பிராகாரத்தில் உள்ள ஓர் அறையில் திரு. ராமதாசர் (ஞாயிற்றுக்கிழமை தோறும்) குறிமேடையில் அமர்ந்து பக்தர்களுக்கு அம்மனின் அருள்வாக்கைச் சொல்கிருர். அதைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே நமக்கு பிரமிப்பாக இருக்கிறது. அம்மனை அவர் உருவில் ஏற்றிப் பார்த்து வழிபடும் பக்தர்கள் தம் குடும்பக் குறைகளை, தொழில் தொல்லைகளை மனத்தில் நினைத்து அவர் முன் திரண்டு அமர்கிருர்கள். குறிமேடையில் சென்று அமரும்வரை அமைதியாக காட்சியளிக்கும் திரு. ராமதாசரின் முகம் அம்மனின் அருள்வேக ஆட்சியால் உருமாறுகிறது. ஒரு ருத்திர தேஜஸ் அதில் வெளிப்படுகிறது. ஆற்றுமடைத் திறந்தாற்போல் எதிரே இருப்பவர் ஒவ்வொருவரின் துன்பங்களைத் அவர்கள் நாடிவந்

நோக்கத்தையெல்லாம் தெரிவித்து அதற்குப் பரிகாரமாக அம்மனின் அருள்வாக்கையும் மொழிகிறார். நாடி வரும் பக்தர்களின் வேதனைகள், குறைகள் பலவாறாக இருந்தாலும், எல்லாருக்கும் குறைதீர்க்கும் மருந்தாக ஒரே ஓர் அருமருந்தைத்தான் அவர் வழங்குகிறார். அதுதான் சாம்பர்!

''இந்த அம்மனின் சாம்பரை உன்னோடு வைத்துக்கொண்டு அம்மனை வழிபட்டு வா... துன்பம் தீரும்!''

''அம்மனை நினைத்து இந்த சாம்பரைப் பூசிக் கொள்... பிணி தீரும்!''

அன்று சிவப்பெருமான், ''ஆதிபராசக்தியாம் கருமாரி ஐந்தொழிலையும் ஏற்று சாம்பர் பிரசாதத்தால் திருவேற்காட்டில் அருளாட்சி செய்வாள்!'' என்று அகத்தியருக்கு அருள்விளக்கம் தந்தாரல்லவா...? இன்றும் அதை மெய்ப்பித்து வருகிறாள் தேவதேவி.

'வார நாட்களில் காலை 4—30 மணி முதல் இரவு 10 மணி வரையும்; ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 3 மணி முதல் இரவு 12 மணி வரையிலும் கோயிலில் அம்மனைத் தரிசிக்கலாம். சித்ரா பௌர்ணமி விழாவும், ஆடிப்பூர உற்சவமும் அம்மன் திருக்கோயிலில் நடைபெறும் முக்கிய திருவிழாக்கள்...' இப்படி சில தகவல்களைத் தருகிறார்கள் கோயில் அதிகாரிகள்.

திருவிழாவும், தேவிதரிசனமும் ஒரு குறிப்பிட்ட நேரத்திலும் — நாட்களிலும் மட்டும்தானா...?

அதோ..! தேவதேவியின் சந்நிதியில் 'ஓம் சக்தி.. ஓம் மாகாளி..' 'கண்கண்ட கருமாரி' என்றெல்லாம் நெக்குருகத் துதித்து நிற்கும் அந்த எண்ணற்ற பக்த கோடிகள், இதை ஒப்புக் கொள்வார்களா...?



நேரங்களும் நாட்களும் அவர்களுக்கு இல்லை! ஆம்! ஒவ்வொரு விநாடியும் அவர்கள் தம் உள்ளத்தில் அவளைத் தரிசிக்கிறார்கள்; நினைக்கும்போதெல்லாம் அவர்கள் இதயத்தில் திருவிழாக் கோலம் பூண்டு திருவருள் பொழிந்து நிற்கிறாள் அன்னை!

அம்மனைத் தரிசித்து வணங்கிவிட்டு, அன்னையைக் காண வந்த எண்ணிலடங்கா பக்தர் கூட்டத்தினரின் ஆவேசப் பக்தி பெருவெள்ளத்தில் நீந்தியவாறு பிரதட்சணமாய் வருகிறோம். அங்கே... அம்மனை தரிசனம் காண வந்து, அதைக் காண்பதற்காகவோ — அல்லது கண்டுவிட்ட நிறைவாலோ, குடும்பம் குடும்பமாக அமர்ந்திருக்கும் பக்தர்களின் பரவச முகங்கள் ஒரு புறம்; அம்மனுக்குப் படைக்க, ஈரத் துணியோடு பொங்க லிட்டுக் கொண்டிருக்கும் மக்களின் பரபரப்பு வேறொரு புறம்! எங்கும் அம்மனின் திருநாமம்! அவளைக் காணத் துடிக்கும் பரபரப்பு...!

## அன்புக் கோரிக்கை!

''ஏப்ரலில் பரீட்சைகள் எல்லாம் முடிந்துவிடும்; மாணவர்கள் கதை, கவிதை, சித்திரப் போட்டிகளில் கலந்து கொள்ள வசதியாகப் போட்டிகளுக்கு முடிவுத் தேதி 30-4-78 என்று வைத்திருக்கிறோம்'' என்று சொல்லியிருக்கிறீர்களே...உங்களுக்கு யார் சொன்னது, பரீட்சைகள் எல்லாம் ஏப்ரலில், முடிந்து விடும் என்று...? இந்த ஆண்டு ஜூன் வரை பரீட்சைகள் நடக்கின்றன. அதனால் உங்கள் போட்டிகளை ஜூன் இறுதிவரைத் தள்ளி வையுங்கள், மாணவர்களுக்காக!'' என்று எண்ணற்ற மாணவ-மாணவிகள் கடிதங்கள் மூலமும், போன் மூலமும் கோரிக்கை விடுக்கிறார்கள்.

மாணவச் செல்வங்களின் விருப்பத்துக்கு இணங்க—அமரர் வாசன் சிறுகதைப் போட்டி, அமரர் மாலி கார்ட்டூன் போட்டி, அமரர் தேவன் நகைச்சுவைப் போட்டி, அமரர் ராஜூ சித்திரப் போட்டி, அமரர் கொத்தமங்கலம் சுப்பு கவிதைப் போட்டி ஆகிய இவற்றின் முடிவுத் தேதிகள் 30-6-1978 என்று மாற்றியிருக்கின்றோம்.

ஆசிரியர்

திருக்கோயிலின் வாசற் புரம் வருகிறோம்...

அங்கே அரைக்கால் சட்டை அணிந்து லாட்டரி டிக்கெட் விற்றுக் கொண்டிருக்கும் ஒரு பையன் நம் கவனத்தைக் கவருகிறான். சுற்றியிருக்கும் மக்கள் கூட்டமெல்லாம் அம்மனைத் தரிசிக்கத் துடி துடித்துக் கொண்டிருக்கும் போது, அவன் மாத்திரம் டிக்கெட் வாங்கக் கூடிய மக்களின் முகத்தையே ஆராய்ந்து — வியாபாரக் குரல் கொடுத்துக் கொண்டிருக்கிறான்.

நமக்குள் ஓர் உந்துதல். அவனிடம் போய்ப் பேச்சுக் கொடுக்கிறோம்.

''தம்பி... கோயில் வாசலிலேயே டிக்கெட் விற்றுக் கொண்டிருக்கிறாயே... நீ எப்போ போய் அம்மனைக் கும்பிடுடுவே?''

''நான் கோயிலுக்குள் போனதே இல்லே... வியாபாரம் முடிஞ்சுதும் வீட்டுக்குப் போயிடுவேன்!''

நமக்குத் திகைப்பு. நித்தம் நித்தம் லட்சோப லட்சம், கோடானுகோடி பேர் எங்கெங்கிருந்தோ

## கத்துக்குட்டி



**தொழில் நிறுவனங்கள் தன் பொருட்களை விற்பதற்குப் பத்திரிகையில் கொடுக்கிற விளம்பரங்களை அரசாங்கத்தில் கட்டுப்படுத்தறாங்களாமே! அதே பத்திரிகைகளில் மந்திரிகள் கொடுக்கிற சுய விளம்பரங்களுக்குகட்டுப்பாடு கிடையாதா?**

அம்மனைத்தரிசிக்க விரதம் இருந்து, வேளை தேடி ஓடோடி வரும்போது-இவன் இத்தனைப் பாராமுகமாக... ஓர் எழுச்சிகூட இல்லாமல் இருக்கிறான் என்றால்...?

''ஏம்பா, அம்மனைப் பார்க்கணும்னு உனக்குத் தோணவே இல்லையா...?'' —மலைப்புடன் கேட்கிறோம்.

''நான் போய் பார்த்து என்ன ஆகும்? அவளில்லே என்னைப் பார்க்கணும்...! ஆமாம்! அவ என்னைப் பார்த்துக்கிட்டே தான் யிருக்கா.. அதனால்தான் எனக்கு வியாபாரம் ஆவுது!'' என்று கூறிவிட்டு, தன் தொழிலின் மீது கவனமானான்.

அப்படியே மலைத்து நின்று விட்டேன்! எவ்வளவு பெரிய தத்துவத்தை எவ்வளவு சாதாரணமாகச் சொல்லி விட்டான்!

பக்தியின் இலக்கணமாகவே அவன் அங்கு நிற்பது போலிருக்கிறது நமக்கு. 'துன்பங்களை நீக்க வரம் தருவாய் தாயே...!' என்பது சாதாரண பக்தி தான். 'நாம் கேட்டாலும் கேட்கா விட்டாலும் அன்னை நிச்சயம் வரம் தருவாள்!' என்ற நம்பிக்கை உறுதியுடன் நிற்கிறானே அந்தச் சிறுவன்... அதுதான் உயர்ந்த பக்தி!

ஆம்! வரம் கோரியும், அபிஷேகம் செய்தும், ஆலயத்திருப்பணிகள் செய்தும் தம் பக்தியை வெளிப்படுத்தும் பக்தர்களுக்காக மட்டுமல்ல; 'என்னிடம் அவளுக்குக் கொடுக்க ஒன்றுமில்லை; அவள் தந்துதான் நான் வாழ்கிறேன்' என்று அவள் மீது பாரத்தைப் போட்டு விட்டு வாழும் எண்ணற்ற ஏழை மக்களுக்காகவும் - இந்தக் கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாய், காட்சிக்கு எளியவளாய், கருணைக்குப்பெரியவளாய், ஆட்சிக்கு அருள்வடிவாய், அருளுக்கு ஒருருவாய், வல்வினைக்கு மறலியாய், வாழ்வுக்கு மாரியாய், வாழ வரம் தந்து - கடைத்தேறக் கரம் தந்து - வேதக் கொடி நாட்டி - வேற்காட்டில் அமர்ந்தாட்சி புரிகின்றாள் எம் அம்மை கருமாரி!

வெண்ணீற்றால் வினை தீர்க்கும் வேதவல்லி! கண்ணீரே எம் திறனாய் நின் கழல் பற்றினோம். கலிதீர்த்து கருணைக் கரம் தந்து காக்கும் தேவி, நின் பொற்பாதம் போற்றி... போற்றி!

**(அடுத்த இதழில் மதுரை மீனாட்சி தரிசனம்...)**

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர் : மணியன்.

துணை ஆசிரியர்கள் : தாமரை மணாளன். மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி : 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை - 600 032.

இருபது முதல் முப்பது மீட்டர்வரை நீளம் கொண்ட 750 நாவாய்களும், முப்பது முதல் நாற்பது மீட்டர்வரை நீளம் கொண்ட 1000 நாவாய்களும் தேவைப்படும் என மதிப்பிடப்பட்டுள்ளது. இத்தகு 1750 நாவாய்களை அமைத்துக் கொடுக்க சுமார் 800 முதல் 1000 கோடி ரூபாய்வரை செலவிடப்பட வேண்டும். மீன்பிடிப்புத் தொழிலில் முன்னணியில் நிற்கும் தமிழ்நாடு மட்டிலும் இதில் சுமார் 300 நாவாய்களை 180 கோடி ரூபாய் செலவில் வாங்க வேண்டி இருக்கும்.

இந்திய நாட்டில் 32—சிறு அளவு கப்பல் கட்டும் துறைகள் உள்ளன. இவற்றில் ஏதுமே தமிழ்நாட்டில் இல்லை. ஆந்திரத்தில் இரண்டும், கேரளத்தில் மூன்றும், கர்நாடகத்தில் ஒன்றும் உள்ளன. மற்றவை யாவும் கல்கத்தாவிலும், பம்பாயிலுமே இருக்கின்றன. இந்த 1750 நாவாய்கள் 17500 நாட்கள் உலர்ந்த துறையில் இருக்க வேண்டியதாகும். ஒவ்வொரு நீர் நீங்கிய கப்பற் துறைக்கும் இதுபோன்ற 200 நாட்கள் என்று வைத்துக் கணக்கிட்டால், குறைந்தது 87 துறைகளாவது தமிழ்நாட்டுக்குத் தேவைப்படும். இன்று தமிழ்நாட்டில் உள்ளவை எத்தனை...? ஒன்றே ஒன்றுதான். இந்தியாவின் பிறபகுதிகளில் இத்தகு நாவாய்களுக்கேற்ற வசதிகள் இருபது சிறு துறைகளில் உள்ளன.

**ஆகவே, நாம் ஒரு மிக விநோதமான சூழ்நிலையை இன்று எதிர்நோக்கி இருக்கிறோம். கடற்துறையில் மிகத் தொன்மையான சரித்திரப் பின்னணியும், மிக நீண்ட கடற்கரையும், நாட்டில் மூன்றாவது மிகப் பெரிய கடற் துறைமுகமும் கொண்ட தமிழ்நாடு கடற்துறை - கடற்பொருள் சார்ந்த தொழில்களில் - கட்டுமான, பராமரிப்பு ஆகிய இரண்டிலுமே எதுவுமே இல்லை என்ற பரிதாப நிலையில் உள்ளது.**

தமிழ்நாட்டில் இத்தகைய தொழிலை ஏற்று நடத்த ஓர் இடமும் வசதியும் உள்ளனவா...? உண்டு. எண்ணூர்தான் இதன் விடை. இங்கு வந்த இரண்டு டச்சு நிபுணர்கள் இதனைப் பொற்களஞ்சியம் என்றும், இதற்கு மிகப் பொருத்தமான துறை என்றும் வருணித்துள்ளார்கள். சென்னையிலும், சென்னையைச் சூழ்ந்தும் உள்ள வசதிகள் இத் தொழிலின் ஒவ்வொரு தேவையையும் ஏற்கவல்லன ஆகும். நாட்டில் உள்ள கடற் கட்டிட — கட்டுமான ஆராய்ச்சி நிலையங்களில் மிகச் சிறந்த ஒன்று — சென்னையில் உள்ள இந்திய தொழில் நுட்பக் கல்லூரி (ஐ. ஐ. டி.)யில் இருக்கிறது.

இதனால் கிடைக்கக்கூடிய தொழில் வாய்ப்பு எவ்வளவு...? இரண்டு சிறு கப்பல் கட்டும் தளங்களும், இரண்டு உலர்ந்த கடற்துறைகளும், அவற்றின் உப தொழில்களும் இருபது கோடி ரூபாய் அளவிற்கு உற்பத்தி செய்ய இயலும். நாவாய்களைத் தவிர, கட்டுமரங்கள், இழு கப்பல்கள், தோண்டிகள், கடற்துறைமுகக் கப்பல்கள், தெப்பங்கள் ஆகிய பலவும் மேன்மேலும் உற்பத்தி செய்யப்படும். குறைந்தபட்சம் மூவாயிரம் பேருக்கு வேலை கிடைக்க வாய்ப்பு உண்டு. சிறிது கூடுதான மூலதனமும் முயற்சியும் இருந்தால் இது மும்மடங்கு அதிகரிக்கக்கூடும்.

இதன் வளர்ச்சிக்குச் செய்ய வேண்டியது என்ன...? கடற்கரையில் தடுப்புச் சுவர் ஒன்றைக் கட்டி, அதனை ஒட்டி அகழ்ந்தெடுக்க வேண்டும். இதற்கு சுமார் ஆறு கோடி ரூபாய் தேவைப்படலாம். மாநில அரசு கடற்துறையைச் சார்ந்த தொழில்களுக்குரிய தொழிற்பேட்டை ஒன்றை அமைத்து, கடற்துறையையும், உலர்ந்த கட்டுதளம் ஒன்றையும் நிறுவலாம்.

இதை மிக அதிகமான ஒரு கோரிக்கை என்று சொல்லிவிட முடியுமா...?

# தென் மதுரை ஆளுகின்ற தேவி எங்கள் மீனாட்சி!

1

வரோர் ஐவரும் தினமும் போற்றும் நின்
வடி வணங்குமெய்த் திறமை நல்கு வாய்
ல யத்தொ(டு)எப் புவனத் தோரையும்
பல்செய் மதுரையங் கயற்கண் ணம்மையே!

—தண்டபாணி சுவாமிகள் எழுதிய
'அங்கயற்கண்ணம்மை பதிகம்.'

இதிகாசம் பிறந்த நதி நீரம் அது!

மண்ணில் விளையாட மாந்தர் பிறப்பதுண்டு; ஆனல், மறை நான்கும் தொழுதேற்றும் இறைவன் விளையாட - திருவிளையாடல்கள் புரிய - அங்கு மண் விளைந்தது!

செந்தாமரையும் வெண் தாமரையும் பூப்பதுண்டு, மற்ற குளங்களில்; ஆனல்! பொற்றாமரைப் பூத்தது அந்த நகரத்தில்!

மரத்திலிருந்து பலகை பிறக்கும் மற்ற இடங்களில்; ஆனல், ஒரு பலகையிலிருந்து - சங்கப் பலகையிலிருந்து அறம் பிறந்தது, அந்த நகரத்தில்!

மதுரை சித்திரைத் திருவிழாக் காட்சிகள்

அரசோச்ச 'நீயாச்சு நானாச்சு' என்ற போட்டியிட்டு மனிதர் ஆண்டார் மற்ற நாட்டிலே; ஆனால், கோனாட்சி புரிய தேவி மீனாட்சியே அவதரித்தது— அந்தத் திருநகரிலே!

அரசர்கள் ஆண்டியாவதுண்டு — மற்ற நாட்டில்; ஆனால் சுடலை காத்த ஆண்டியான பரமேஸ்வரனை அழகு சுந்தரராக்கி, அரசாள வைத்தது அந்த நகரம்...

அதுதான் —





‘மாடு கட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல் என்று ஆனைகட்டிப் போர டித்த அழகான தென் மதுரை!’ அங்கே நரிகள் பரியாகும்; வன்னி மரம் சாட்சி சொல்லும்!

தமிழுக்கு சங்கம் கண்டு, தாமரையில் தங்கம் கண்டு, அரன் ஆட அம்பலம் கண்ட மதுரையில் (வெள்ளியம் பலம்) திறனாட்சி செய்யும் எம் அம்மை மீனாட்சியின் தரிசனம் காண — அந்த தென்பாண்டித் திருநாட்டின் தலைநக ருக்குச் செல்கிறோம்.





அங்கே —

வைகை நதி வெள்ளத்தால் பொ
கொண்டிருக்கிறது. ஆம்! வரலா
அடங்காத பெரு வெள்ளம்...

அந்த வெள்ளம் வைகைக் கன
மேவி அருகிருக்கும் நகர்புறம் எல்
பாய்ந்து—அந்த ஆலவாய் நகர
மதுரையின் எழில்சேர்
வீதிகளெங்கும் பிரவகி
கொண்டிருக்கிறது.

அதுதான் மனித வெள்ளம்!





தெய்வத் திரு உருவங்களையும், திருத்தல அமைப்புக்களையும் வரைவதில் தனிப்பெரும் புகழ் பெற்றவர், திரு.சில்பி அவர்கள். அவரை முன்மாதிரியாகக் கொண்டு தெய்வச் சித்திரங்கள் வரைவதில் பல இளம் ஓவியர்கள் ஆர்வம்காட்டி வருகின்றனர். அவர்களில் ஒருவரான திரு. செந்தில் குமாரை இங்கு அறிமுகப்படுத்தியிருக்கிறோம். அவர் வரைந்துள்ள விநாயகர் ஓவியம் (மதுரை மீனாட்சி அம்மன் ஆலயத்தில் உள்ளது) இங்கே வெளியிடப் பட்டிருக்கிறது.

பிளேனில்—ரயில்களில் மோட்டார் வாகனங்களில் – மாட்டு வண்டிகளில் –கால்நடை[illegible] நாடெங்குமிருந்து நதி [illegible] மக்கள் கூட்டம் வந்து [illegible] சங்கமித்து நின்றனர், அந்த நான்மாடக் கூடல் நகரில்.

ஏன் அந்தக் கூட்டம்? யாரைக் காண இந்த மக்கள் எழுச்சி...?

பெற்றவரின் கல்யாணம் காணவந்த பிள்ளைகளின் கூட்டம் அது!

ஆலவாய் அழகன் சொக்கேசருக்கும் —எம் அம்மை அங்கயற்கண்ணியாம் மீனாட்சிக்கும் அன்று திருக்கல்யாணப் பெருவிழா! அந்தத் திருவிழா காண பாண்டியன் நகருக்கு வந்து திரண்ட பக்திப் பெருங்கூட்டம்தான் அது!

சைவமும் வைணவமும் சங்கமித்து நிற்கின்றன அங்கே...

கல்யாணஜோடி, அந்த இரு சமயப் பிரிவைச் சேர்ந்தவர்கள் ஆயிற்றே! மாப்பிள்ளையான சிவன், சைவர்; மணப்பெண்ணான தேவி மீனாட்சியம்மையோ வைணவ குலம்—ஆமாம்! கள்ளழகப் பெருமானான மாயக் கிருஷ்ணனின் தங்கை ஆயிற்றே, மீனாட்சி!

அதோ, அம்மையப்பனின் திருமணம் காண, அனைத்துலக மாந்தர் மட்டுமல்ல; திருப்பரங்குன்றம் வாழ் தெய்வக் குமரன் முருகன் வருகிறான்... கள்ளழகப் பெருமான், அழகர் கோயிலிலிருந்து வீரப் புரவியிலேறி விழாக் கோலம் பூண்டு வருகிறார்...

சித்திரைத் திருநாளில் நடக்கும் அந்தத் திருவிழாவில்தான் எத்தனை எத்தனை கோலாகலங்கள்... பக்திப் பிரவாகங்கள்... கூடும் பக்தர்கள்தாம் எத்தனை எத்தனை விதங்கள்... அவர்கள் பக்தி செலுத்தும் முறைகள்தாம் எத்தனை எத்தனை ரகங்கள்...!

(தொடரும்)



[illegible] பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், [illegible] இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: [illegible],
[illegible] ஆசிரியர்கள்: [illegible] மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி: 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை - 600 032.

# தேவி தரிசனம்

## 2

பொன்னம் கமலப் பசுந்தோட்டுப்
பொன்தாது ஆடிக் கற்றைநிலாப்
பொழியும் தரங்கம் பொறை உயிர்த்த
பொன்போல் தொடுதோல் அடிப்
பொலன் சூட்டு
அன்னம் பொலியுந் தமிழ்மதுரைக்(கு)
அரசே தாலோ தாலேலோ!
அருள்சூற் கொண்ட அங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ!

—குமரகுருபரரின் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்.

நான்மாடக்கூடல் நகர் வீதியில் நடக்க நடக்க .நமக்குப் பிரமிப்பாக இருக்கிறது.

வீதியெங்கும் பந்தல்கள். முற்றம் தோறும் கோலங்கள். வாசல்தோறும் தோரணம். எந்தப் பக்கம் சென்றாலும் — எந்த வீதியில் நடந்தாலும் இதே காட்சி — விழாக் கோலம்..!

''என்ன விசேஷம்?''. என்று கேட்டாலோ—

''என்ன தம்பி இப்படிக் கேட்கிறே? கல்யாண விசேஷம்தான்! இன்னிக்குக் கல்யாணமாச்சே...!'' என்று பதில் வருகிறது.

வீதிக்கு வீதி இந்தக் காட்சி...வீட்டுக்கு வீடு இந்த விழாக்கோலம் என்றால்—

மதுரை நகரிலுள்ள அத்தனை வீடுகளிலும் ஒரே நேரத்தில் திருமணமா, என்ன...?

புகைப்படங்கள்: ராம்குமா

பொன்.பாஸ்கரமார்த்தாண்டன்



தென் மதுரை ஆளுகின்ற
தேவி எங்கள் மீனாட்சி!

ஆம்! அன்று ஒவ்வொருவர் வீட்டிலும் திருமணம்தான். ஆனல், மணப் பெண்ணே எல்லா வீட்டுக்கும் சம்பந்தப் பட்ட ஒரே ஒருவர்தான்! எல்லா வீட்டுக்கும் அந்த மணமகள் சொந்தம்; எல்லா வீடுகளும் அந்த மணமகளுக்குச் சொந்தம். அவர்தான் — ஒவ்வொருவர் வீட்டிலும் ஒவ்வொருவர் இதயத்திலும் அருந்தவப் புதல்வியாக — ஆளவந்த அரசியாக — அண்டினேரைக் காக்கும் அகிலாண்டேசுவரியாக — பாலையாக — புவனேசுவரியாக — கௌரியாக — சோடசியாக — மாதங்கியாக — பஞ்ச தசியாக — எண்ணற்ற திருக்கோலம் பூண்டு கொலுவிருக்கும் அங்கயற்கண்ணி யாம் மீனாட்சிதேவி!

எத்துணைச் சிறப்புப் பெற்ற ஈடற்ற திருமணம் அது! தேவதேவியான மீனாட்சிதான் அந்த நகரத்து மணப் பெண்! அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகனுன பரமேசுவரன்—ஈரேழு புவனங்களையும், எண்ணற்ற கோடானு கோடி ஜீவராசிகளையும், மறை நான் கொடு கலையனைத்தையும் தன்னில் சொக்க வைக்கும் சொக்கேசனாக, கைலாயம் விட்டு அந்த வைகை நகருக்கு மாப்பிள்ளையாக வரப்போகிருர்...!

மறைநாயகனை மாப்பிள்ளையாகக் கொள்ளும் வைபோகத்தில்தான் அந்த வைகை நகரம் அப்படி விழாக்கோலம் பூண்டிருக்கிறது.



சொக்கேசர்-மீனாட்சி திருக்கல்யாணச் சிற்பம்

ஒரு நாள், ஒரு பொழுதல்ல — ஆண்டுதோறும் பன்னிரண்டு நாட்கள் அப்படி விழாக்கோலம் கொள்கிறது, மதுரை நகரம்.

கால காலங்களைக் கடந்த நித்திய ஜோதிகளாம் தேவதேவியர், காலம் காலமாக வாழும் மனிதர்களுக்கு காட்சி தந்து அருள்புரிவதற்காக — தம் சிவ சக்தி சங்கமத் தத்துவத்தைத் திருக்கல்யாண விழாவாக்கி — ஆண்டு தோறும் மாந்தர்களைக் கொண்டாடச் செய்து அருள்பாலிக்கும் திருவிழா அது!

இதிகாச காலம் முதல் இன்றுவரை இறைவனும் இறைவியும் நிகழ்த்திக் காட்டிய பல அற்புதங்களுக்கும், தத்துவத் திருவிளையாடல்களுக்கும் அரங்கமாகும் பேறு பெற்றிருக்கிறது, அந்த ஆலவாய் நகரம்.

மாப்பிள்ளையாக மதுரையம்பதிக்கு எழுந்தருளி — அரசனாக அந்த நகரின் ஆட்சியையும் வருடத்தில் எட்டு மாதங்கள் ஏற்று — தம் அலகிலா விளையாட்டினுள் புகழ்பெற்ற 64 திருவிளையாடல்களையும் இறைவன் நடத்திக்காட்ட தேர்ந்தெடுத்த புனித பூமியும் இந்த மதுரையம்பதிதான்!

தமிழ்ச் சங்கத்தின் தலைநாயகனாக இறைவரே வீற்றிருக்கும் பெருமை பெற்றதும் இந்த நகரம்தான்.

இத்தனைத் திருவிளையாடல்கள் புரிந்து தன் இறைத்தன்மையை நிலைநாட்டிய இதே பதியில்தான், அனைத்துக்கும் சக்தியே பிரதானம் என்னும் உண்மையையும் நிலைநாட்டி—அன்னை மீனாட்சிக்கு முதன்மைப் பெருமை தந்து — சக்தி தத்துவத்தின் ஈடற்ற பெருமையையும் இறைவனே உலகுக்கு உணர்த்தியிருக்கிறார்.

"'குரு கீதை' என்னும் ஸ்காந்த புராணத்தில், இறைவனே அன்னை மீனாட்சியைப் போற்றி, 'நீ காமேஸ்வரியாக இருக்கிறாய்... நான் உனக்குத் துணையாக இருக்கிறேன். ஆகமங்களின் படி என்னைப் பூஜித்த பின்னரே, அம்பிகையாம் உன்னைப் பூஜிக்க வேண்டியது முறை என்றாலும், ஸ்ரீசக்கர க்ஷேத்திரமான இப் புண்ணிய மதுரையம்பதியில் அம்பிகையான உன்னை தரிசனம் செய்த பின்னர் என்னைத் தரிசனம் செய்தால்தான் மக்கள் பலனைப் பெறுவர். ஒருவேளை என்னைத் தரிசனம் செய்யாவிட்டாலும், உன்னைத் தரிசனம் செய்திருந்தால் பலனைக் குறைவின்றிப் பெறுவார்கள். உன்னைத் தரிசனம் செய்யாமல் என்னை மட்டும் தரிசனம் செய்தால் பலனைப் பெற மாட்டார்கள்' என்று கூறி, தேவியின் பெருமையை உலகுக்கு உணர்த்தியிருக்கிறார் இறைவன்'' என்று, இத் தலத் தத்துவத்தைக் கூறுகிறார் சிவஸ்ரீ தங்கம் பட்டர்.

அதோ! பிரணவ தத்துவத்தின் முத்திரையான ஸ்ரீசக்கரவரடிவமாக அமைந்துள்ள அந்த மதுரைப் பெரு நகரின் மையத்தில் கோயில் கொண்டு, வையத்தார் மனத்துள் எல்லாம் ஜீவ ஜோதியாய்த் திகழும் தேவி மீனாட்சி, மன்னன் மலையத்துவச பாண்டியனின் மகளாக 'தடாதகை' என்ற நாமத்துடன் அந்தத் தலத்தில் அவதரித்த - அருள் விளையாடல்கள் பல புரிந்த, அந்தத் தெய்விகத் திருக்காட்சிகளை மனக் கண்ணில் கண்டு பரவசப் பெருக்கில் திளைத்து நிற்கிறோம்...



தங்கம் பட்டர்

மகப்பேறு இல்லாக் குறை நீங்க, மன்னன் மலயத்துவச பாண்டியனும், பட்டமகிஷி காஞ்சனமாலையும் புத்திர காமேட்டி யாகம் நடத்துகின்றனர்.

திடீரென்று எங்கும் பேரொளி! அந்தப் பேரொளியில், பூதலமே பொன்னொளி யாய்த் தகதகக்கிறது! அந்த வேள்வி நெருப்பில் அக்கினி மலராகப் பூத்துத் தோன்றிப் பொங்கிச் சிரித்தெழுகிறாள் புவனேசுவரியாம் தேவதேவி.

அம்மம்மா! என்ன விளையாட்டு இது?

எண்ணற்ற ஜீவகோடிகளுக்கு அன்னையாம் ஈஸ்வரி, இரு மானிடக் கரங்களுக்குள் மழலையாகிச் சிரிக்கும் மகிமைதான் என்ன...?

இது, மலயத்துவச பாண்டியன் மனைவி செய்த மாதவமா? இன்றேல், மதுரைமா நகர் பெற்ற அரும்பேறு? இல்லை, மலயத்துவச பாண்டியனையும் - மதுரையையும் கருவியாக்கி, தம் மானிட மக்களை உய்விக்க வந்த அன்னையின் அருட்பெருங் கருணையா...?

ஞானக்குழந்தையாய் மதுரையம் பதியிலே மலர்ந்திருந்த ஞாலத்து நாயகியைக் கண்டு, 'மணி என்பாரும்; மாணிக்க அணியே என்பாரும்; பிறவிக் குத் துணையே என்பாரும்; பிணிக்கொரு மருந்தே என்பாரும்; தாய்மைக்குத் தவப்பயனே என்பாரும்; தவத்திற்குப் பொருளே என்பாரும்; கருணைக்கு கருவே என்பாரும்; கருவுக்குள் உயிரே என்பாரும்; உயிர்களின் கதியே என்பாருமாக விண்ணவரும்மண்ணவரும் துதித்துப் போற்றி நிற்கின்றனர்.

அச்சமயம், ஜோதிச் சுடராகச் சுடர் பரப்பித் தவழ்ந்த அந்தத் தெய்வக் குழந்தையின் தோற்றத்தில் தென்பட்ட ஒரு புதுமையைக் கண்டு — மன்னனும் ராணியும் மற்றவரும் மலைத்துப்போய் நிற்கின்றனர். ஆமாம்! மூன்று தனங்கள் கொண்ட பெண்ணுருவாய் அன்னை காட்சியளிக்கிறாள்!

'இது என்ன..? மாயையா? மயக்கமா? மகிமையா? அல்லது ஒரு மாசுவா?' -அரசனின் அஞ்ஞானம்குழம்பிநிற்கிறது.

ஆனால், மெய்ஞ்ஞான வடிவான குழந்தையோ, அவர்களின் அந்த அஞ்ஞானப் புலம்பல் கண்டு சிரிக்கிறாள்.

ஒரு பெண்ணுக்கு தனங்கள் எதற்காக அமையப் பெற்றுள்ளன...? தாய்மை என்னும் பெருங்கருணையை அமுதமாய் ஊட்டுவதற்காகத்தானே! சாதாரண உலகியல் பெண்களினும் அதிக கருணை கொண்ட தெய்வத் தாய்க்கு அவை அதிகமாக — ஒன்று கூடுதலாக அமைந் ததில் வியப்பென்ன இருக்கிறது....? உலகுக்கு தான் வழங்கும் அளவற்ற கருணைப் பிரவாகத்தின் உண்மையை உணர்த்தவே அம்மை அவ்வாறு திருக் காட்சி தந்தாளோ...?

திகைத்து நின்ற மன்னனுக்கு 'அசரீரி' ஒன்று கேட்கிறது:

''மன்னா! இது வரப்போகும் மகிமை ஒன்றிற்கு முன்னோடியாக அமைந்த அடையாளம். இந்த அருந்தவக் குழந்தைக்கு மணாளன் வரும்போது ஒரு தனம் மறையும்!''

'அசரீரி' கேட்ட மன்னன் கலக்கம் தீர்ந்தான். ஆனால் அறிவு 'தெளிந் தானா...? அன்னையின் அதீத தோற்றத் துக்கும், 'அசரீரி'க்குள்ளும் அடங்கிய தெய்வ ரகசியத்தைப் புரிந்து ஞானம் பெறும் பக்குவம் அவனுக்கு அன்று இருக்கவில்லை...

காலத்தால் பின்னர் நன்கு உணர்த் தப்பட்ட அந்தத் தத்துவம்தான் அந்தத் திருநகருக்கே கைலாயப் புகழ் தந்த ஒரு சத்தியம்!

என்ன அந்தத் தெய்வ ரகசியம்...?

(தொடரும்)

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
இணை ஆசிரியர்கள்: தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி: 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை - 600 032.

மிகுந்த ஒரு கோழையின் ஆயுதமாகச் சட்டத்தை மாற்றும் முயற்சியில் இந்த ஜனநாயகம் இறங்குகிறது. அந்த ஆயுதத்தின் துணை—கொண்டு அதாவது சட்டங்களை நிறைவேற்றி, சட்டம் சார்ந்து வாழ்கின்ற குடிமக்களின் தலையில் ஒரு ஜனநாயக நிர்ப்பந்தமாக, ஒற்றுமையின் பேரால், ''இந்தியாவுக்கு ஒரு மொழி வேண்டும். அது பெரும் பான்மையினரால் பேசும் இந்தி யாக இருத்தல் வேண்டும்'' என்று எண்ணுவது இந்தி மொழிக்கு அவல மான விளைவுகளையே உண்டாக்கும். ஒரு மொழியை இப்படியெல்லாம் பரப்ப வேண்டும் என்று அந்த மொழி சார்ந்தவர்கள் நினைப்பதில்லை. மொழி சம்பந்தமில்லாத வேறுவித மூலதன மூடர்களின் சிந்தனையே அது ஆகும்.

இந்தத் தமிழ்மொழியின் வரி வடிவத்தைத் தேவநாகரியில் மாற்றிக் கொள்ளுமாறு, தமிழறியாப் பெரியோர் பலர், பதவிகளில் உட்கார்ந்து கொண் டிருக்கிற மதர்ப்பினால் யோசனை கூறு கின்றனர். இந்த யோசனையில் உள்ள அறியாமை பிற மொழியினருக்கு புரி யாததுதான். ஏனெனில், பிற இந்திய மொழிகள் அனைத்தும் சம்ஸ்கிருதத்துக்கு இணையான இலக்கண அமைப்புக்களைப் பெற்றிருக்கின்றன — சகட்டுமேனிக்குச் சொல்லலாம்; எல்லா இந்திய மொழி களுமே— தமிழ் மொழியைத் தவிர!

தேவநாகரியில் வங்காளத்தை எழுதலாம்; அப்படித்தான் எழுது கிறார்கள்! வங்காளம், மராத்தி, குஜராத்தி, எல்லாமே! முயன்றால் தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய திராவிட மொழிகளையும் தேவ நாகரியில் எழுதி விடலாம்.

தமிழ்மொழியின் இலக்கணமே, நெருங்க முடியாத அளவுக்கு இந்த முயற்சிகளைத் தலைகுப்புற அடிக்கும். Ka, Kha, Ga, Gha, என்று 'க'வில் நாலு சுருதிக்கட்டை இருக் கிறது தேவநாகரியில். தேவநாகரியில் வழங்கும் இந்த நான்கில், ஒரு 'க'வை வைத்துக் கொண்டு, மற்ற மூன்று 'க'வுக்கு என்ன செய்வது தமிழ் வழக்கிற்கு..? எங்களுக்கு அந்தப் பல்வகை யான 'க'க்களின் தேவை உண்டு. ஆனால், அவற்றுக்கான தனித்தனி வடிவங்கள் தேவை இல்லை என்று ஏற்கனவே ஆய்ந்து தவிர்க்கப்பட் டிருக்கிறது. இந்த விஷயமே பிற இந்திய மொழிகளுக்குச் சாத்திய மாகாது.

தேவநாகரியில் 'ழ'கரம் கிடையாது. (ஒரு உள்துறை அமைச்சருக்கு இவற்றை எல்லாம் உபதேசித்துக் கொண்டிருக்க வேண்டியது அவசியந்தானா என்று ஒரு தமிழனுக்குச் சிரிப்பு வருகிறது).

'தமிழர் என்போர் யார்...?' 'தமிழ் என் மொழியெனத் தாமே ஒப்பி மொழிகின்றவர்கள் அனைவரும் தமிழர். ஆயினும் அதைக் கண்டு கொள்ள இன்னும் ஓர் அரிய வழி உண்டு. அதை அறிவதற்கான சூத்திரம், 'தமிழ் ஒரு தந்தை மொழி' என்பதைஏற்பதேயாம். இது ஒரு 'வாக்குமூலம்'

(தொடரும்)

திருத்தம் :

'வாக்குமூலம்' (1) [7–5–78) கட்டுரையில் நான்காவது பாராவில் முதல் வரியை, 'பிரச்னையாகி விடுகிற(து) இந்த விநோதம்' என்று சேர்த்து வாசிக்கவும் 'அணி கொள் சத்தியம்' (ஆறுவது பாராவில்) என்பதை 'அணிகொள் சாத்திரம்' எனத்திருத்திக் கொள்ளவும்.'

## குதிரை!

கணவனுடைய துணிகளைச் சலவைக் குப் போடும் போது அவள் திடுக் கிட்டுப் போனாள்! சட்டைப் பையில் இருந்த ஒரு சிறு காகிதத் துண்டு அவளைக் கதிகலங்கச் செய்தது! 'நளினி!'

'யார் இந்த நளினி' என்று மண்டையைப் போட்டுக் குழப்பிக் கொண்டாள். கோபவெறியோடு அந்த காகிதத் துண்டை நீட்டி,'என்ன இது...?'' என்று இரைந்தாள்.

''அட,சந்தேகப் பிராணி! இது யாரும் புது சிநேகம் அல்ல. நேற்று கிண்டி ரேசுக்குப் போயிருந்தேன். பணம் கட்டிய குதிரையின் பெயர் இது!'' என்று சமாதானப் படுத்தினான், கணவன்.

அன்று மாலை வெளியே போனவன் எட்டு மணிக்குத் திரும்பி வந்தான். ''ஏதும் விசேஷம் உண்டா?'' என்று மனைவியைப் பார்த்துக் கேட்டான்.

''ஓ... இருக்கிறதே. சாயந்திரம் அந்தக் குதிரை உங்களுக்குப் போன் பண்ணியது'' என்றாள் அவள்!

—பி. கணேஷ்கண்ணா

# தேவி தரிசனம்

## (3) தென் மதுரை ஆளுகின்ற தேவி எங்கள் மீனாட்சி...



பொன்னெழுதிப் பூவெழுதிப்
புயலெழுதிப் பெண்மை
மின்னெழுதி வைத்தஎழில்
மீனாட்சி காணீர்!
மீனாட்சி காணீர்; நீர் மேன்மை
மிகும் மாமதுரை
தாளாட்சி செய்யவந்த தவமகளைக்
காணீர்!

—'தமிழண்ணல்'
டாக்டர் இராம. பெரியகருப்பன்





தென்பாண்டி நாட்டுக்கும் தெய்விகப் பெண்மைக்கும் மிக நெருங்கிய உறவு உண்டு.

வேதகாலம் முதல் சிலப்பதிகார காலம் வரை வெவ்வேறு தேவியர் திருக்கோலங்கள் பூண்டு அதை நிரூபித்திருக்கிறூர், அன்னை பராசக்தி.

பரசுராமதேசம் என்னும் கேரள நாட்டில் பக்தர்களுக்கு பகவதி அம்மனுகக் காட்சி தந்து அருள் புரிகிறுள் அன்னை பராசக்தி. அந்தப் பகவதி அம்மன் பெண்மைக்கு நெறிவகுக்க பூமியில் அவதரித்தவள். ஆம்! கற்புக் கோர் இலக்கணம் வகுத்துத்தர தமிழ் நாட்டில் பிறந்த கண்ணகிதான், பின் தெய்வமாகி கேரள நாடு சென்று பகவதி அம்மனுக நிலைபெற்று அருளாட்சி செய்து வருபவர்.

'மன்னனே ஆயினும் அவன் ஆட்சியில் மறம் மலிந்தால், அதை அழிக்கும் சக்தி கற்புடைய பெண்மைக்கு உண்டு; எந்தக் கொங்கையால் அமுதூட்டி மக்களை ரட்சிப்பாளோ, அதே கொங்கை யால் அக்கிரமத்தை அழிக்கவும் செய்வாள் ஒரு பெண்' என்பதை உணர்த்து வதுபோல், ஆட்சி தவறிய பாண்டியனின் மறத்தை தன் கற்பின் திறத்தால் எரித்து திருவிளையாடல் புரிய, தேவதேவி தேர்ந்தெடுத்த இடம் தென்பாண்டி நாட்டின் திருநகரான மதுரைதான்.

அக்கிரமத்தை அழிக்கும் ஆற்றல் பெண்மைக்கு உண்டு என்று நிலைநாட்ட அன்னை தேர்ந்தெடுத்த அதே மதுரையைத்தான், தன் ஆக்க சக்தியையும் அருளாட்சித் திறனையும் நிலைநாட்டிக் காட்டவும் அன்னை உமையவள் தேர்ந்தெடுத்தார்.

ஆம்! ஒரு பாண்டியனின் முன்கண்ணகியாகத் தோன்றி நீதி கேட்டாள்.

அதேபோல், நீதி மிகு ஆட்சி எப்படி நடைபெற வேண்டும் என்று உணர்த்த இன்னொரு பாண்டியனுக்கு மகளாக — மீனாட்சியாக அவதரித்தாள்.

பேயாட்சி புரிந்த பாண்டியனைப் பிடி சாம்பலாக்கித் தீமையை அழிக்கும் திருநாயகியாகத் தோன்றி பெண்மையின் அக்கிரமம் பொறுக்காத ஆவேசத் தன்மையை உணர்த்தினர் தேவி;

அதேசமயம், பிடி சாம்பல் பூசும் பேயாண்டியையும் அரசனுக்க ஒரு பெண்ணுல் முடியும் என்று பெண்மையின் ஆக்கசக்தியை உணர்த்த, சுடலையாண்டியான ஈசனையே மதுரை நகருக்கு அரசனுக்கி ஒரு தேவநாடகத்தையும் நடத்திக் காட்டினூர், தேவ தேவியார்.

குடும்பங்களில், 'மதுரையா, சிதம்பரமா?' என்று வேடிக்கையாகக் கேட்பார்கள்.

சிவன் நடராஜனுக தாண்டவம் ஆடி ஆண்மைக்குப் பெருமை சேர்த்துக் காட்டிய இடம், சிதம்பரம்.

மீனாட்சியாக அரசேந்தி,பெண்மைக்கு முதன்மைப் பெருமையை தேவி நிலை நாட்டிக் காட்டிய இடம் மதுரை.

ஆனுல் அந்தச் சிதம்பரப் பெருமை - மதுரைப் பெருமை இரண்டிலும் மதுரையே சிறந்தது என்று தேவ தேவியர் திருவிளையாட்டில் தெரிகிறது.

சிதம்பரத்தில் வலது காலை ஊன்றி சிவதாண்டவம் ஆடினூர் பரமேஸ்வரன். ஆனுல் அவர் வெள்ளியம்பலமான மதுரையில் ஆடும்போது மாத்திரம் கால் மாறி இடது காலை ஊன்றி ஆடியிருக்கிறூர். இடதுபகுதி பெண்மைக் குரியது. 'இறைவனே ஆனுலும், ஊன்றிக் கொள்ள வேண்டியது பெண்மையில் தான்' என்பதை உணர்த்தத்தான், நடராஜப் பெருமான் அப்படிக் கால் மாறி ஆடினூரோ?

இறைவன் வழி, பக்தர்கள்!

அதோ, மதுரையின் மையத்தில் வானுயர்ந்து வழிகாட்டி நிற்கும் மீனாட்சி - சுந்தரேசுவரர் ஆலயத்தின் பரந்த மண்டபங்களிலும் நீண்ட பிரகாரங்களிலும் நெடிதுயர்ந்த வாசற் புரங்களிலும் அலை அலையாக கூடித் திரளும் பக்தர்களின் நெஞ்சிலும் நினைவிலும் நாவிலும் ஒரே பெயர்; ஒரே குரல்; 'மீனூட்சி.... மீனூட்சி!' என்பதுதான்.

''புதுசாக் கல்யாணம் ஆகியிருக்குது எங்களுக்கு. குழந்தைச் செல்வத்துக்காக

பொன்.பாஸ்கரமார்த்தாண்டன்

மீனாட்சியம்மனைத் தேடி வந்திருக்கிறோம்'' என்கிறார்கள் சுருளியாறு பகுதியிலிருந்து கோயிலுக்கு வந்திருக்கும் கே. சுப்பிரமண்யம் தம்பதியர்.

'கல்யாணம் ஆகி பதினைந்து வருஷமாக் குழந்தை இல்லை. அதனாலே எனக்கு சாமி பேர்லே வெறுப்பு. மனுஷன் பேரிலே வெறுப்பு' என்று கசந்து பேசும் மருமகள் மீனாட்சியை-மதுரை மீனாட்சியின் திருக்கோயிலுக்கு அழைத்து வந்திருக்கிறார் காளையார் கோயில் ராக்காயி. அவர் சொல்கிறார்: "பதினைந்து வருஷமானா என்ன? தாய் மீனாட்சி நெனைச்சா எப்பவும் குடுப்பாள். இந்த தேசத்துக்கே ராசாத்தியாச்சே, அவள்!''

இரண்டு நரிக்குறவச் சிறுமிகள். தங்கராணி - குனிதா என்று பெயர்கள். பன்னிரண்டு பதிமூன்று வயதிருக்கும். அவர்கள் சொல்கிறார்கள்: ''சீப்பு பாசி ஊசி விற்கிறோம் நாங்க. ஆனா எங்களுக்கு சோறு போடறது மீனாச்சி சாமிதான்! ஓய், கேட்கிறியா சாமி! வெடி காலையிலே எழுந்து கோயிலுக்கு வந்துடுவோம். மீனாட்சி கோயில்லே நின்னாத்தான் யாவாரம். வேறு எங்க நின்னாலும் அலைச்சல்தான்!''

''அம்மன் பெருமையை நிலைநாட்டப் பழமொழியே இருக்குதே... எதையும் ஒருத்தர் செய்றதுக்கு முன்னாலே என்ன சொல்றோம்..? 'சக்தி' இருந்தாச் செய்; இல்லேன்னா 'சிவனே'ன்னு சும்மா இரு!' என்கிறோமா இல்லையா? இதிலிருந்தே தெரியவில்லையா சக்திபெருமை?'' என்கிறார் மீனாட்சி அம்மன் கோவில் பேஷ்கார் திரு. எம். தங்கவேலு.

வழிபடும் பக்தர்கள் மட்டுமா...? வழிபாடு நிகழும் திருக்கோயிலும் அன்னைக்குத்தான் முதன்மைப் பெருமை கொடுத்திருக்கிறார்கள்...

ஆலயத்தில் அதிகாலையில் அம்மன் சந்நிதிக் கோபுர வாசல்களைத் திறந்த பின்னர்தான் மற்ற கோபுர வாசல்களைத் திறக்கிறார்கள். அம்மன் மூலஸ்தானத்தில் அரசிக் கோலத்தில் தனித்திருக்கிறார். ஒவ்வொரு பூஜை நேரத்திலும் ஒவ்வொரு திருக்கோலத்துடன் காட்சி தருகிறாள். காலையில் பாலையாக (குழந்தை), ஒன்பது மணிக்கு புவனாவாக, பதினொரு மணிக்கு கௌரியாக, உச்சி காலத்தில் மத்திரோச்சாடன அதி தேவதையான சோடசியாக, மாலையில் ராஜ்யபாரம் தாங்கி நடத்தும் ராஜசியாக - மாதங்கியாக, அர்த்த ஜாமத்தில் பஞ்சதசியாக... இப்படி ஜீவகோடிகளுக்கு இகபர மீட்சி தரும் சக்தித் திருக்கோலங்களைக் காட்டி அருள்பாலித்து நிற்கும் தனிப்பெருமை கொண்டிருக்கும் அன்னைக்கு பூஜை முறைகளிலும் தனி அந்தஸ்து.

காலையில் வைகையிலிருந்து யானை, பரிவாரங்களுடன் கொண்டு வரப்படும் திருமஞ்சன நீர் அபிஷேகம் ஆகி காலசந்தி நடைபெறுவது முதல், அர்த்தஜாமம்வரை அத்தனை பூஜைகளும், அம்மனுக்குத்தான் முதலில் நடைபெறுகின்றன.

அப்புறம் நடைபெறும் பள்ளியறை பூஜை வைபோகத்தில்தான் சற்று மாறுதல் தெரிகிறது.

அதோ! இரவு ஒன்பதே முக்காலுக்கு எச்சரிக்கை மணி அடிக்கப்படுகிறது. உடனே தீவட்டி வெண்சாமரம் விசிறி கட்டியம் மேளம் போன்ற படை பரிவாரங்களுடன் முதன் முதலாக சுவாமி சந்நிதியை நோக்கிச் செல்கின்றனர்.

இங்கே சுந்தரேசர் முதன்மைப் பெறுமை அடைகிறார் போலிருக்கிறதே என்று வியந்து நிற்கிறோம்.

அரசகோலத்தில், அங்கயற்கண்ணியின் நாயகரான சொக்கநாதர் துணைவியைச் சந்திக்கப் பள்ளியறைக்குப் புறப்படுகிறார்.


"பதினைந்து வருசமா கொடைக்கலே"


"எப்பவும் கொடுக்கும்!"

இதுவரை தனித்திருந்த அவர் தன் யதாஸ்தானத்திலிருந்து எழுந்தருளி கம்பத்தடி மண்டபத்தருகே வருகிறார். அங்கே கோயில் காரியஸ்தர் கணக்கு நோட்டுடன் கைகட்டி காத்து நிற்கிறார். ராஜாவான சுந்தரேசனுக்குக் கணக்கு சொல்வதற்காக.

அந்த ஆட்சிப் பெருமை கூட ஈசனுக்கு அன்னையால் கைமாற்றிக் கொடுக்கப்பட்டது தானும்! திருமணத்துக்குப் பின், தேவியின் இருப்பிடத்துக்கே வந்து, 'வீட்டு மாப்பிள்ளை'யாக குடியேறிவிட்டகணவரை அதிகாரம் இல்லாமல் வைத்திருக்கக் கூடாதே என்பதற்காக — கணவருக்குப் பெருமை அளிக்க - வருடத்தில் -சித்திரை முதல் ஆடி வரை — முதல் நான்கு மாதங்கள் வரை, பாண்டியன் மகளான அன்னையே தனியாட்சி செய்துவிட்டு தொடர்ந்து வரும் எட்டு மாதங்களுக்கு (ஆவணி முதல் பங்குனி வரை) ஆட்சிப் பொறுப்பை கணவரிடம் விட்டு வைத்திருக்கிறார். ''அப்போதும் சுவாமியை இஷ்டம்போல் தனியாட்சி செய்ய விடுவதில்லை. அதுவரை நான்கு மாதங்களாகத் தனியாட்சி செய்துவந்த மீனாட்சியம்மை, சுவாமி ஆட்சிப்பொறுப் பேற்கும்போது அவருடன் பின்பலமாக இருக்கிறார்! ஆக, ஈசன் ஆட்சி செய்யும் எட்டு மாதம்கூட வெளிப்பார்வைக்கு பரமேசுவரன் ஆண்டாலும் உண்மையில் நடப்பது துணையிருக்கும் சக்தியான பார்வதி தேவியின் ஆட்சிதான்!'' என்கிறார் தங்கவேலு தேசிகர்.



"சோறு போட்றது மீனாட்சி சாமி"



இருந்தாலும் சொக்கேசருக்கு ராஜ மரியாதைக்குக் குறைவில்லை. மாப்பிள்ளை ஆயிற்றே!

கம்பத்தடிக்கு வந்த ஈசனிடம் கோயில் அதிகாரி 'தினசரி' சொல்கிறார். அதாவது கோயில் உள்துறை வரவு செலவுக் கணக்கு. அன்றைய படித்தரம் எண்ணெய்ச் செலவு விவகாரங்கள். ''பாவம், ஈசுவரன்! பகல் முழுவதும் தனியாக 'இருந்துவிட்டு இப்போது தான் பத்தினியைப் பார்க்கப் போகிறார். அந்த நேரத்தில் அவரை மடக்கிக் கணக்கில் மாட்ட வைக்கிறார்களே! இங்கிதம் தெரியாத மனிதர்கள்...!'' என்று வேடிக்கையாகச் சிரிக்கிறார் ஒரு பக்தர்.

'தினசரி' முடிந்தது. 'கடிகாரம்' சொல்கிறார்கள். அதாவது நேரத்தைக் கூறுகிறார்கள். காலத்தைப் படைத்த தேவ தேவருக்கு மனிதன் காலம் சொல்கிறான்!

எல்லா அஞ்ஞான வேடிக்கைகளையும் பார்த்து அருளாய் சிரிக்கும் ஆலவாய் அழகர் அம்மையைக் காணப் புறப்படுகிறார்.

பல்லக்குப் பரிவாரங்களுடன் ராஜகம்பீரமாக வந்த ஈசன்... என்ன இது...?

அம்மன் சந்நிதியின் வாசலிலேயே தடுத்து நிறுத்தி வைக்கப்படுகிறாரே, ஏன்...?

**(தொடரும்)**

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர் : மணியன்.
துணை ஆசிரியர்கள் : தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி : 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை - 600 032.

ஈடுபட வேண்டாம். ஜுன் 1-ம் தேதிக்கு மேல் புது முயற்சி பயனளிக்கும். சிறு பயணம் செய்ய நேரும். உங்கள் பெற்றோர் உறவினர் ஆகியோருக்கு உங்களுடைய உதவி தேவைப்படும். தயங்காமல் செய்யுங்கள். 2, 16-ம் தேதிகளில் பிறந்தவர்கள் உங்களுக்கு உதவுவார்கள். கலைத்துறையில் உள்ளவர்களுக்குச் சுபிட்சம் அதிகமாகும்.

**தேதிகள் 6, 15, 24**

எதிர்பாராத பொருள் வரவுக்குச் சந்தர்ப்பம் தெரிகிறது. கைவிடப்பட்ட முயற்சி மறுபடியும் புத்துயிர் பெறும். பங்குதாரர்களுக்கிடையே குழப்பம் விலகி, உறுதியான உடன்படிக்கை ஏற்படும். எதிலும் அவசரம் வேண்டாம். நிதானமாகச் செய்தால் சங்கடம் இல்லாமல், காரியம் பூர்த்தியாக வாய்ப்பு ஏற்படும். உங்கள் மனத்தைக் கொஞ்சம் விரிவுபடுத்திக் கொள்ளுங்கள். அதாவது தாராளமாக மற்றவர்களுக்கு உதவுவதற்குப் பக்குவப்படுத்திக் கொள்ளுங்கள். குடும்பத்தில் அமைதி நிலவும். திருமண நிகழ்ச்சி இடம் பெறலாம். உறவினர் சந்திப்பு ஏற்படும். ஆபீஸில் உங்களுடைய கைராசி போற்றப்படும். 27-ம் தேதி பிறந்தவரால் உங்களுக்கு லாபமுண்டு. சிறு பிரயாணத்தால் நன்மையே ஏற்படும்.

**தேதிகள் 7, 16, 25**

உங்கள் வாக்குக்குச் செல்வாக்கு ஏற்படக்கூடிய காலம் இது. நீங்கள் சொல்கிற கருத்தை மற்றவர்கள் வரவேற்பார்கள். குடும்பத்தில் நீங்கள்

**6-ம் எண் கிருஷ்ணனுக்கு முயற்சிகள் வெற்றிபெறுமாம்!**



இளையவரானாலும் முதியவரானாலும் உங்களுடைய யோசனைப்படி மற்றவர்கள் நடப்பதால் நன்மையே ஏற்படும். உங்களுடைய ஆரோக்கிய நிலை திருப்திகரமாக இராது. உணவில் கட்டுப்பாடு தேவை. அலைச்சலைத் தவிர்க்கவும். ஆபீஸ் வேலைகள் அதிகமாக இருந்தாலும், சிரமப்படுத்திக் கொள்ளாமல் தற்காப்போடு பணியாற்ற வேண்டும். ஸ்பெகுலேஷன் துறைகளில் ஈடுபட வேண்டாம். புதிய நட்புக்கு இப்போது நேரம் சரியில்லை. 29-ம் தேதி நல்ல நாள். ஜுன் 2 யோக தினம். ஜுன் 2-ம் தேதிக்கு மேல் பொருளாதார நிலை முன்னேற்றம் பெறும்.

**தேதிகள் 8, 17, 26**

உங்கள் எண்ணுக்கு உரிய கிரகம் பலம் குறைந்து காணப்பட்டாலும், இதர கிரகங்களின் சஞ்சாரத்தால் எக் காரியத்திலும், வெற்றியே பெறுவீர்கள். அங்கஹீனருக்கு உங்களால் ஆன உதவியைச் செய்யுங்கள். அந்தத் தருமம் உங்களுக்குப் புண்ணிபயனைத் தருவதோடு, மனச்சாந்தியையும் அளிக்கும். தலைவலி அல்லது வயிற்றுவலியால் சில சமயம் ஏற்படுகிற கஷ்டத்தைத் தவிர்க்க அசைவ உணவை குறைத்துக் கொள்ளுங்கள். 28-ம் தேதி நல்ல நாள். மேற்கு திசையை நோக்கி அமர்ந்து பணி செய்யுங்கள். அது உங்களுக்கு நல்லதைத் தரும். ரேஸ், லாட்டரிகளில் பிரவேசிக்க வேண்டாம். ஆபீஸ் வேலையில் அதிக நேரம் ஈடுபட வேண்டியிருக்கும். அதனால் நன்மையே ஏற்படும்.

**தேதிகள் 9, 18, 27**

எதையும் சந்திக்கும் உறுதிபடைத்த உள்ளம் உடையவர்கள் நீங்கள். உங்கள் முடிவே முடிவாக எந்தக் காரியத்திலும் நிலைபெற்றிருக்கும். ஜுன் 2-ம் தேதிக்கு மேல் உங்கள் நிலைமையில் கணிசமான முன்னேற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படலாம், தொழிலில் வளர்ச்சி உண்டாகும். நட்பு பயன் தரும். நல்லோர்களின் நேசத்தால் நன்மை உண்டாகும். பொருளாதார நிலை திருப்திகரமாக இருக்கும். புது முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டால் வெற்றிக்கு வாய்ப்பு இருக்கிறது. குடும்பத்தில் சுபகாரியம் நிகழும். பயணத்தாலும் ஆதாயம் கிடைக்கும். 28-ம் தேதி நல்ல நாள்.

**பாலஜோசியர்**

# தேவி தரிசனம்

## தென் மதுரை ஆளுகின்ற தேவி எங்கள் மீனாட்சி!

4

அங்கயற்கண் ணம்மே! அணிபாண்டி நாடனைத்தும்
மங்கலம்பெற் றுய்வுறச்செய் மாதவமே! எங்கள் குல
தெய்வமே! தென்மதுரைச் செல்வமே நின்னருளைச்
சைவமே லோங்குவண்ணம் தா!

—அங்கயற்கண்ணம்மை பதிகம்.

காலம் காலமாக — அனாதி காலம் தொட்டு இன்றுவரை வேதமும் ஞானமும் மணக்கும் பெருநகரம்—'கல்வியில் கரையிலாத' காஞ்சி நகரம்; ஆத்மாவை உயர்விக்க-தம் ஆத்மஜோதி களாய் அருந்தவ சீலர்களாம் ஆச்சாரிய மகான்களை அவதரிக்கச் செய்து, அவர் களிடமிருந்து அருட்கருணையை வான் நீராய்ப் பொழியச் செய்து-ஜீவகோடி களைக் கடைத்தேற்றச் செய்கிறான், சர்வேசுவரன்.

ஆச்சாரிய தெய்வங்கள் மூலம் காஞ்சி யில் தம் அருட் பெருங் கருணையைப் பிரவகிக்கச் செய்திருக்கும் ஈசன், தானே அவதரித்து, அலகிலா தம் திருவிளையாடல்களையும் நிகழ்த்திக் காட்டி அருளாட்சி புரிந்து பக்திப் பயிர் தழைக்கச் செய்தது-வைகைப் பெருநகரம் மதுரை. அங்குதான் இறைவன் நிகழ்த்திக் காட்டிய திருவிளையாடல்கள் எத்தனை, எத்தனை?

பகைவனாயினும் ஒருவன் தவம் செய்து கொண்டிருக்கும்போது கொல்வது தர்ம விரோதம். தவம் செய்து கொண்டிருந்த தன் பகைவன் விருத்தா சுரனைக் கொன்றதால் இந்திரன் பிரம்மஹத்தித் தோஷத்துக்கு உள்ளானான். கடம்பவனத்துள் லிங்கமாய் எழுந்து நின்ற சிவனைத் தரிசித்தான் அவன். அக்கணமே அத்தோஷம் நீங்கப் பெற்றான். அந்தக் கடம்பவனம், அமைந்த தலம்தான், இன்று மதுரை யாகியிருக்கிறது. இந்திரன் ஈசனை வழிபடுவதற்காக அமைத்த ஆலயத்தின் அற்புத வடிவத்தைப் பின்பற்றி, குலசேகர பாண்டியன் அமைத்ததுதான் இன்றைய மதுரை ஆலயம் என்பர்.

தமக்குள் சண்டையிட்டுக் கொண் டிருந்த புலவர்களிடையே திறமைக்குத் தக்கப் பெருமையை நிர்ணயித்துத் தர சங்கப்பலகையை அமைத்துத் தந்து அருள் புரிந்ததும் இங்கேதான்!

பொன்னம்பலம் அமைத்து மாணிக்க பீடத்திலேறி விக்கிரமபாண்டியன் வேண்டுகோளுக்கு இணங்க, கால் மாறி ஆடியது; தன் பக்தனான உக்கிர பாண்டியனுக்கு இயற்கை சக்திகள் அனைத்தையும் கட்டுப்படுத்தும் வல்லமை யைத் தந்து - கடலை வேற்படையால் அடக்கவும், மேகங்களைக் கட்டி சிறைப் பிடிக்கவும், மேரு மலையை செண்டினால் அழித்துப் பணியச் செய்யவும் செய்து பக்திப் பெருமையை நிலைநாட்டியது; வருணன் சீற்றத்தால் மதுரையை அழிக்க வந்த கடலை—தன் திருச்சடையில் உள்ள நான்கு மேகங்கள் மூலம் காத்ததோடு, அவற்றை மதுரை நகருக்கே நான்கு மாடங்களாக என்றென்றும் காத்து நிற்கச் செய்தது. (அதனாலேயே மதுரை 'நான்மாடக் கூடல்' என்றும் பெயர் பெற்றது); சித்தராகத் தோன்றி கல்லானையை கரும்புத் தின்ன வைத்து அற்புதச் சித்து விளையாடல் புரிந்தது; அபிஷேக பாண்டி யனின் அஞ்ஞானம் போக்கியது; பகையால் சமணர் ஏவிவிட்ட சூட்சும யானையை வில்வீரனாக உருமாறி வென்று விக்கிரம பாண்டியனைக் காத்தது; பக்தை கௌரிக்காக பாலகனாக உருமாறி சைவ-வைணவ பேதம் நீக்கிக் காட்டியது; காமத்தால் பிறர் நினைக் கவும் அஞ்சும் மாபாதகம் ஒன்றைச் செய்தவனுக்கும் மனம் திருந்தினால் கதிமோட்சம் உண்டென்று நிலைநாட்டியது; நக்கீரனின் புலமைப்

பொன். பாஸ்கரமார்த்தாண்டன்

பெருமையை உணர்த்தி அவனுக்கு உய்வு தந்தது; புலமையால் செருக்குற்ற ஏமநாதப் புலவனின் செருக்கை விறகு வெட்டியாக உருமாறி அழித்தது; அரசனின் ஓரவஞ்சனையால் அவமானப் படவிருந்த பாணபத்திரனின் மனைவி யின் புலமைக்குப் பெருமை தேடித் தந்தது; வாதவூராருக்காக, நரிகளைப் பரியாக்கிக் காட்டியது; ஏழைக் கிழவிக் காகப் பிட்டுக்கு மண் சுமந்து பிரம்படி பட்டு பெரும் விளையாட்டு புரிந்தது; வலைஞனாக வந்து நந்திதேவர் சாபம் போக்கி உமையவளையும் ஆட்கொண்டது; தாயற்ற பன்றிக் குட்டிகளுக்கு தம் கருணையால் பாலூட்டியது; பகைமைக்கு உள்ளாகியிருந்த வணிகப் பெண்ணிற்காக வன்னிமரத்தையும், சிவலிங்கத்தையும் சாட்சி கூறச் செய்தது; சைவப் பெருமையை நிலை நாட்ட அனல்வாதத்திலும் (தீயினால் எரியாமல் செய்து)-புனல் வாதத்திலும் (ஏட்டை நீரில் எதிர்க்கச் செய்து) வெற்றி அருளி, வேதத்தின் பெருமையை நிலை நாட்டியது....

—இப்படி வாழ்க்கையின் பல்வேறு நிலைகளில் உண்மையை நிலைநாட்டவும்,







சென்னை ஸ்டேட் பாங்கு ஆபீஸர் ஸ்ரீ எஸ். மகாதேவன் புதல்வரும், கிண்டி ஸ்டேட் பாங்கில் பணிபுரிபவருமான சிரஞ்சீவி எம். சாயி சங்கருக்கும் யூகோ பாங்கு ஆபீஸர் ஸ்ரீ பி. எஸ். வி. ஐயரின் புதல்வி சௌபாக்கியவதி ஜெயந்திக்கும், பம்பாயில் 27–3–78 அன்று திருமணம் இனிது நடந்தேறியது. வாழ்க மணமக்கள்!

ADVT.

பலதரத்து மானிடரின் வாழ்விலுள்ள துயரைக் களையவும் இறைவன் திருவிளையாடல்கள் புரிய தேர்ந்தெடுத்த புனித பூமி தென்பாண்டி நாடும் — அதன் தலைநகராம் மதுரையும்!

இங்கு ஈசன் நிலைநாட்டிய தத்துவங்களில் எல்லாம் மிக உன்னதமானது சிவசக்தி சங்கம மகிமையே!

அதற்காகவே அன்னை உமையவள் மலையத்துவச பாண்டியன் மகளாக, தடாதகைப் பிராட்டி என்னும் திருநாமம் கொண்டு அவதரித்து பெண்மையின் சக்தியை உயர்வு பெற நிலைநிறுத்தினார்.

அப்படிப் பெண்மையின் பெருமையை உணர்த்தும்போது சிவ அம்சமான ஆண்மை அடங்கி நிற்பது போன்று தோற்றம் ஏற்பட்டது.

உண்மையில் ஆண்மையை அடக்கி பெண்மை உயர்ந்து நின்றதா...?

அதோ! அன்னை மீனாட்சியின் ஆலயத்தில் நாம் தரிசித்துக் கொண்டிருக்கும் பள்ளியறை பூஜையில் அந்த உண்மை வெளிப்படுகிறது—

தேவியைச் சந்திக்க வரும் சோமசுந்தரரை கிளிக்காட்டு மண்டபத்தில் நிறுத்தி வைத்து விடுகிறார்கள்.

''ஏன் அப்படி...?''

ஒருவர் விளக்கம் சொல்கிறார்: ''மீனாட்சியம்மனுக்குக் கணவராக இருந்தால்தான் என்ன...? சர்வசாதாரணமாக தேவியின் இடத்துக்குள் ஈசன் நுழைந்துவிட முடியாது. காரணம், மீனாட்சியோ இந்த மதுரை அரசி. அரசியை அனுமதியில்லாமல் யாரும் சந்திக்க முடியுமா...? கணவன் சர்வேசுவரன்கூட இதற்கு விதிவிலக்கு அல்ல...!''

ராஜாவாக தினசரி கணக்கு பரிபாலனம் செய்து விட்டு பரிவாரங்களுடன் வந்து ஈசன் இப்படி அம்மனின் சந்நிதிக்கு வெளியே நிறுத்தப்பட்டது, சற்று வேடிக்கையான காட்சியாகத்தான் இருந்தது.

சுவாமி வந்த பல்லக்கு வெளியே கிளிக்காட்டு மண்டபத்தில் இறக்கி வைக்கப்பட்டதும் - குருக்களும், கட்டியங்காரரும் அம்மனின் சந்நிதிக்கு விரைந்து செல்கின்றனர். சுவாமியை வெளியே நிறுத்தி வைத்திருக்கிற பதட்டம் அவர்களுடைய நடையில் தெரிகிறது.

அம்மன் சந்நிதியை வந்தடைந்ததும் குருக்கள் தீபாராதனை செய்கிறார். உடனே குருக்களுடன் சென்ற கட்டியங்காரர், ''சுவாமி வந்தாரம்மா....!'' என்று குரல் கொடுக்கிறார்.

தேவதேவன் வாசலில் வந்து நிற்கும் செய்தி காதில் விழுந்ததும், அன்னை என்ன செய்கிறார்...?

அரசியான அன்னை அதைக் கேட்டு மெத்தனமாக, 'அப்படியா வரச்சொல்' என்கிறாரா...? இல்லை. உடனடியாகப் பரபரப்புடன் தன் மூக்குத்தியைக் கழற்றுகிறார். ஈசனுடன் இணைந்து மகிழும் நேரத்தில் மூக்கிலிருக்கும் மூக்குத்தித் தேவையற்ற உறுத்தல் பொருளல்லவா...? அதனால், அதைக் கழற்றுகிறார். அந்த நிகழ்ச்சியைச் சிறப்பித்துக் காட்ட மூக்குத்தித் தீபாராதனை நடக்கிறது.



அந்தத் தீபாராதனை முடிந்ததும், அன்னையின் புறத்தோற்ற உருவமாக நிற்கும் குருக்கள் (அன்னை) ஓடோடி வருகிறார். என்ன துடிப்பு! என்ன வேகம்....!

ஆமாம்! சுவாமி வாசலில் வந்து நிற்பதை அன்னையால் தாங்கிக் கொள்ள முடியவில்லை!

வாசலுக்கு வந்து, பாதங்கள் உருவில் வந்திருக்கும் சுவாமிக்கு பாதபூஜை செய்கிறார். அப்போதைக்கு அன்னையின் அம்சமாக இருக்கும் குருக்கள், அப் பாதபூஜையைச் செய்யும் அழகு கோடி பெறும் சுவாமி பாதங்களைச் சுத்தம் செய்து, பட்டு வஸ்திரத்தால் அவருடைய பொற்பாதங்கள் நொந்து விடக் கூடாதே என்ற கரிசனத்துடன் மென்மையாக ஒற்றித் துடைத்து விடுகிறார்.

பின் சுவாமி பள்ளியறைக்கு எழுந்தருளுகிறார்.

பள்ளியறையில் சோமசுந்தரக் கடவுளுக்கும் — மீனாட்சி அம்மைக்கும் அறுசுவை சித்ரான்னங்கள் படைக்கப் படுகின்றன. சம்பான்னம், கத்தரிக்காய் கொத்ஸு, அப்பம், சுண்டல், பால் அதோடு உண்டிக்குப் பின் தரித்துப் பூரிக்க வெற்றிலே, பாக்கு, ஏலம், கிரும்பு-சிறு சொம்பில் ஜலம்! இவற்றை வைத்தபின் பாகவதர் ஊஞ்சல் பாட்டுப் பாடுகிறார்.

'கன்னூஞ்சல் ஆடி நின்றார்
மீனாட்சி சொக்கருடன்
பொன்னூஞ்சலில் பூரித்து
பூவுலகங்கள்தனைத் தற்காத்து
மீனாட்சிப் பிரியாளுடன் சொக்கநாதர்
கன்னூஞ்சல் ஆடிநின்றார்!'

தூங்காத தேவதேவியரை தொட்டிலி லிட்டு தூங்க வைத்து விட்டதாக மாந்தர் மகிழ்கின்றனர். அம் மாந்தர் தம் பேதமை நிறைந்த பிள்ளை விளையாட்டில் பூரித்துப் பள்ளியறையில் சேர்ந்து தரிசனம் அளிக்கின்றனர், சர்வேசுவரனும் — லோகமாதாவும்.

அதோ! லோக சம்ரட்சணத்துக்காக, ஆத்மிகமாய்ச் சங்கமித்து நிற்கும் அந்த இருபெரும் தத்துவங்களுள் எது உயர்ந்தது..? சக்தியா அல்லது சிவமா?

பள்ளியறைப் பூஜையின் போது, அம்மனின் வாசலில் ஈசன் காத்திருந் தாரே, அதுதான் சக்திக்குள் அடக்கம் என்று நிரூபிப்பதற்காகவா...? இல்லை; அரசியாக வீற்றிருக்கும் அன்னையை ஓடோடி வரச் செய்து, பாதபூஜை செய்யப் பண்ணி, 'சக்தி — சிவன் இருவருள் பேதம் ஏதுமில்லை; உயர்வு— தாழ்வு இல்லை; சர்வவல்லமையுள்ள சக்தியானவள் சிவத்தோடு பணிந்து இணைவதே உலக இயக்கத்தின் தத்துவம்' என்பதை விளக்குவதற்காக அல்லவா.?

அன்னை மீனாட்சி அம்மை மூன்று வயதிலேயே மூன்று தனங்களுடன் அதீத தோற்றத்துடன் தடாதகை பிராட்டியாக அவதரித்த தத்துவம்கூட- இந்த மகத்தான சிவசக்தி இணைப்பை உலகுக்கு விளக்குவதற்காகத்தான் என்று அறியக் கிடைக்கிறது.

ஆம்...! மீனாட்சியன்னையின் திருக் கல்யாண வரலாறுகூட அந்த உண்மை யைத்தான் விளக்குகிறது.

ஆதி காலம் முதல் அண்டபுவன மெங்கும் நிறைந்து ஞானவெளியில் சுயம்புவான ஜோதிச்சுடராக என்றும் பிரியாமல் இணைந்திருந்த சிவசக்தியரில், சக்தி மட்டும் பிரிந்து பாண்டியன் மகள் தடாதகைப் பிராட்டியாக வைகை நகரில் அவதரித்தார்.

—இப்படிச் சிவனும், சக்தியும் உண்மை யில் பிரிய முடியுமா...?

முடியாத ஒன்று நடந்திருக்கிறது! அதன் மர்மம்தான் என்ன...?

சிவனில்லாமல் பிராட்டி மாத்திரம் மதுரை மண்ணில் மலையத்துவச பாண்டியனின் மகளாக அவதரித்தாள். விளையாடினாள்... வளர்ந்தாள்... வீர ராஜகுலப் பெண்டிருக்குத் தேவையான வீரசாகசப் பயிற்சிகளிலும் தேர்ந்தாள். திருமணப் பருவத்தையும் எட்டினாள்.

பாண்டியனும் அவனுடைய மனைவி காஞ்சனமாலையும் அந்தரங்கத்தில் கவலைப்படுகிறார்கள். 'தம் மகளுக்கு திருமணப் பருவம் வந்துவிட்டது. ஆனால், அவளுடைய தோற்றமோ மூன்று தனங்களுடன் அதீதமாக அமைந்துள்ளது. இவளுக்கு எப்படித் திருமணம் நடக்கப் போகிறதோ...? அல்லது நடக்கவே நடக்காதோ...?' என்ற தவிப்பு அவர்களுக்கு.

குழந்தையாக மீனாட்சி அவதரித்த போது, 'கணவனைக் கண்டதும் இவளுடைய அதீத தோற்றம் மறையும்' என்று எழுந்த 'அசரீரி' அரசனின் நினைவில் இல்லை.

அவளுடைய திருமணம் பற்றி ராணியான காஞ்சனமாலை கவலையுற்றுப் புலம்பத் தொடங்கினாள்.

அப்போது தேவதேவியான மீனாட்சி யின் கண்களில் ஞானஒளி மின்னியது. தன் அவதாரப் பெருமையை அன்னை உணர்ந்து விட்டாளோ; அல்லது தாம் சக்தி வல்லமையுடன் வெளிப்பட்டு, தம் அனந்தகோடி குழந்தைகளாம் ஜீவராசிகளை உய்விக்க - ஒரு திருக் காட்சியை நடத்திக் காட்டவேண்டிய தருணம் வந்து விட்டது என்று புரிந்து கொண்டாளோ...!

''என் திருமணம் பற்றி யாரும் கவலை கொள்ள வேண்டாம். முதலில் திக்விஜயம் செய்யப் புறப்படு கிறேன். அது முடிந்ததும் வதுவை நடக்கும்!'' என்றாள்.

(தொடரும்)

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர் : மணியன்.

துணை ஆசிரியர்கள் : தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.

முகவரி : 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை - 600 032.

# நோட்ஸ்

பாகிஸ்தானிலிருந்து வந்து இந்தியாவில் 'கஜல்' நிகழ்ச்சிகள் நடத்திச்சென்ற புகழ்பெற்ற பாடகர் 'மெஹ்தி ஹாஸனை' இப்போது பாகிஸ்தான் அரசாங்கம் விரட்டிக்கொண்டிருக்கிறது. தன்னுடைய . வருமானத்துக்குச் சரியாகக் கணக்குப் பார்த்து அவர் வரி கட்டவில்லையாம். பாகிஸ்தான் அரசின் வேண்டுகோளின் பேரில், இந்தியாவில் அவருடைய கச்சேரிகள் மூலம் கிடைத்த வருமானக் கணக்கை பம்பாய் வருமான வரித்துறைப் பிரிவு திரட்டிக் கொடுக்க முனைந்திருக்கிறது!

**சிக்கல் தீரத் திருமணம்!**

குச்சுப்புடி நாட்டிய நட்சத்திரமான குமாரி 'யாமினி கிருஷ்ணமூர்த்தி,' திருமதி யாமினி சந்தோக்சிங்காக மாறி இருக்கிறார்! மணமகன் சந்தோக் சிங் சுப்ரீம்கோர்ட் வழக்கறிஞர். தன்னுடைய வருமான வரிச் சிக்கல் விஷயமாக ஆலோசனைக் கேட்க அவரிடம் போனாராம் யாமினி. கலியாணத்துக்குத் தந்தை கிருஷ்ண மூர்த்தி வரவில்லை. ஜனதா கட்சி பொதுச்செயலாளர் மதுலிமாயி வீட்டில் நடந்த இந்தத் திருமணத்தில், மதுலிமாயி தானே முன்னின்று மணமகளைத் தாரை வார்த்துக் கொடுத்தாராம்!

**போட்டிக் கல்லூரிகள்...**

இந்தியாவிலேயே மிக அதிகமான அளவு டியூடோரியல் கல்லூரிகள் இருப்பது கேரளாவில்தான். பத்தாயிரம் கல்லூரிகளுக்கு மேல் உள்ளவற்றில் மிகப் பெரியது திருவனந்தபுரத்தில் உள்ள 'எங்கள் கல்லூரி' (Our College). இதில் மட்டும் எட்டாயிரம் மாணவ, மாணவிகள் படிக்கிறார்கள். சுமார் 200 ஆசிரிய—ஆசிரியைகள் இருக்கிறார்கள்!

—ஜேவி

**18-லிருந்து 130**

"தமிழ்நாடு அரசாங்கக் கல்லூரிகளில் 1961 முதல் 181-க்கு மேற்பட்ட குற்றேவலர்கள் அடிப்படைச் சம்பளம் ரூபாய் 18-ம் மற்ற படிகளும் பெற்று நிலையில்லாமல் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். தற்போது தமிழக அரசு முதல் கட்டமாக அவர்களில் தொண்ணூறு பேரை 1-1-1977 முதல் நிரந்தர ஊழியர்களாக ஆக்கி ஆணை பிறப்பித்துள்ளது. அவ்வாணையின்படி இனி அவர்கள் 1-1-1977 முதல் அடிப்படைச் சம்பளம் ரூ. 130-ம், மற்ற படிகளும் இதர சலுகைகளும் பெறுவதோடு, கடைநிலை ஊழியர்களாகவும் உயர்த்தப்பட்டுள்ளார்கள். அவர்களின் இருள்மயமான வாழ்வு ஒளிமயமாகத் தொடங்கி விட்டது.!"

—இப்படி அறிவிக்கிறார், 'தமிழ்நாடு அரசு கல்லூரிக் கல்வித் துறை'ப் பணியாளர் சங்க மாநிலத் தலைவரான திரு. காவிரி நாடான்.

## இலக்கியச்சிற்பி

அண்மையில் அமரராகிய (26—5—78) ஜெகசிற்பியன் இலக்கிய உலகுக்கு அளித்த எழுத்துக்களின் உயர்வுக்கு ஒரு சான்று....

"ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவான தாகங்கள் ஐந்து! அறிவு தாகம், பண தாகம், பதவி தாகம், புகழ் தாகம், மோக தாகம் ஆகியவை அவை. இவற்றுடன் ஆறுவது தாகம் ஒன்று உண்டு. அது ஆணிடம் அவ்வளவாக ஏற்படுவதில்லை; பெண்ணிடம் மட்டுமே முழுச் சக்தியுடன் தோன்றக்கூடியது. தனது பெண்மைக் கௌரவத்தை - மானத்தை - காப்பதற்கெனக் கிளர்ந்தெழும் தாகமே அது! அந்தத் தாகம் - அந்த வேட்கை பொங்கியெழுந்து விட்டால், ஒரு பெண் தன்னை மட்டுமல்ல; இந்த உலகத்தையே அழிக்கவும் துணிந்துவிடுவாள். அது சீதையைச் செந்தழலில் புகச் செய்த தாகம்! அது சூர்ப்பணகையைச் சூளுரைக்கத் தூண்டிய தாகம்! அது கண்ணகியைக் காளி மாதேவியாக்கிய தாகம்!"



—'ஆறுவது தாகம்' நாவலில் ஒரு பகுதி: (வானதி பதிப்பகம் வெளியீடு.)



# தேவி தரிசனம்

5

கோலநெடு நான்மாடக் கூடலிலே கோபுரத்து
மேலிருக்கும் சிறுபுறவாய் மேனியெழில் காணேனே?
நீலநெடு விழியாளின் தோள்புரண்டு நீளுகிற
மாலையிலே ஒருசிறிய மருக்கொழுந்தாய் மாறேனே?

—புலவர் தங்க அன்புவல்லி

**வே**தநாயகியாம் மீனாட்சி வீரத்திருக் கோலம் கொண்டு எழுந்தாள். வைகை நகரமே அதிர்ந்தது! அன்னை வழி நடந்த அனந்தேர்ப் புரவி ஆட்பெரும் படைகள் ஆர்ப்பரித்துப் புறப்பட்டன!

ஆம்! தென்மதுரை ஆளும் தேவி தடாதகைப் பிராட்டி திக்விஜயப் மேற்கொண்டு புறப்பட்டாள்...

எட்டுத் திக்குகளும் அதிர்கின்றன புவனம் பதினான்கும் பொருள் புரிய புல்லரிப்பில் சிலிர்த்து நிற்கின்றன!



மலையத்துவச பாண்டியன் மகளாக—மானிடப் பெண்ணுருவில் மதுரை நகர் மண்ணில் உலா வந்தவள்-மறைநாயகனின் தவப் பெருந்தேவி என்பதை உணர்ந்து உய்வு பெற காலம் கனிந்திருந்ததை வையகம் உணரவில்லை.

வாள் கொண்டும், வேல் கொண்டும் இந்த வையத்து நாயகியை எதிர்க்க விண்ணவரும், மண்ணவரும் அஞ்ஞானத்தால் ஆர்ப்பரித்து நின்றனர்.

தேவி திக்கெட்டும் பவனி வருகிறாள்.

கிழ்த்திசையில் எதிர்க்கும் இந்திரன்—தென்கிழக்கில் எதிர்க்கும் அக்னி தேவன் — தென்திசை நாயகனான எமன், தென்மேற்கு கன்னி மூலையில் எதிர்க்கும் நிருருத், மேற்கே எதிர்ப்படும் வருணன், வடமேற்கில் பகை கொள்ளும் குபேரன் போன்ற தேவர்கள் முதல், மானிட வேந்தர்கள்வரை அத்தனை பேரும் — அன்னையின் வில்லெடுத்த வேல் விழியின் உக்கிரம் தாங்காமல் சொல்லற்று, — செயலற்று — சுய நினைவற்று விழுந்து படுகின்றனர்.

எதிர்ப்பாரின்றி — எதிர்ப்பட இனியொரு பகையின்றி அம்மை தடாதகைப் பிராட்டியார் வடகிழக்கு மூலை நோக்கி வெற்றிப் பெருமுழக்கத்தோடு செல்கிறாள்.

நேற்றுவரை அந்த வடகிழக்கு திசை நோக்கி—ஈ, எறும்பு முதலான எண்ணாயிரம் கோடி ஜீவராசிகளும் அருள் தேடி, கருணை வரம் தேடித்தான் சென்றிருக்கின்றன! இன்றுதான் படை கொண்டு பகை கொண்டு தடாதகை பிராட்டி பவனி செல்கிறாள்....

# தென் மதுரை ஆளுகின்ற தேவி எங்கள் மீனாட்சி...

பூமியில் என்ன நடக்கப் போகிறது..? அது ஊழிக்காலமா..? அல்லது ஒரு புதிய ஒளிச் சுடரைக் கர்ப்பத்தில் ஏந்தி நிற்கும் காலதேவனின் புதிர்மயமான சிரிப்பா...?

ஈடற்ற திருவிளையாடல்களின் நாயகராம் தேவ தேவியர் அன்றி வேறு யாருமே அன்று நடக்கவிருக்கும் தெய்வ நாடகத்தைப் புரிந்து கொள்ளவில்லை.

அன்றும் — இன்றும் — என்றும் அந்தத் திசை வையம் யாவையும் காத்து நிற்கும் திரிசூலம் ஒளி ஜோதியாய் நின்று பிரகாசிக்கும் திசை. அலைபாயும்

**பான். பாஸ்கரமார்த்தாண்டன்**



அம்மனின் திக் விஜயம்

உயிர்க் கூட்டத்துக்கு 'அஞ்சேல்' என்று குரல் தரும் உடுக்கை ஒலிக்கும் திசை. தீமையைச் சுட்டெரிக்க திருக்கண்ணும் ஒரு 'முக்கண்' சீறி நிற்கும் திசை. வரும் வினை தீர்த்தருளும் 'திருநீறு' மணக்கும் திசை.

ஆம்! அதுதான் ஈசன் உறையும் 'ஈசான்ய திசை!'

தேவதேவனை வெற்றி கொள்ள லோகநாயகி படை கொண்டாளா..? அல்லது ஆத்மக் கடலில் சங்கமிக்க அருள் நதியாகிச் செல்கிறாளா...?

**செய்வார்களா...?**

மதுரை ஆயிரங்கால் மண்டபக்கலைக் கூடத்தில் பலவற்றிற்கு விளக்கமே கிடையாது. ஏதோ கடமைக்கு இருப்பது போல உள்ளது. தக்க விளக்கம் தந்து குறிப்புக்கள் வைத்தால் என்ன...? செய்வார்களா?

இரா, செயபாலன்.

அதோ, அந்த வேளை கனியப் போகிறது....!

ஈசான்யத்தின் எல்லையில், எல்லையற்ற பரம்பொருள் சுடர்விடும் தெய்விகச் சிரிப்புடன், தன் இடம் தேடி வரும் தேவியை எதிர்பார்த்து நிற்கிறார்...

தேவதேவனின் எதிரே லோகநாயகி நிற்கிறாள்! மலையத்துவச பாண்டியன் மகள் என்ற மாயப் போர்வை அவளிட மிருந்து இன்னும் முற்றும் விலகவில்லை

திரிபுரம் எரித்தானை, எரிதழ உக்கிரத்துடன் எதிர்க்க ஏறிட்டுப் பார்க்கிறாள் அன்னை.

அந்த விநாடி காலம் கனிந்து விட்டது! வேதங்களும் ஞானத்தவ சீலங்களும் எதிர்பார்த்துக் காத்து நின்ற அந்த அற்புதம் அந்த விநாடியி நடந்தது...

அரனின் திருப்பார்வையைச் சந்தி முடியாமல் தயங்கித் தடுமாறி நாண தலைகுனிகிறாள் அன்னை.

# வளமைக்கு வழிகாட்டி ஸ்பிக் உரங்கள்

- ஸ்பிக் யூரியா 46.2% N
  சிறப்பான மேலுரம்.
- ஸ்பிக் டி.ஏ.பி. 18:46:0
  (டை-அமோனியம் பாஸ்பேட்)
  தனிச் சிறப்பு அடியுரம்.

ஸ்பிக் உரங்கள் அளிப்பது: வளமை, செழுமை.
ஸ்பிக் உரங்கள் ஆசியாவிலேயே மிகப்பெரிய தொழிற்சாலையில் தயாராகின்றன.




**SPIC**

SPIC சதர்ன் பெட்ரோகெமிக்கல் இண்டஸ்டிரீஸ் கார்பொரேஷன் லிமிடெட்
44-A, மவுண்ட் ரோடு, சென்னை 600 032.




ADWAVE/SPIC/1736

அன்ருெருநாள் அசரீரியாய், 'அவள் தன் கணவனே என்று சந்திக்கிருளோ? அன்றே மூன்று தனங்கள் கொண்ட அவளுடைய அதீத தோற்றம் மறையும்' என்று பாண்டியனுக்குத் தெரிவிக்கப் பட்ட — அந்த தேவவாக்கு அங்கே அந்த விநாடியில் சத்தியமாகிறது.

ஈசன் திருச்சந்நிதி முன் அன்னேயின் மூன்ருவது அங்கம் ம றை கி ற து. அத்துடன் அன்னேயின் மனத்துள் பொங்கிப் பிரவகித்துக் கொண்டிருந்த ஓர் ஆண்மை வீரம் — அரசவேகம் அகல் கிறது. மந்தமாருதத்தின் கு ளு மை அவள் முகத்தில் நிறைகிறது. பெண்மை பூரித்து மலருகிறது.

அன்னே தன்னே உணர்ந்தாள்; நாயகனே உணர்ந்தாள்; நாணித் தலேகுனிந்தாள். சிவசக்தி சங்கமம் அங்கே காட்சி கொண்டது!

தேவ நாடகம் இன்னும் முடிவடைய வில்லே...

மன்னன் மகளாக அ வ த ரி த் த தேவியை மண்ணுலகின் வழக்கப்படி திருமணம் புரிந்து - சிவசக்தி இணேப்பு மகிமையை உலகுக்கு உணர்த்த சித்தம் கொள்கிருர் சர்வேசுவரன்....

அன்னே மீனுட்சி-தடாதகைப் பிராட்டி யாரின் அவதாரம்தான் என்ன...?

'சிவமும் சக்தியும் என்றென்றும் பிரிக்க முடியாதவை என்பதை வெளிப் ப டை யா க வு ம், மறைபொருளாகவும் உலகுக்கு உணர்த்துவதுதான்!'

மறைமுகமாக உணர்த்தியது—அன்னே மீனுட்சியின் பாலவயது அபூர்வத் தோற்றத்தால்.

மண்ணுலகில் மானிடப் பெண்ணுக அவதரித்த போது அந்த அபூர்வத் ்தாற்றம் கொள்ள வேண்டிய அவசியம் ன்ன...? அந்த அபூர்வத் தோற்றம் வறும் ஓர் அபூர்வ மாயத் தோற்ற ாகும். மாந்தர்களின் பார்வைக்குத் ாய்மையின் கருணே வெளிப்படும் முத அ ங் க மா க தென்பட்டது ண்மையில் வேருெரு சிறப்பு அம்ச ்கும்... என்றும் சக்திதேவியை ்டுப் பிரிய முடியாத முக்கண்ணனுன ்வேசுவரன்தான், அ ன் னே யி ன் ந்தய பாகத்தில் அந்த அமுதப் ப ரு ங் க ரு ணே யா க — மூன்ருவது ்கமாக — ஆத்ம சக்தியாக இணேந் ந்தான்.

அந்த அவதாரத்தில் வெளிப்படையாக சக்திதேவியும்—சிவனும் இணைந்து காட்சிதர சித்தம் கொண்டிருந்த வேளை — அன்னையின் திக்விஜயத்தின் போது ஏற்பட்ட திருமணச் சந்திப்புத் தான்! அப்படி அவர்கள் சந்தித்து இணைந்த நேரத்தில் — அதுவரை ஆத்ம சக்தியாக சுவாமி இணைந்திருந்த மூன்றாவது அங்கம் மறைந்து விட்டது! பகிரங்கமாக சிவம் எதிரே தோன்றிய பின் மறைமுகமாக இணைந்திருக்க என்ன தேவை...?

ஈசனைக் கண்டதும் தேவியின் மூன்றாவது அபூர்வ அமைப்பு மறைந்த மர்மம் இதுதான்.

இந்தத் தெய்விக திருவிளையாட்டின் மூலம் என்றும்—எந்த நிலையிலும் அது அவதார சூழ்நிலைப்படி பிரிந்திருக்க வேண்டிய அவசியம் என்றாலும்கூட— சிவனும் சக்தியும் பிரிந்திருக்காத பேரருள் சக்திகள் என்பதை உணர்த்துவதுதான், மதுரையம்பதியில் தேவதேவி தடாதகைப் பிராட்டியாக அவதரித்ததன் உள்நோக்கம்.

அந்த சிவசக்தி தத்துவத்தை வெளிப்படையாக மாந்தர்கள் லௌகிகமாகவும் கண்டுணர்ந்து கைதொழுது கதிமோட்சம் பெற—அந்தத் தெய்விகத் திருக்கல்யாணத்தையும் மண்ணுலக வாழ்க்கை நெறிப்படி நடத்திக் காட்டுகிறார்கள்.



மீனாட்சி!



'மீனைப் போன்ற வளைந்த அழகான கண்களை உடையவள்' என்பதால் மட்டும் 'மீனாட்சி' என்று பெயர் வந்து விடவில்லை.

மீன் ஒரு தடவை முட்டையிட்டால், அவற்றிலிருந்து ஆயிரக் கணக்கான குஞ்சுகள் பொரிக்கின்றன. அவை அத்தனைக்கும், அவற்றின் வயிற்றுப் பசியைப் போக்கப் பாலூட்டுவதென்பது—அந்த மீனால் முடியாத காரியம். ஆகவே, இறைவன் அதற்கு ஓர் அற்புத சக்தியை அருளியுள்ளான்.

முன்னே செல்லும் தாய் மீன், திரும்பித் தனது கடைக்கண்ணால் குஞ்சுகளைப் பார்த்தால் போதும்; அவற்றின் பசி தீர்ந்து விடுமாம்!

இதே போலத் தன்னைத் தஞ்சமென்று வந்தடைந்த மக்களைத் தனது கடைக்கண் அருட்பார்வை மூலம் ஆட்கொண்டு ரட்சிக்கின்றவள் என்ற காரணத்தால்தான், அவளுக்கு மீனைப் போன்ற ஆட்சியுடையவள் என்ற பொருளில், மீனாட்சி என்ற பெயர் வந்தது.

—பிரும்ம ஸ்ரீ நாராயண சாஸ்திரிகள் கூறக் கேட்டவர்.

—ஜானகி மணாளன்.

அன்று உமையவள், அங்கயற் கண்ணியாகவும்; சங்கரன் அழகு மிகு சுந்தரேசுவரராகவும் மதுரையில் பூண்ட மணக்கோலத்தை — இன்று யுகங்களைக் கடந்தும் ஆண்டுதோறும் விழாக் கொண்டாடி நினைத்து போற்றி வணங்கி மகிழ்கிறது அந்த நகரம்.

அதோ...! நான்மாடக்கூடல் நகரில் சித்திரைத் திருவிழாவில் நடைபெறும் தெய்வத் திருக்கல்யாண வைபோகத்தில்தான் எத்தனை எத்தனைக் கோலாகலங்கள்...!

(தொடரும்)

புகைப்படங்கள் :

பாண்டியன் ஸ்டுடியோ

சித்ரா ஸ்டுடியோ மதுரை

# வாணிமஹாலில் ஒரு ஞானக் குழந்தை




வாணி மஹாலில் நடந்த 'பாலஜோதிடம்' வெளியீட்டு விழாவில் பி. வி. ராமன்.

நிகழும் காளயுக்த ஆண்டு வைகாசித் திங்கள் 5-ம் நாள் (19–5–78) வெள்ளிக்கிழமை — துவாதசி, ஹஸ்தம், பிறகு சித்ரா நட்சத்திரம், சித்தயோகம் கூடிய சுபதினத்தில் மாலை 5–50 மணி முதல் 6-02 மணிக்குள் துலா லக்னத்தில் பிறந்த ஒரு குழந்தை, பிறந்த அன்றைக்கே ஒரு செய்தி படைத்து விட்டது — அது சாதாரணக் குழந்தை இல்லை; 'ஞானக் குழந்தை' என்று பிறந்த அன்றைக்குத் திரண்டு வந்து பார்த்த பிரமுகர்களாலேயே வாழ்த்து பெற்ற குழந்தை. அதில் பெருமை அடைபவர்கள் 'இதயம் பேசுகிறது' இதழின் வாசகர்கள்தான். காரணம், அக்குழந்தை 'இதயம்' குடும்பத்தின் சொந்தக் குழந்தை. ஆம்! 'இதயம் பேசுகிறது' இதழின் முதல் சகோதரனை 'பாலஜோதிடம்' (மாதம் இருமுறை) ஏடுதான் அது. அதன் ஆசிரியர், பாலஜோசியர்; வெளியிடுபவர், மணியன்.

இந்தப் புதுப் பத்திரிகைக் குழந்தையை வாழ்த்த பெரிய மேதைகள் வந்திருந் தார்கள். ஜோதிட உலக ஜோதியாகத் திகழும் பெங்களூர் பி. வி. ராமன், வேதவிற்பன்னரான வழுத்தூர் ராஜ கோபால சர்மா, திரு. தேவநாதன், முத்தமிழ்க் கவிஞர் திரு. எஸ். டி. சுந்தரம், திரு. ஜெமினி கணேசன், ஜோதிட மேதை திருமதி. கே. என் சரஸ்வதி... அடேயப்பா! அத்தனை பேரும் அறிவுக்கடலில் முக்குளித்து முத்தெடுத்தவர்கள். இந்திய ஜோதிடத் தின் பெருமை மிக்க பாரம் பரியத்தை, அதன் விஞ்ஞானத் தகுதிகளை—தலைமை தாங்கிய பெங்களூர் பி. வி. ராமன் எடுத்துச் சொல்லி அயர வைத்தார்.

பேச்சுக்கள் முடிந்தும் கூட்டம் கலையவில்லை. மகாவித்வான் மதுரை சோமு கச்சேரி யென்றால் எப்படி எழுந் திருக்க மனது வரும்? குழந்தை பிறந்த முகூர்த்த ராசியோ என்னவோ, சோமு விற்கு அன்றைக்கு ஏக குஷி! பொரிந்து தள்ளிவிட்டார்.

'இதயம் பேசுகிறது' இதழின் சகோதரனை 'பாலஜோதிட'த்திற்கும் 'இதயத்'தைப்போலவே எடுத்த எடுப்பில் மக்கள் ஆதரவு அமோகம் என்பதை முதல் இதழின் சூடான விற்பனையே நிருபித்தது.

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர் ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்
ஆசிரியர் : மணியன்.
துணை ஆசிரியர்கள் : தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி : 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை - 600 032.

காவி உடை அணியச் சொல்லி சந்நியாசிகளாக ஆக்குவதில் அவர் களுக்கு என்ன சந்தோஷம்?'' என்று கேட்டேன்.

''இவர்களில் பள்ளிக்கூடப் பெண்களும் இருக்கிறார்கள். ஆனால் இது ஒரு ரெடிமேட் கார்மெண்ட் பாக்டரி. துணிகளைத் தைக்கவும், பொத்தான்களை வைத்துப் பொருத் தவும், மென்மையான விரல்கள்தாம் ஏற்றவை என்று நினைக்கிறார்கள். அதனால் பெண்களே இங்கு அதிகமாக வேலை பார்க்கிறார்கள். பள்ளிக்கூடப் பெண்களும் பகுதிநேரமாக வேலை செய்கிறார்கள்'' என்றார் துரைராசா.

'''டீன் ஏஜ்' பெண்களாகத் தேர்ந் தெடுத்திருக்கிறார்களே?'' என்று கேட் டேன்.

''அதிலும் ஒரு லாபம் உண்டு. கூலி குறைவாகக் கொடுக்கலாம். பெரும்பாலும் அவர்கள் இந்த வருமானத்தை ஒரு 'பாக்கெட் மணி' யாகத்தான் கருதுகிறார்கள்'' என்றார் அவர்.

வழியில் வர்ண பல்புகள் போட்ட விளக்கு அலங்காரம் கண்ணில் பட்டது. ''இதுவும் விசாக் திருவிழாதானா?'' என்று கேட்டேன்.

''உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டார் துரைராசா.

''ரங்கனாதன் சொன்னார். பௌத்த மதத்தைப் பின்பற்றுபவர்கள் எல்லா ருமே இப்படி வர்ண பல்புகள் போட்டுக் கொண்டாடுவார்களோ?'' என்று கேட்டேன்.

''கொண்டாட ஆசைதான். ஆனால் ஒரு வர்ண பல்பு விலை ஆறு ரூபாய்! எத்தனை பேரால் அவ்வளவு விலை கொடுத்து வாங்க முடியும்?'' என்றார் துரைராசா.

கார் மலைச்சாலையில் ஏற ஆரம் பித்தது. நன்றாக அமைக்கப்பட்டிருந்த தார் ரோடைக் கவனித்துவிட்டு, ''இங்கே சாலைகள் நன்றாக இருக் கின்றனவே?'' என்று கேட்டேன்.

''இவையெல்லாம் அந்தக் காலத்தில் எஸ்டேட்டுகளாக இருந்தபோது போடப்பட்டவை. தேயிலைத் தோட் டங்களை வைத்திருந்த கம்பெனிக் காரர்கள் அவர்களுடைய சௌகரியத் துக்காக வசதியான சாலைகளைப் போட்டு டுக் கொண்டார்கள். 1840-ம் ஆண்டு வரை இந்தப் பகுதிகளில் காபித் தோட்டங்கள்தாம் இருந்தன. அப்புறம் தான் அவை தேயிலைத் தோட்டங் களாக மாறின!'' என்றார் சுமதிபாலா.

''தேயிலைத் தோட்டங்களா? 'தேயிலைத் தோட்டத்திலே' என்று கிட்டப்பா விருத்தம் பாடி இருக்கிறாரே, அந்தத் தோட்டங்களா? பார்க்க வேண்டுமே?'' என்று ஆவலோடு கேட்டேன்.

''நிறையப் பார்க்கப் போகிறீர்கள்! அடுத்த நாற்பத்தெட்டு மணி நேரத் துக்கு உங்கள் கண்களில் படப்போவ தெல்லாம் நீல நிற ஆகாயமும், பச்சை நிறத் தேயிலைத் தோட்டங்களும்தான்!' என்றார் சுமதிபாலா.

தம்பட்டம், பேரிகை இவற்றுடன் இசைக்கருவிகளும் ஒலிக்கும் சப்தம் கேட்டது. விளக்கு அலங்காரங்களுடன் மேடையும் கண்ணிற்பட்டது. வாலிபர்களும்பெண்களும் கூட்டம்கூட்ட மாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

''என்ன விஷயம்? மறுபடியும்...'' என்று ரங்கனாதனின்புறம் திரும்பினேன்.

''விசாக் திருவிழாவேதான்! இங்கே விடிய விடியக் கூத்து நடக்கப்போகிறது. புத்தர் ஜாதகக் கதைகளை நடித்துக் காட்டுவார்கள். ஆனால் அதைப் பார்க்க நிறைய இந்துக்களும் வருவார் கள்... இங்கே புத்தர் கோயில்களில் கூட அப்படி ஒற்றுமையான, ஓர் விசேஷமான அம்சம் உண்டு. அங்கே விஷ்ணுவையும் வணங்குவார்கள்!'' என்றார் ரங்கனாதன்.

''விஷ்ணுவா..?'' என்று பிரமிப்புடன் கேட்டேன்.

**(தொடரும்)**

இலங்கைச் சிரிப்பு

**புத்திர பாக்கியம்**



மகனின் படிப்பு போக்கு எல்லாம் எப்படி?

படிப்பில் bottom. உடுப்பில் **bellbottom.**

—அதிமதுரம்

சிரித்திரனிலிருந்து

# தென் மதுரை ஆளுகின்ற தேவி எங்கள் மீனாட்சி!

மீனாட்சித் திருக்கல்யாணக் காட்சிகள்

## 6

புகழ்மணக்கும் தமிழ்மகளைப் பொதி
கமந்த மணவாளன்
நகமணக்கும் தகையவளை நங்கையினைப்
பாடுவமே!
சிலைவடிவை வென்றவளைச் சிவன்மணக்க
நின்றவளைக்
கலைவடிவு கொண்டவளைக் கன்னியினைப்
பாடுவமே!
தமையனவன் நீர்வார்க்கத் தலைமகன்தன்
கைப்பிடிக்க
அமைவுறுமென் நகைகாட்டும் அணங்
கவளைப் பாடுவமே!

—டாக்டர் இராம. பெரியகருப்பன்

புராணங்கள் எல்லாம் பொய்யா? ஒரு வேடிக்கையான கண்ணோட்டத்தைப் புரிந்து கொண்டால், இதற்கு விளக்கம் புரியும்...

கடவுளும் - மனிதனும் அடிப்படையில் ஒன்றுதான் என்கிறது வேதம். அதாவது, 'ஜீவாத்மாவாகிய மனிதன் பரமாத்மாவாகிய தெய்வத்திடமிருந்து பிறந்தவன்; அடிப்படை அம்சத்தில் தெய்வ அம்சங்களைக் கொண்டிருப்பவன் மனிதன்...' என்பது இதன் கருத்து.

அடிப்படையில் ஒரே அம்சம் என்றாலும், உண்மையில் கடவுளும் மனிதனும் ஒன்று என்று சொல்லிவிட முடியுமா?

மலையிலிருந்து உற்பத்தியாகிற தூய்மையான நதி பூமியில் ஓடும்போது மண்ணின் அழுக்கெல்லாம் ஏறி நிறம் மாறி சுவை மாறுவது போல்; தெய்வத்திடமிருந்து உற்பத்தியானாலும் மனிதன் பூமியில் பிறந்த பிறகு லோகாயத, லௌகீக விவகாரங்களில் ஊறிப்போய் குணமும் சுவையும் மாறிப் போயிருக்கிறான்.

இந்த நிலையில்தான் இரண்டு வித்தியாசமான கண்ணோட்டங்கள் பிறக்கின்றன.

**பொன். பாஸ்கர மார்த்தாண்டன்**

மனிதனையும் தெய்வமாக மதித்துப் போற்றுவது ஒரு பார்வை. —இது பேரின்பம்.

இதற்கு மாறாக, தெய்வத்தை மனித அம்சமாக மதித்து ரசிப்பது ஒரு கண்ணோட்டம். —இது சிற்றின்பம்.

மனிதனைத் தெய்வமாகப் போற்றுவது ஆன்மிகம்.

தெய்வத்தை மனிதனுக்கி ரசிப்பது லௌகீகம்.

இறைவனுடைய தத்துவங்களுக்கு, இந்த ஆன்மிகப் பார்வையில் சொல்லப் பட்ட விளக்கங்கள்தாம் வேதங்கள்.

அதே தத்துவங்களுக்கு மனிதனின் லௌகிகப் பார்வையில் சொல்லப்பட்ட விளக்கங்கள்தான் புராணங்கள்.

இதில் எது பொய், எது உண்மை என்று ஆராய்வது வீண் வேலை. எல்லாம் பார்வை விசேஷம்தான்! நம் மனசில் ஏற்படுகிற பார்வை வித்தியாசம்.

தெய்வத்தை மனிதன் தன் கண்ணோட்டத்தில் பார்க்கும்போதுதான்-தெய்வத்துக்கு கல்யாணம், பள்ளியறை, குழந்தைகள், பார்வதி — கங்கை 'சக்களத்தி'ச் சண்டை, பாமா-ருக்மிணி பிணக்கு, வள்ளி—தெய்வானை குமுறல் —விவகாரங்கள் எல்லாம் உருவாகின்றன.

இவற்றினால் ஒருவித சிற்றின்ப பாமர சுகம் மனத்துக்கு ஏற்படுகிறது. முழுமையாக நம்பாமல் ஒதுக்கி விட்டால், ஓர் அடிப்படை தத்துவத்தையே பார்க்காமல் புறக்கணித்தவர்களாகிறோம்.....

மதுரையில் நிகழ்ந்த சிவ—சக்தி சங்கமத்தை, சொக்கேசர் — அங்கயற் கண்ணி திருமண வைபவமாக மாற்றிக் கொண்டாடுவதில் மகிழ்ச்சி கொள்கிறது, மாந்தரின் லௌகீகம்.

மாந்தர் கூடி மகிழ்ந்து களிக்கும் இவ் விழாவில் இன, மத பேதமின்றி எல்லாரும் கலந்து கொள்ள வேண்டும் என்பதற்காக ஒரு சுவையான வரலாற்றையும் மேற்கொண்டு விழா எடுக்கின்றனர்.

அதுதான் மீனாட்சி — சொக்கேசர் திருக்கல்யாண விழாவோடு இணைக்கப் பட்டிருக்கும் பிரம்மாண்டமான அழகர் ஆற்றிலிறங்கும் அற்புதக் கோலாகலத் திருவிழா.

மதுரையில் நடக்கும் தங்கை மீனாட்சியின் திருக்கல்யாணத்துக்கு அழகர் வருகிறார். வரும் வழியில் காலதாமதம் ஏற்பட்டதால் அவர் உரிய நேரத்தில் வந்து சேர முடியவில்லை. திருக்கல்யாணம் நடந்து முடிகிறது. திருமணம் முடிந்த செய்தி அவர் வைகை ஆற்றைக் கடப்பதற்காக மறுகரையில் இறங்கும்போதுதான்— அவருடைய அண்ணன் வீரராகவப் பெருமாளால் அவருக்குத் தெரிவிக்கப் படுகிறது. உடனே அவர் கோபித்துக் கொண்டு மதுரைக்கு வராமல் ஆற்றினோரமாக வண்டியூர் சென்று, அங்கு தன் பிரியத்துக்குரிய துலுக்க நாச்சியார் இருப்பிடத்தில் தங்கி-பின் அழகர் கோயிலுக்குத் திரும்பி விடுகிறாராம்!

வேடிக்கையான கதையாகத் தோன்று கிறதல்லவா? என்றும் எங்கும் நிறைந்த பெருமாள் எப்படிக் காலதாமதமாக வருவார்? திருமணம் நடப்பது அவருக் குத் தெரியாமலிருக்குமா? —இப்படி எத்தனையோ கேள்விகள்...

இதைப்பற்றி முன்னாள் அறநிலைய பாதுகாப்புத்துறை துணை ஆணையாளர் திரு.ஏ.சக்கரை சேர்வை, "உண்மையில் இரண்டு திருவிழாவையும் இணைத்து மதுரையில் நடக்கச் செய்ய வேண்டும் என்பதற்காக திருமலை நாயக்கர் அமைத்த ஏற்பாடு இது. மீனாட்சி திருக் கல்யாணம் முன்பு தனியாக மாசி மாதத்தில் மதுரையில் நடந்தது. அழகர் ஆற்றிலிறங்கும் விழா தனியாகத் தேனூரில் நடந்தது. அதாவது மண்டூக முனிவருக்கு மோட்சம் தர பெருமாள் ஆற்றிலிறங்குவதாக ஐதிகம். தேனூரில் நடக்கும் பெரிய திருவிழாவைத் தன் தலைநகரான மதுரையிலேயே நடை பெறச் செய்ய வேண்டும் என்றும் — சைவத் திருவிழாவான மீனாட்சி கல்யாணத்தையும்-வைணவ விழாவான அழகர் திருவிழாவையும் ஒரே நேரத்தில் ஒன்றன்பின் ஒன்றாக நடத்தினால் பேத மிருக்காது என்று விரும்பியும்-திருமலை நாயக்கர் இந்த விழாக்களை இணைத்து சித்திரையில் தமிழகத்திலேயே மிகப் பெரிய திருவிழாவாகக் கொண்டாடச் செய்தார். சைவம் — வைணவத்தோடு முஸ்லிம் இன மக்களின் கூடுபாட்டையும்

உண்டாக்கவே துலுக்க நாச்சியார் வரலாறு'' என்கிறார்.

இந்த வரலாற்று உண்மை சாதாரண பாமர மக்களுக்குத் திருப்தி அளிப்ப தில்லை. அவர்களுக்கு — அவர்களுடைய ரசனைப்படி தங்கை கல்யாணத்துக்கு அண்ணன் வருவது - கோபிப்பது-பின் பிரிய நாச்சியார் கோயிலுக்குப் போவது போன்ற லோகாயத சுவையூட்டும் கதைகளில்தான் ஆர்வம்; அதை நம்புவதில்தான் சுகமிருக்கிறது அவர்களுக்கு!

இறைவனைத் தன் மனத்துக்குள்-தன் மனப்போக்குப்படி உருவகித்து வணங்கும் இன்பம் அது.

எல்லார் மனத்துள்ளும் இணைந்திருக்கும் இறைவனும் - யார் யார்



திரு. ஏ. சக்கரை சேர்வை





மதுரைத் திருவிழாவை மதபேதமின்றி மகிழ்ச்சியுடன் கலந்து கொண்டாடும் இந்து-கிறிஸ்துவ-முஸ்லீம் பெருமக்கள்

எப்படி எண்ணி வணங்கி மகிழ் கிறார்களோ, அப்படி அவர்களுக்கு அருள் புரிகிறார்.

அழகர் ஆற்றிலிறங்கும் திருவிழாவுக்கு முன்பாக மீனாட்சியம்மன் திருக் கல்யாணத் திருவிழா பத்து நாட்கள் நடக்கிறது.

திருவிழாவின் எட்டாம் நாள் விழாவில் அம்மையின் 'திக்விஜயம்...' விதம் விதமான வாகனங்களில் வேறு வேறு திசைகளில் திக்விஜயம் செய் கிறார் — ராஜராஜேசுவரியான அங்கயற் கண்ணி. ஏழு திசைகளுக்கும் சென்று இந்திரன் முதலானோரை வெல்கிறார். முடிவில் எட்டாவது திசையான ஈசான்யத்துக்குச் செல்கிறார். அங்கே சுவாமி எதிர்ப்படுகிறார். ஐயன் முகம் நோக்கிய அன்னை வில்லைக் கீழே எறிந்து விட்டு சொல் சுணங்கி நிற்கிறார். அந்த விநாடியே திருமணம் நிச்சய மாகிறது. பின் நந்திதேவர் சீர் கொண்டு வந்து நிச்சயதார்த்தத்தை நடத்தி வைக்கிறார்.

ஒன்பதாம் நாள். சித்திரை வீதியில் அன்னை ஒரு பல்லக்கிலும், சுவாமி வேறொரு பல்லக்கில் — 'பிரியா விடை தேவி'யுடனுமாக திருவீதிக்கில் வலம் வருகிறார்கள்.

யார் அந்தப் பிரியா விடை தேவி...? வேறு யார்? இதுகாறும் மீனாட்சி அம்மை தன் உடலிலேயே ஓர் அங்கமாக ஈசனை ஆத்மிகமாக வைத்திருந்ததைப்போல்

இறைவியை விட்டுப் பிரிந்திருக்க முடியாத ஈசனும் தேவியின் ஆத்ம சக்தியை 'பிரியா விடை' என்ற நாமத்துடன் அருகிலேயே வைத்திருந்தார். ஆம்! சக்திதேவியை அவர் பிரிந்திருக்க முடியுமா என்ற வினவுக்கு, 'பிரியார்' என்ற விடை தரும் காட்சிதான்—பிரியா விடை அம்மனின் காட்சி!

திருவீதி சுற்றுலா முடிந்ததும் ஆலயத்தினுள்ள ஊஞ்சல் மண்டபத்தில் தெய்வ நாயகர்-நாயகியின் திருக்கல்யாணம் பார் சிறுத்ததோ, பக்தி பெருத்ததோ என்று பக்தர் கூட்டம் மண்டபமெங்கும் நிறைந்திருக்கிறது.

அம்மனை உருவகப்படுத்த அவர் பிரதிநிதியாக ஓர் அர்ச்சகரும் — சுவாமியின் பிரதிநிதியாக ஓர் அர்ச்சகரும் நின்றிருக்கிறார்கள். திருப்பரங்குன்றத்தில் கோயில் கொண்டிருக்கும் பவளக்கனிவாய்ப் பெருமாள்—அன்னை மீனாட்சிக்குத் தமையனார் என்ற லௌகிக நிலையில் கன்னிகாதானத்தை நடத்தி வைக்கிறார். மறையவர் வேதம் சொல்ல மறைநாயகனின் திருமணம் நிகழ்கிறது. காலத்தையும் ஞாலத்தையும் படைத்த இறைவர்க்கும் காலம் பார்த்து இந்த ஞாலத்தில் கல்யாணம் நடக்கிறது! கோடானு கோடி ஜீவராசிகள் முதல் குமரக் கடவுள் வரை இறைவர்க்கும், மானிடர்க்கும் அம்மையப்பனாக இருக்கும் உமா - மகேசுவரருக்கு தம் பிள்ளைகள் முன்னாலேயே திருமணம்...

கால தேச வர்த்தமானங்களை வென்ற பிரமாணக் கோலம்!

**அ**தோ! ஊஞ்சல் மண்டபம் கண்கொள்ளாக் காட்சியாய்ப் பக்திப் பிரவாகத்தில் பொங்கி நிற்கிறது. எங்கும் 'தாயே மீனாட்சி...!' என்ற பேரொலி. மதுரை வாழ் சுமங்கலிப் பெண்டிர் அனைவரும் புதுமஞ்சள் கயிறு தாலி வாங்கி அணிந்து இறையருளைப் பெறுகின்றனர்.

"அம்மனுக்கும்-சாமிக்கும், திருக்கல்யாணம் நடக்கிற இந்த நாளிலே தான் நாங்களும் கல்யாணம் செய்திருக்கிறோம். வேற நாள் நட்சத்திரப் எதுவும் பார்க்கலே... எதுக்கும் பார்க்கணும்...?" என்கிறார்கள் அன்று அந்தச் சந்நிதியில் திருமணம் செய்து கொள்ளும் அலங்காநல்லூர் திரு. **சின்னப்பாவும் — அம்சவல்லியும்.**

ஆம்! அன்னையும் ஈசனும் இணைந்திருக்க, நாளென்ன செய்யும்..? கோள் **என்ன செய்யும்...?**

வையம் யாவையும் தாமுளவாக்கி வானையும் மீனையும்தன்னுள் அடக்கி, வேத ஞானங்களைத் தம் விழியினால் இயக்கி, புவனம் ஏழையும் புன்னகையால் வழிநடத்தி, வேதத்தின் உட்பொருளாய்—பொருள்களுக்கோர் அர்த்தமாய்—ஞானங்களுக்கோர் எல்லையாய் — ஞாலங்களுக்கொரு நாயகமாய் மோனப் பெருவெளியில் முகிழ்ந்துநிற்கிறார்கள், கருணைப் பெருஞ்சுடர்களான தேவதேவியர். நீக்கமற சங்கமித்து நிற்கும் அந்தச் சிவசக்தித் தத்துவத்தில்,

தர்மங்களும் சீலங்களும் இணைகின்றன;
அருளும் கருணையும் இணைகின்றன;
தவமும் பயனும் இணைகின்றன;
அறமும் திறனும் இணைகின்றன.
அனைத்துக்கும் நாயகமாய் அருள்தந்து,

அபயக் கரம் தந்து பேதையாம் பிள்ளையரைக் காக்க பிரணவத்தின் பெரும் பொருளாய் எழுந்து நிற்கின்றனர், அம்மையப்பனும் —தேவதேவியர்.

தவமியற்றி, அவர் தாள் போற்றி தாழ்வகற்றிக் கடைத்தேற அண்ட புவனங்களும் அனைத்துக் கோடி ஜீவராசிகளும் தாகித்து, மோகித்துப் போற்றி செய்து உய்கின்றன. ஈசனே போற்றி.. அவரைத் தம்முள் கொண்ட எம் அம்மையே போற்றி, போற்றி...!

(மீனாட்சி அம்மன் தரிசனம் முற்றும்)

**(அடுத்த இதழில்: கன்னியாகுமரி பகவதி அம்மன் தரிசனம்)**

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்,
ஆசிரியர்: மணியன்.
துணை ஆசிரியர்கள்: தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி: 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை-600 032.

கட்டியபோது இது அரசாங்கப் பணத்தில் செய்யப்படும் வீண் செலவு என்பது தான்.... எங்களுக்கு எதிராக சில முதலாளித்துவ பத்திரிகைகள் இருக்கின்றன. அவர்கள் தங்களுக்குத் தோன்றியதையெல்லாம் எழுதுகிறார்கள்: மேல்நாடுகளில் 'ஜர்னலிஸ்டு'கள் இப்படி தங்கள் சுதந்திரத்தைப் பயன்படுத்திப் பொய் சொல்வதில்லை. எங்களைப் பிடிக்க வில்லை என்றால் உங்கள் தலையங்கங்களில் விமரிசியுங்கள். ஆனால் எதை எழுதினாலும், உண்மையை எழுதுங்கள்.''

'''இந்திரா காங்கிரஸ்காரர்களை எங்கள் தோழர்கள் தெருக்களில் நேருக்கு நேர் சந்திக்க ஆரம்பித்தால், அவர்கள் மேற்கு வங்காளத்தில் எங்கேயாவது தலைகாட்ட முடியுமா?' என்று ஒரு எச்சரிக்கை கொடுத்திருக்கிறீர்கள்... இது ஒரு முதலமைச்சர் பதவிக்குக் கண்ணியமாக இருக்கிறதா?''

''ஆமாம்! சொன்னேன். எனது கட்சி ஆட்கள் இந்திரா காங்கிரஸ்காரர்களைத் தாக்குகிற நிலைமையை அந்தக் கட்சி உருவாக்கி விடக் கூடாது! அவர்கள் சட்டத்தை கையில் எடுத்துக் கொண்டு விடுகிற மாதிரி நேர்ந்துவிடக் கூடாது என்பதற்காகத்தான் அப்படிச் சொன்னேன். அப்படி ஏதாவது நேர்ந்து விட்டால் என்ன செய்ய முடியும்? இருபத்தி நாலு மணி நேரம் கழித்து போலீஸ் வந்து தலையிடுகிற மாதிரி நேரிட்டால் பரவாயில்லையா...?''

''இந்திராகாந்தி மீண்டும் தலையெடுத்து வருவது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?''

''அவர் தலையெடுக்க மாட்டார் என்றுதான் நம்புகிறேன். ஜனதா அரசின் பொருளாதாரக் கொள்கைகளின் குறைகளையும், அவர்களின் கருத்து வேறுபாடுகளையும் அவர் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். ஜனதா கட்சி தலைவர்களும் இதை உணர்ந்து கொள்வார்கள்; மக்களும் உணர்ந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்.''

நேரமாகிவிட்டதைக் குறிப்பாக உணர்த்துகிறார் கட்சியின் தமிழ் மாநிலப் பிரிவைச் சேர்ந்த திரு. பரமேஸ்வரன்.

''ஸோ... நாங்கள் கிளம்ப வேண்டியிருக்கிறது'' என்று கூறியபடி எழுந்து கொள்கிறார் ஜோதிபாசு. திரு. பரமேஸ்வரன் விமான டிக்கெட்டை எடுத்துக் கொடுக்கிறார். கதவைத் திறந்து கொண்டு ஏர்-கண்டிஷன் குளிர்ச்சியிலிருந்து வெளியே வருகிறோம் நாங்கள்.

பேட்டி-படம்: **ரமணன்-மாலன்**

# தேவி தரிசனம்




1

காணும் பொருளனைத்தும் கன்னிக்
குமரி எனப்
பேணும் பேறெய்துமோ? பேதை
நெஞ்சே! - ஊணும்
உறக்கமுமே ஓர் பொருட்டா உன்னி
இருந் தாயே!
இறக்கும்நாள் நீசெய்வ தென்?

—ஸாதுராம் சுவாமிகள்

(தென் கன்னிக் குமரி வெண்பா அந்தாதி)

## மோனத் தவம் புரியும்

## மூன்று கடல் நாயகியே!

'**க**ல்... கல்...!' என்று அந்த ஒலி அந்தக் கன்னித் திருநாடெங்கும் எதிரொலித்துக் கொண்டிருக்கிறது.

என்ன அந்த ஒலி...?

இரவு பகலாக கானும்ருதமாக ஒலித்துக் கொண்டிருக்கிறதே — அந்த ஜீவகீதம் எங்கிருந்து வருகிறது?

கோடானுகோடி மக்களைத் தினம் தினம் தன்னைத் தேடி ஓடோடி வருமாறு ஈர்த்துக் கொண்டிருக்கிறதே அந்த ஒலி — அதன் மகிமை என்ன?

கருணையின் அழைப்பா? வேதத்தின் விளக்கமா? இருளார்ந்த மாந்தரின் விடிவுக்கு ஓர் அருளார்ந்த அறிவிப்பா?

ஆம்! இவ்வு எல்லாம் ஒன்றுய் இணைந்த அன்னை பராசக்தியின் பாதச் சிலம்பொலி, அது!



குமரி முனை



பகவதி அம்மன் திருக்கோயில் நுழைவாசல் தோற்றம்

அதோ! அந்தத் தென்குமரி முனையில் மூன்று கடல்களும் சங்கமித்து அன்னை பகவதியின் தூய்மைத் திருப்பாதங்களைத் தழுவித் தொழுது பூஜித்து - அத்திருப் பாதங்களுக்கே கழல்களாக மாறி அந்தப் பெருமிதத்தில் பரவசமுற்று ஆர்ப்பரிக் கின்றனவே, அந்த ஒலியில் - அந்த அன்னையின் திருப்பாத சிலம்பொலியில், சக்தியின் சங்கநாதத்தைக் கேட்டு சகல உயிர்களும்-அண்ட புவனங்களும் உய்வுற்று நிற்கின்றன.

காலம் காலமாக அன்னையின் அந்தப் பாதச் சிலம்பொலி பண்ணாய் ஒலித்துக் கொண்டிருக்கிறது.



சுவாமி விவேகானந்தர்

# பொன். பாஸ்கரமார்த்தாண்டன்

அந்த ஒலி கேட்டுப் பாரெல்லாம் அந்தத் தென்முனைத் தேடி வந்து கொண்டிருக்கிறது.

அருள் தேடி வருவோர் கோடி...

பொருள் தேடி வருவோர் கோடி...

கருணை வரம் தேடி வருவோர் கோடி...

அத்தனை கோடி ஜீவராசிகளையும் வரவேற்று 'அஞ்சேல்' என்று அருள் வாக்காய் ஒலித்துக் கொண்டிருக்கிறது அந்த ஒலி.

அந்த ஒலிக்குள் ஓர் ஜீவ ஒளியாய்-ஒலியும் ஒளியும் சங்கமிக்கும் பேரருளாய் அன்னை பகவதி ஞானப் பெரு வெளியில் மோனத்தவம் செய்து கொண்டிருக்கிறாள்....

...கல்பு கோடி காலமாய் தேவாதி ...வரும், திரிபுவனங்களும், தெளிந்த தவ ஞானிகளும்–ஏன், வேதங்களும் ஞானங்களும் கூட தவம் செய்து தேடிக் கொண்டிருக்கும் தவத்தின் நாயகியான அன்னை பராசக்தியே, கன்னிப் பகவதியாய் அந்தத் தென் முனையில் தவமிருக்கிறாள்.

ஏன், யாருக்காக...?

**பா**வங்களைப் போக்கும் அன்னையின் பாதங்களருகே நித்தம் நித்தம் எத்தனை எத்தனையோ சீலங்கள் செழித்துக் கொண்டிருக்கின்றன...

பொருளியல் லோகாயத வாழ்வில் உழலும் மாந்தர் முதல் அருளியல் ஞானவாழ்வில் திளைத்திருக்கும் ஞானச் செல்வர்கள்வரை — எண்ணற்றோர்



அலைமலையாய் பக்தர்கள்

அன்னையின் திருப்பாதங்களில் வந்து உய்வு பெறுகின்றனர்...

ஃ ஃ ஃ



ஏ. வடிவேல் முருகன்.

"16 வருஷமாக குழந்தை இல்லாம இருந்த எங்க பழைய தேவஸ்தான மானேஜருக்கு இங்கே வந்ததும், பகவதி அம்மன் அருளாலே சந்தான பாக்கியம் கிடைத்திருக்கு. பக்கத்திலே இருக்கிற மீனாட்சி லாட்ஜ் பார்ட்னர் நயினார் தேவர் மகளுக்கு ரொம்பக் காலமாக கல்யாணம் நிச்சயமாகாம இருந்தது. அம்மனை வேண்டிக் கொண்டார். உடனே நிச்சயமாகி விட்டது...!'' என்கிறார் கன்னியாகுமரி பகவதி அம்மன் ஆலய மேலாளர் ஏ. வடிவேல் முருகன்.

''என்னமாவது காரியத்தை நெனச்சு அம்மனுக்குப் பட்டுப் பாவாடை சாத்தி வேண்டிக்கிட்டா, அப்படியே அந்தக் காரியம் நிறைவேறும்'' என்கிறார், நாகர்கோயிலைச் சேர்ந்த பர்வதவர்த்தினி அம்மாள்.

''கல்யாணமாகாத பெண்ணிடம் கன்னியாகுமரி அம்மனின் படத்தைக் குடுத்தா, சீக்கிரம் கல்யாணம் நடக்கும்'' என்று நம்பிக்கையோடு கூறுகிறார், சென்னை மேற்கு மாம்பலம் கோதண்டராமய்யர் தெருவைச் சேர்ந்த எஸ். கல்யாணி.

''தினம் பகவதி அம்மனைத் தரிசித்து விட்டுப் போனால் மனசுக்கு ஒரு அமைதியும் புத்துணர்ச்சியும் ஏற்படுகிறதை நாங்க அனுபவத்திலே கண்டிருக்கிறோம். அதனாலே எந்த வேலை இருந்தாலும் காலையிலே கோயிலுக்குத் தவறும வந்துடுவோம். அன்னன்னிக்கு நம்ம மனசிலே எவ்வளவோ அழுக்கு படியுது. வீட்டைத் தினம் சுத்தம் பண்ற மாதிரி மனசையும் தினம் சுத்தம் பண்றதுக்கு அம்மனோட தரிசனம் உதவுகிறது. அவ முன்னாலே நின்னாலே நாம சுத்தமாயிட்ட மாதிரி இருக்கு'' என்கிறார்கள் ஒரே அறையில் வாழும் நண்பர்களான திரு. சண்முகசுந்தரமும், திரு. ரமேஷும் (இருவரும் பாங்க் ஊழியர்கள். சண்முகசுந்தரம்—ஸ்டேட் பாங்க் ஆப் திருவிதாங்கூரிலும், ரமேஷ்—கனரா பாங்கிலும் பணியாற்றுகிறார்கள்).

''அம்மனைத் தரிசித்துவிட்டு பிரதட்சணமாக பிரகாரத்தில் சுற்றி வந்து கொண்டிருந்தோம். என்னமோ தெரியலே.. எங்க பிள்ளைங்களுக்கு ஏதோ பரவசம் ஏற்பட்டுட்டது! உடனே பிரகாரத்திலேயே உட்கார்ந்து 'தேவி ஸ்தோத்திரம்' பாட ஆரம்பிச்சுட்டாங்க...'' என்கிறார், சென்னை பாலமந்திரிலிருந்து மாணவியரை உல்லாசப் பயணமாக அழைத்து வந்திருந்த நிர்வாகி. பிரகாரத்தில் சுமார் ஐம்பது சிறுமியர் பக்திப் பெருக்குடன் அமர்ந்து 'தேவி ஸ்தோத்திரம்' பாடிக் கொண்டிருக்கின்றனர்...

—இப்படி எண்ணற்றோர்... இதய எழுச்சிகள்... நம்பிக்கை ஒலிகள்... நாள்தோறும் அன்னையின் சந்நிதியில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன...

கடந்த நூற்றாண்டில் – 1892-ல் ஒரு புனித உள்ளத்தைத் தன் அருளால் ஆகர்ஷித்து, உலகரங்கில் ஒரு மகத்தான தெய்விகப் பணியாற்ற அவருக்கு வழிகாட்டி – அன்னை கருணை புரிந்ததும் அந்தத் தென்குமரி முனையில்தான்.

யாத்திரையாக வடக்கேயிருந்து வந்த ஸ்வாமி விவேகானந்தர் 1892-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் கடைசி வாரத்தில் குமரிமுனைக்கு வந்து சேர்ந்தார்.

அந்த ஆண்டு டிசம்பர் 25-ம் நாள் இங்கு முக்கடல் அலைகளில் குதித்து நீந்திக் கரையிலிருந்து 1600 அடி தொலைவில் உள்ள ஸ்ரீபாத பாறையை அடைந்து, அமர்ந்து – அன்று இரவு முழுவதும் அங்கு தியானத்தில் இருந்தார் அவர். (அந்த ஸ்ரீபாத பாறையில்தான் ஆதியில்

குமரியம்மன் கோயில் கொண்டிருந்ததாகக் கூறப்படுகிறது. அங்கு இன்றும் தென்படும் பாதச் சுவடு அன்னை தவமிருந்ததன் அடையாளம் என்று ஒருசாரார் கூறுகிறார்கள். அன்னை தன் அவதார காலத்து தெய்வத் தோழியருடன் தெய்விக பரிதம் ஆடிய போது, ஒரு காலை ஊன்றிய சுவடு அது என்றும் — ஒரு ஸ்தல வரலாறு விளக்கம் தருகிறது.)

அந்த ஸ்ரீபாத பாறையில் இரவு முழுவதும் அன்னையைத் தியானித்துக் கொண்டிருந்த விவேகானந்தருக்குத் திடீரென்று அன்னையின் அருளாணை ஒன்று பிறந்தது...

"கன்னியாகுமரி பகவதி அம்மன் கோயிலில் — இந்தியாவின் கடைசித் துண்டு பாறையில் நான் தியானித்துக் கொண்டிருந்த போது, என் மனத்துள் அந்தத் திட்டம் உருவாகியது" என்று, அன்னை அவர் மனத்துள் வகுத்துக் கொடுத்தத் திட்டத்தைப் பற்றிக் கூறுகிறார். அந்தத் திட்டப்படிதான் 1893ஆம் ஆண்டு அமெரிக்கா சென்று, சிகாக்கோ நகரில் நிகழ்ந்த உலக மதங்கள் மாநாட்டில் கலந்து கொண்டு, இந்து மதத்தின் மேன்மையைப்பற்றியும், அதன் புராதீன கலாச்சார தகுதிகள் பற்றியும் அரிய உரைகள் ஆற்றி, பண்டைய பாரதப் பண்பாட்டை உலகறிய வைத்தார். அன்று அவர் ஏற்றிவைத்த ஞானதீபம்தான்—இன்றும் எண்ணற்ற அமெரிக்கர்களையும், ஏனைய மேல்நாட்டினரையும் ஆன்மிக வேட்கையுடன் நம் நாட்டைத் தேடி வருவதற்கு வழிகாட்டிடும் ஒளிவிளக்காக அமைந்திருக்கிறது.



பால பக்தர் மாணவிகளின் பக்திப் பரவச ஸ்தோத்திரம்

அந்த பெரும் ஞானத் திருப்பணி நிகழ, — சுவாமி விவேகானந்தரை ஞானச் செல்வராகப் பக்குவப்படுத்தி, அவருக்கு ஆன்ம பலம் தந்து அருள் புரிந்தவள், அன்னை பகவதி அம்மன்!

இப்படித் தன் தரிசனத்தால் தரணி மாந்தரை வாழ்விக்கத்தான் அன்னை தவக்கோலம் பூண்டிருக்கிறாளா...?

அந்தத் தலத்தில் அன்னை அவதரித்த மகிமை நம் மனத்துள் தோன்றுகிறது. அந்தப் புனித வரலாற்றில் ஒரு புதிய தெய்விகத் தத்துவம் ஒளிர்ந்து நிற்கிறது....

பாணாசுரன் என்ற கொடிய அரக்கன் செய்த பாவச் சுமையால் பூமாதா கனத்து நின்ற காலம் அது. பூவுலக மாந்தரும் - தேவர்களும் அவனுடைய அச்சுறுத்தல் தாள முடியாமல் அடைக்கலம் தேடி பிரமனிடம் சென்றனர்.

அவர் காட்டிய அந்த வழியில்தான் உலகுக்கு ஒரு புதிய ஒளி தோன்றியது...

(தொடரும்)



கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்,
ஆசிரியர் : மணியன்.
துணை ஆசிரியர்கள் : தாமரை மணாளன், ப[illegible]ா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி : 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, [illegible]00 032.,













**'சிட்டுக்குருவி' பட விளம்பரம்**

இந்த சர்வ வியாபக ரஜனிகாந்தை 'ஓவர்டேக்' செய்து வெற்றிபெற சர்வ லோக நாயகனை ஒரு காந்த குமாரனால் தான் முடிந்திருக்கிறது. அவர்தான் வடிவேலன்!

இன்றைய நிலையில் ரஜனிகாந்த் இல்லாமல் வெற்றி பெற்றிருப்பவர், அவர் ஒருவர்தான்.

பக்திப் படம் தயாரிப்பது என்றால் தேவர் போட்ட பாதையை மீறக் கூடாதா என்ன...? 'சூ' மந்திரக்காளி போட்டதும் மாங்காய் வருவதுபோல், 'முருகா' என்றதுமே பிரச்சினைகள் உடனுக்குடன் தீர்ந்து விடுவதாகக் காட்டுவது தேவர் பாணி. திறமைமிக்க டைரக்டரான கே. சங்கரும், அனுபவப் பட்ட கதாசிரியரான ஆர்.கே .சண்முகமும் கூட கொஞ்சம் அழுத்தமாகவும் யதார்த்தமாகவும் தெய்விக உணர்வைச் சித்தரிக்க முயன்றிருக்கலாம் என்று அவ்வப்போது தோன்றினாலும் —(குறிப்பாக 'கரு' கலைய மருந்து குடித்தும்— குழந்தை எப்படி அழியாமலிருக்கிறது? முருகன் படத்துப் பூவுக்கு அந்த மகிமை இருக்கிறது என்று நம்மைக் காதில் 'பூவைத்து' நம்பச் சொல்கிறார்களா?) படத்தில்பக்தி ரசத்தை வெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓட வைத்து — படத்தையும் வெற்றிகரமாக ஓட வைத்திருக்கிறார்கள் அவ் விருவரும். குழந்தை முருகனுக்கு யானை அபிஷேகம் செய்யும் காட்சியிலும், இறுதியில் விக்கிரகத்துக்கு அபிஷேகம் செய்யும் காட்சியிலும் புல்லரிக்க வைத்து விடுகிறார், டைரக்டர்! கதிர்காமம் காட்சிகளுக்கு நன்றி சொல்லலாம். அவை காணக் கிடைக்காதவை. சிங்கப்பூர் காட்சிகள் புளித்துப் போனவை. 'உலகம்சுற்றும்வாலிபன்' முதல் எத்தனை இந்திப் படங்களில் பார்த்திருக் கிறோம்....

இருப்பினும், இப்படி ஒரு பக்திப் படத்துக்கு — இந்த அளவு வெளிநாடு சென்று படமெடுக்கும் எண்ணம் ஏற்பட்டதே தயாரிப்பாளரின் 'சின்சியாரிட்டி'யைக் காட்டுகிறது.

ஃ ஃ

இப்போது வெளிவந்து ஓடிக் கொண்டிருக்கும் படங்களில் புதுமை ஏதாவது உண்டா?

படங்களில்...? ஊஹூம்.

பட விளம்பரங்களில் அந்த புதுமை தென்படுகிறது 'வருவான் வடிவேலன்' 'சிட்டுக்குருவி' பட விளம்பரங்கள் சுவாரசியமாக அமைந்திருக்கின்றன. 'வருவான் வடிவேலன்' விளம்பரத்தில் டிக்கெட் கிடைக்காமல் திரும்பிப் போவோரின் எண்ணிக்கையைக் குறிப்பிட்டும் — 'சிட்டுக்குருவி'யில் 'பொதுக் குழு' உவமானம் சொல்லியும் ரசிக்க வைத்திருக்கிறார்கள்.

இந்தப் புதுமை ஆர்வம் படங்களுக் குள்ளும்வராதா?

# தேவி தரிசனம்

2

திக்கெட்டும் சீர்பரந்த தேவி கன்னியாகுமரி
மிக்கெட்டுச் சீமகளும் வெண்திருவும்-
புக்கெட்டுப்
பூப்பெய்து போற்றுகழற் புண்டரீ
கத்தவள்மெய்ப்
பூப்பெய்து நாளுமெப் போது?

—ஸாதுராம் சுவாமிகள்

பொன்னைமட்டும் வியாபாரம்செய்ய முடியும் என்பதில்லை.

கன்யாகுமரி முனையில் — அன்னை பகவதியின் பாதக் கமலங்களருகே விளையும் பேறு பெற்ற மண்ணையும் வியாபாரம் செய்கிறார்கள்!

எங்கும் காணாத அதிசயமாக அந்தக் குமரி முனையில் கடல் மணல் பலநிற வண்ணங்களில் நிறைந்து கிடக்கின்றன. கரிய நிறத்திலேயும் — சிவப்பு நிறத்திலேயும் — பழுப்பு வெண்மை நிறத்திலேயும் ஆங்காங்கே குவிந்து கிடக்கும் மணல்களை நிறம் வாரியாகப் பிரித்து விற்கிறார்கள்.

## மோனத் தவம் புரியும் மூன்று கடல் நாயகியே!

அந்த மணல்களுக்கு வரலாறு சொல்கிறார்கள், வழிகாட்டிகள்.....!

"கன்யாகுமரி அம்மனுக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகியிருந்தது. சுசீந்திரம் கோயிலில் இருக்கிற தாணுமாலைய சுவாமிதான் மாப்பிள்ளை! ஆனால் குறிப்பிட்ட நேரத்திலே சாமி வரல்லே... நாரதர் சூழ்ச்சியாலே வழுக்கம்பாறையிலிருந்தே திரும்பிட்டாரு சாமி. கல்யாணம் நின்னு போனதிலே அம்மனுக்கு கோபம் வந்துட்டுது. அந்த ஆத்திரத்திலே கல்யாணச் சாமான்களை யெல்லாம் கடல்லே வீசி எறிந்தாள். குங்குமம் சிவப்பு மணலாக மாறிச்சு! கரும் சாந்துப் பொட்டு கரும் நிற மணலா மாறிட்டுது! அரிசி வெள்ளை நிற மணலா மாறிட்டுது!" என்கிறார்கள்.

நாம் வியந்து நிற்கிறோம்.

தேவி, உலகம் முழுமைக்கும் தாயானவள். தாய், கருணையானவள்; மென்மையானவள்.

வெந்தணல் போல் விதியின் சீற்றத்தால், ஊழ்வினைச் சீற்றத்தால், உலகியல் துன்பங்கள் என்ற சீற்றங்களால் நொந்துபட்ட ஜீவராசிகள் எல்லாம் எந்த மென்மையான கரங்களின் அரவணைப்பைத் தேடி ஓடுகின்றனவோ — அந்த மென்மையான லோக மாதாவுக்கே சீற்றம் ஏற்பட்டிருக்கிறது! மங்கலமான கல்யாணப் பொருட்களை மணல்களாக மாற்றும் அளவு அவ்வளவு சீற்றம் ஏற்பட்டிருக்கிறது...!

அன்னைக்கு ஏற்பட்ட அந்த ஆத்திரம் தான் அந்தத் தலத்தின் மகிமை. அந்த ஆத்திரத்தின் பலத்தில்தான் ஒரு மகிமை நிகழ்ந்திருக்கிறது, அங்கே. அதே ஆத்திரத்தின் மூலம்தான் வேறு எந்தத் தலத்திலும் வெளிப்படுத்தியிராத ஓர் தத்துவ உண்மையை தேவ தேவியர் அந்தத் தலத்தில் நிலைநாட்டிக் காட்டியிருக்கிறார்கள்...

பாணாசுரனின் அக்கிரமங்கள் நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றன.

**பொன். பாஸ்கரமார்த்தாண்டன்**

தேவர்கள், மனிதர்கள் யாவரும் சித்தம் கலங்கி அபயக்குரல் கொடுத்து பிரமனிடம் போய்த் தஞ்சமடைகிறார்கள்.

சிருஷ்டிகர்த்தாவான பிரமனுக்கு, தான் சிருஷ்டித்த பாணாசுரனின் தலைவிதி புரிகிறது..... பாணாசுரனின் கொடுமைக்கு எல்லை புரிகிறது. அந்த முடிவை உண்டாக்கப் போகிறவர் யார் என்றும் உணர்கிறார்.

அக்கிரமங்களை அழிக்கும் ஆற்றல் ஆண்மையை விட பெண்மைக்கு அதிகம். சிவனைவிட, சக்திக்கு அதிகம். தகப்பன் கோபத்தைவிட தாயின் கோபம் சிறந்தது!

தகப்பனின் கோபம் நிர்மூலமாக்குவது. காம உணர்வை உண்டாக்கும் தன் கடமையை 'இறைவன் — மனிதன்' என்ற பேதமில்லாமல் மன்மதன் செய்தான். இருந்தாலும் அவனை எரித்துச் சாம்பலாக்கும் அளவு ஈசுவரனின் கோபம் சென்றது. ஆனால் தாயின் கோபத்திலோ நியாயமும் கருணையும் இருக்கும். கோபத்திலும் கருணை கலந்திருந்தால்தான்—செய்யும் அழிவுப் பணியிலும் நிதானமும் அளவும் ஏற்படும். அதனால்தான் தாயின் கோபம் உயர்ந்தது என்று கருதப்படுகிறது.

உலகத்தை உய்விக்க பாணாசுரனை வதைக்க வேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது. பாணாசுரனின் வதையோடு உலகம் உய்ய வேண்டிய பலனும் ஏற்பட வேண்டும்! எனவே, கோபமும் — கருணையும் சங்கமிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருந்தது.

எனவே, 'பாணாசுரனை வதைக்கும் பொறுப்பை நிறைவேற்ற வேண்டியவள் அன்னை பராசக்தியே' என்பது தெய்வ நிர்ணயமாகியது.

தேவியை அந்தப் பெரும்பணிக்கு ஆயத்தம் செய்ய தேவாதி தேவர்களும், மும்மூர்த்திகளும் சித்தம் கொண்டனர்.

கருணைமயமான தேவியை சம்ஹாரத் தொழிலுக்கு ஆயத்தம் செய்வது எப்படி...? சம்ஹாரம் செய்யத் தேவை கோபம். அந்தக் கோபத்தை தேவியிடம் உண்டாக்க வேண்டும்...அதுவும் உரிய நேரத்தில்—உரிய பக்குவத்தில் ஏற்படுத்த வேண்டும்...!

அது அந்தத் தலத்தில் மிகவும் நேர்த்தியாக ஒரு காவியச்சுவையுடன் நடைபெறுகிறது....

தேவதேவியை பூமியில் அவதரிக்கச் செய்ய தேவர்கள் வேள்வி நடத்துகிறார்கள்.

அந்த வேள்விக் குண்டலத்திலிருந்து அன்னை பராசக்தி குழந்தையாய்த் தோன்றுகிறாள்.

தோன்றியபோது அவள் காட்சி தந்த தோற்றத்துக்கும் — அவள் முடிவில் ஆற்றிய பணிக்கும் எத்துணை வேறுபாடு!





ஆதியில் குழந்தையாக அவதரித்த போது அன்னையின் பாவங்களில் ஓர் அசாதாரண குளுமை!

ஆம்! நெருப்பிலிருந்து ஒரு தென்றலாக அவதரித்தாள் தேவநாயகி. அவள் முகத்தில் அசாதாரண — அமானுஷ்ய அமைதி. அவளோடு ஏழு தோழி மாதரும் தோன்றினார்கள்.

வேள்வியிலிருந்து அன்னை வெளிப்பட்ட விநாடியிலேயே அந்தப் பூதலத்தில் சீறி நின்ற வெப்பம் தணிகிறது; சுற்றுப்புறமே சோலையாக மாறுகிறது; எங்கும் என்றும் காணாத பசுமை பாரெங்கும் சிறக்கிறது!

அன்னை நடக்கிறாள். அவள் நடையில் நடனம் பிறக்கிறது!

தோழிகளுடன் அன்னை பாடி ஆடுகிறாள். அந்தப் பாட்டும் ஆட்டமும் 'பதஒலி' எனப் பெயர் பெறுகிறது! ('பதஒலி' என்றால் பலவகையான ஒலி அமைந்த நடனம் என்று பெயர்.)

உலகியல் வழக்கப்படி — பூமியில் அவள் தாங்கிய உடலின் பரிணாம வளர்ச்சிப்படி — ஒரு நாள் காலை அன்னை பூப்பெய்துகிறாள்.

பெண்மையின் குறிப்பிடத்தக்க வசீகரமான பருவத்தை அன்னை அடைந்ததும், தோழியர் அருகிலிருக்கும் ஒரு பூஞ்சோலைக்கு அவளை அழைத்துச் செல்கின்றனர்.

அவள் கால் பட்டதும் இருண்டிருந்த சோலை கோடி சூரியப் பிரகாசமாகிறது! மலர்கள் பூத்துச் சொரிகின்றன!

மலர்களின் சிரிப்புக்கேற்ப — மங்கைப் பருவம் அடைந்த தேவி பகவதியும், தோழியரும் இதுவரை ஆடியிராத ஓர் உத்வேக நடனத்தை ஆடுகின்றனர்.

அந்த நடனம்தான் அன்னையின் அவதார நோக்கத்தை நோக்கி செயல்களை இயக்கிவைத்த நடனம்.

ஞானியர் உள்ளத்திலுள்ள அறிவைப் போல் பெருஞ்சுடராய் நந்தவனத்தில் நின்றாடிக் கொண்டிருக்கிறாள் புவனேசுவரி.

விடியாத இரவு விடியத் தோன்றுவதற்கான விழாக்கால வெளிச்சம்போல் அன்னையின் தோற்றம் அண்டங்கள் எங்கும் ஒளி வீசுகிறது. அவள் பாதச் சலங்கை ஒலி பாரெங்கும் பிரணவ கீதமாக ஒலிக்கிறது...

அந்த நாதப் பேரொளியை நோக்கி திரிபுவனங்களும் மயங்குகின்றன.

அச்சமயம் ஒரு புதிய சம்பவமும் நிகழ்கிறது.

ஒளியை நோக்கி வழி தேடுபவர்களும் வருவார்கள்;

மயக்கத்தில் வந்து மடியும் விட்டில் பூச்சிகளும் வருவதுண்டு!

அன்று அப்பொழுது இரண்டுமே நடக்கிறது. அந்த இரண்டும் நடப்பதற்காகத்தானே அன்னை அந்த ஊழி நடனத்தை ஆடிக் கொண்டிருக்கிறாள்...!

இமயத்திலிருந்து வந்த அகத்தியரும் அன்னையின் அருள்பெற ஓடோடி வருகிறார்.

மூர்க்க மோக மயக்கத்திலிருந்த துன்முகன், துர்த்தன் என்ற அசுரர்களும் வருகிறார்கள்.

ஆடும் தேவியின் அருளாசியை யாசித்த அகத்தியருக்குத் தன் கடைக்கண் பார்வையால் கருணையைப் பொழிந்தாள் தேவி.

அசுரர்களோ, அன்னையின் எழிலார்ந்த தோற்றத்தில் மதிமயங்கி நின்றார்கள். அன்னையின் பேரழகைக் காணக் காண, அவர்களுடைய சித்தத்தில் ஒரு பேராசைத் திட்டம் உருவாகிறது.

தம் தலைவனான பாணாசுரனுக்கு நந்தவனத்தில் ஆடும் பேரழகியைப் பற்றிக்கூறி, அவளை அங்கு வரவழைத்து - இந்த எழிலரசியை அவனுக்குத் துணைவியாக்கச் செய்ய வேண்டும் என்ற உந்துதல் அவர்களுடைய உள்ளத்தில் கிளர்ந்தெழுகிறது!

அக்கணமே பாணாசுரனிடம் சென்று தகவல் தெரிவிக்கிறார்கள்.

அதே நேரத்தில் அகத்தியரும் ஒரு முயற்சியில் ஈடுபடுகிறார். கன்யாகுமரியில் அன்னை பிரிந்திருப்பதை அந்த அருந்தமிழ் முனிவரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. சிவனையும் — சக்தியையும் இணைத்து வைத்துத் தரிசித்துப் பேறு பெற விழைகிறார்.

அருகிலுள்ள சுசீந்திரத்தில் எழுந்தருளியிருக்கும் தாணுமாலயனின் சந்நதிக்குச் சென்று வேண்டி தன் கோரிக்கையை வெளிப்படுத்துகிறார்.

தேவதேவன் புன்னகைக்கிறார்.

''அகத்தியா, காலம் வந்துவிட்டதை நாமும் அறிகிறோம். ஆவன செய்கிறோம். நீ உன் குருப்பீடமாம் பொதிகை மலைக்குச் செல்க!'' என்று அருள்வாக்கு அளிக்கிறார் ஈசுவரன்.

ஈசன் குறிப்பிட்ட 'காலம்' எதுவென்று அகத்தியர் அன்று புரிந்து கொள்ளவில்லை!

தேவியைத் திருமணம் புரிய ஈசன் திருவுளம் கொண்டுவிட்டார் என்று பேருவகையுடன் அகத்தியர் பொதிகை மலைக்குச் சென்று விட்டார்.

தேவதேவன் அன்னையின் அவதார நாடகத்தை முடித்து வைக்கத் திருவுளம் கொள்கிறார்.

அனைத்து இயக்கங்களுக்கும் சூத்ரதாரியான சர்வேசுவரன், அந்த நாடகத்தில் ஒரு பாத்திரம் தாமே ஏற்று அந்த தேவ நாடகத்தை நடத்தத் தொடங்குகிறார்.

நாரதரை அழைத்து, தாம் கன்யாகுமரி அம்மனை திருமணம் செய்ய சித்தம் கொண்டு விட்டதைக் கூறி, அன்னையிடம் மணத்தூது சொல்ல அனுப்புகிறார்.

அனுப்பப்பட்டவர், நாரதர் — பல தேவநாடகங்களுக்கு கருவியாகத் திகழ்ந்தவர்!

இட்ட பணி எதுவென்று நாரதருக்குத் தெரியும். பணியை ஏற்று கன்யாகுமரியை நோக்கிப் பயணமாகிறார்.

அதே நேரத்தில் தன் தூதுவர் மூலம் பகவதி அம்மனின் பேரழகைக் கேட்டு, சித்தத்திலே போதை கொண்டு—குமரி முனையை நோக்கிப் பயணம் செய்கிறான் பாணாசுரன்.

அருளும் — இருளும் அன்னையின் சந்நதியை நோக்கி வந்து கொண்டிருக்கின்றன...

(தொடரும்)

## அட்டைப்பட அழகி

கலைக் கல்லூரியில் படிக்கும் மாணவியான குமாரி **புஷ்பா**வுக்கு கலையார்வம் நிறைய உண்டு. முக்கியப் பொழுதுபோக்கு பெயிண்டிங் (வாட்டர்கலர்) செய்வது. தமிழிலும் ஆங்கிலத்திலும் நன்றாக விரிவுரை செய்வார். ஸ்ரீசத்ய சாயி பாபாவிடம் மிகுந்த பக்தி உண்டு. குடம் வைத்திருப்பதற்கான தனிக் காரணம் ஏதும் இல்லை — அது படம் எடுக்கத்தான்!

வண்ணப்படம்: **வி. கே. ராஜாமணி**

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர், ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
துணை ஆசிரியர்கள்: தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி: 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை-600 032.




## குகநாதன் ரசித்தவை...

பிறந்தது. இந்தத் தடவை 5-ம் நெம்பர் பெட் கொடுத்திருக்கீங்க... பயமாயிருக்கு. நர்ஸ்!''

ஃ ஃ ஃ

''சார்! சார்! ஆறும் நெம்பர் கைதி ஜெயிலில் இருந்து தப்பி ஓடிவிட்டான்'' என்று புகார் செய்தான் காவல்காரன்.

'''ஆறு ஓடும்' என்று ஒண்ணாங் கிளாஸில் படித்தது சரியாகப் போச்சு...'' என்றார் ஜெயிலர்!

ஃ ஃ ஃ

இரண்டு குடிகாரர்கள் பேசிக் கொண்டார்கள்:

''என்னுடைய கால்கள் இரண்டும் காணோமே?'' — முதல் குடிகாரன்.

''பாக்கெட்டை நன்றாய் சோதித்துப் பாரடா முட்டாள்!'' — அடுத்த குடிகாரன்.

ஃ ஃ ஃ

ஃ ''உங்க பையன் என்ன கோர்ஸ் படிக்கிறான்?''

''ரேஸ் கோர்ஸ்!''

பேட்டி: திரைஞானி

நான்: உங்களிடம் ஒரு பலவீனம் கவனித்தேன். சர்வதேச இணைப்புள்ள கள்ளக்கடத்தல்காரர்கள் பிடிபடும் போது நீங்கள் உடனே விளம்பரம் செய்து விடுகிறீர்கள். அதுவும் விவரமான விளம்பரம்! இது தவறல்லவா...? சுங்க இலாகா. மேற்கொண்டு நடவடிக்கை எடுக்க முடியாமல் எத்தர்கள் உஷாராகி விடுவார்கள் அல்லவா...?

(சற்றே மௌனம்-லேசாக வழிகிறது)

அவர்: வாஸ்தவம்தான். இவையெல்லாம் பகிரங்கப்படுத்தப்படா விட்டால் நாங்கள் ஒன்றுமே செய்யவில்லையென்று குற்றம் சாட்டப்படுகிறோம்! ஆனால், நீங்கள் சொல்வதுபோல முழு விவரங்களைத் தெரிவிக்காமல் விளம்பரம் செய்வேன்.

ஃ ஃ ஃ

அவர் மனைவி திருமதி அகர்வால் நல்ல பழுத்த இல்லக்கிழத்தி. 'உங்களுக்கு ஏன் இந்த வம்பெல்லாம்?' என்று தன் கணவரை அடிக்கடி கடிந்து கொள்பவர். புகைப்படத்திற்கு 'போஸ்' கொடுக்கவே வெட்கப்பட்டவர்! மற்றபடி அவர்களுக்கு 2 பிள்ளைகள், ஒரு பெண். பெண் ஓவியத்தில் ஈடுபாடு உள்ளவர். 'பாத்திக்' ஓவியம் தெரியும். நடனத்தில் கொஞ்சம் பயிற்சி உண்டு.

# தேவி தரிசனம்

உருவுநீ அருவுநீ உலகத் தனைத்தும்
உயர்ந்திடச் செய்பவளுநீ
திருவுநீ குருவுநீ தோன்றாத் துணையும்
தெளிவும்நீ, பரிவு நீயே!
மருவுநீ மலருநீ மதியும்நீ ஒளியுநீ!
மாசறு செல்வி நீயே!
கருவுநீ விதியுநீ கதியுநீ ஏழையென்
கவலை தீர்த்தரு ளுவாயே!

—கன்யாகுமரி ஸ்ரீபகவதி அம்மன் அஷ்டகம்


சிலை வடிவில் தேவி

**அ**ன்று – அருள் வடிவான ஈசனின் தூதனும் நாரதர் ஒரு பக்கமாகவும்; இருள் மாந்திய வன்நெஞ்சத்துடன் பாணாசுரன் ஒரு பக்கமாகவும் தேடி வந்த லோகநாயகியாம் தேவி பகவதியின் திருத்தலம் நோக்கி...

இன்றும் நேற்றும் நடந்தோடி வந்த கால்கள்தாம் எத்தனை எத்தனை கோடிகள்! அந்தக் கால்கள் பெற்ற தவப் பயன்கள்தாம் எத்தனை எத்தனை..

தேவி பகவதியின் அருள் வேண்டி, யமுனா நதி தீரத்திலிருந்து பகவான் கிருஷ்ணனின் சகோதரனை பலராமனும், அர்ஜுனனும் யாத்திரை வந்ததாகச் சேதி சொல்கிறது– பெரும்புகழ் இதிகாசமான 'மகா பாரதம்.'

சீதையை மீட்க முற்படும் முன்னர் - ஸ்ரீராமர் கன்யாகுமரி அம்மனைத் தரிசிக்க வந்ததாகவும், அன்னையின் அருள்வாக்கு பெற்றே ராமேசுவரத்துக்குச் சென்று அவர் சேதுபாலம் அமைத்ததாகவும் ஓர் 'இராமாயண' செய்தி சொல்கிறது. இலங்கை செல்லும் முன் குமரி அம்மன் தலத்தருகே உள்ள மகேந்திரகிரி பர்வதத்தில் (மேற்குத் தொடர்ச்சி மலையிலுள்ள ஒரு சிகரம்) நின்று பார்த்துத் தான் தென்கடலைக் கடக்கும் திட்டத்தை ஸ்ரீராமர் வகுத்ததாக 'வால்மீகி ராமாயணம்' கூறுகிறது. ஸ்ரீராமர்



# மோனத் தவம் புரியும் மூன்று கடல் நாயகியே!



அமைத்த பாலம் அன்னையின் திருத்தலமான குமரி முனையிலிருந்தே அமைக்கப்பட்டது என்று வடமொழிக் காவியமான காளிதாசனின் 'ரகுவம்ச'த்தில் கூறப்பட்டிருப்பதாக ஒரு செய்தி. 'மணிமேகலை' காப்பியத்தில் உள்ள, 'குரங்கு செய் கூடற் குமரியம் பெருந்துறை' என்ற வரிகளை ஆதாரமாகக் கொண்டு—ஸ்ரீராமரின் வானரப் படைகள் அணைகட்டிய இடம் குமரிமுனைதான் என்றும் கூறப்படுகிறது.

வடநாட்டிலுள்ள 'வாரணாசி' என்ற தலத்தைச் சேர்ந்த சாலி என்ற பெண் ஒழுக்கம் தவறிய தன் பாவத்தைக் குமரிமுனையில் நீராடி அம்மனின் அருள் பார்வையால் போக்கிக் கொண்டாளாம். - 'மணிமேகலை' காப்பியம் சொல்லும் வரலாறு இது.

மாடலன் என்ற அந்தணர் அன்னையைத் தரிசித்துக் குமரிமுனையில் நீராடி அருள் பெற்ற செய்தியை 'சிலப்பதிகாரம்' கூறுகிறது.

—இந்த இதிகாச நாயகர்களும் காவிய நாயகர்களும் மட்டும்தானா...?

வெளிநாட்டிலிருந்து யாத்திரையாக வந்த ஓர் அயல்நாட்டு ஆசிரியர், அன்னையின் திருத்தலம் வந்து தரிசித்துவிட்டு, 'தன் இறுதி நாட்களைத் தெய்வச் சிந்தனையில் ஈடுபடுத்தி ஆன்ம நிறைவு பெற விரும்பும் மக்கள் கன்யாகுமரி தலத்தில் வந்து நீராடிப் புனித அருளைப் பெறுகின்றனர். பெண்களும் இங்கு வந்து நீராடிப் பெறற்கரிய பேறு பெறுகின்றனர். காரணம், இத்தலத்தில் தேவி (பெண் தெய்வம்) அவதரித்திருக்கிறது!' என்று எழுதியிருக்கிறார்.

'அமைதியான தியானத்துக்கு ஏற்ற இடம் இதுதான். என்றென்றும் இப்

**பொன். பாஸ்கரமார்த்தாண்டன்**



புனிதத் தலத்திலேயே தங்கிவிட வேண்டும் என்று என் உள்ளம் விரும்புகிறது' என்று உள்ளம் பொங்கக் கூறினார், 1937-ல் இங்கு வந்த அண்ணல் காந்திஜி.

இப்புனிதத் தலம் நாடி — இங்கு கோயில் கொண்டு அருள் புரியும் அன்னை பகவதியின் கமலப் பாதங்களைத் தேடி நாள்தோறும் எண்ணற்ற மக்கள் கூட்டம் இங்கே திரள்கிறது.

அவர்களுக்காக - அதோ, முக்கடல் முனையில் நின்று மோனத்தவம் செய்யும் குமரி அம்மன் திருக்கோயில் கதவங்கள் கங்குல் கரைந்து கொண்டிருக்கும் அதிகாலைப் பொழுதிலேயே திறக்கின்றன...

இரவு முழுவதும் அன்னை முகம் காணாமல் பாறைகளில் அடித்து மோதிக் குமுறிக் கொண்டிருந்த முக்கடல் (தென்புறத்து இந்துமகா சமுத்திரம் - மேற்புறத்து அரபிக் கடல் - கீழ்ப் புறத்து வங்கக் கடல்) அலைகள் எல்லாம் அன்னையின் கோயில் திருக்கதவங்கள் திறக்கப் பட்டதுமே ஆரவாரித்து ஆனந்த வெறி கொண்டு துள்ளுகின்றன.

அலையலையான பக்தர் கூட்டம் அன்னையைக் காண ஆவேச எழுச்சியுடன் அவள் சந்நிதியில் நிறைந்து நிற்கின்றன.

தீபச் சுடரொளி போன்ற அந்தத் தெய்விகத் திருமுகத்தில் கோடி சூரியப் பிரகாசமாக ஒளிர் விடும் புன்னகை - அனைத்துயிர்களையும் ஆகர்ஷித்துக் கொண்டிருக்கிறது.

அன்னையின் அரிய விசுவரூப தரிசனம் காண எல்லையற்ற ஆர்வப் பெருக்குடன் ஆலயத்தின் வடக்கு வாசல் வழியாகக் கூட்டம் நுழைகிறது.

இத்தலத்தில் கோயிலுக்கு இரண்டு வாசல்கள் உண்டு. வடக்கு வாசல் — கிழக்கு வாசல். ஆனால், கிழக்கு வாசல் ஓர் ஆண்டில் ஐந்து விசேஷ நாட்களில் மட்டும்தான் திறந்திருக்கும். அதாவது - வைகாசி விசாகம், ஆடி அமாவாசை, நவராத்திரி பத்தாம் நாள், திருக்கார்த்திகை, தை அமாவாசை — ஆகிய ஐந்து நாட்கள். மற்ற நாட்களில் சாத்தப் பட்டிருக்கும். அதற்கு ஒரு சுவையான காரணம் சொல்லப்படுகிறது: 'கிழக்கு வாசல் கடலை நோக்கி அமைந்துள்ளது. அது திறக்கப்பட்டிருந்தால் அதன் வழியே அன்னையின் மூக்குத்தி ஒளி கடலில் வெகுதூரம் வரை சுடர்விட்டுத் தோன்றுமாம்! ஒருமுறை கடலில் கப்பலைச் செலுத்திசென்று கொண்டிருந்த மாலுமி ஒருவர், அன்னையின் அந்த மூக்குத்தி ஒளியைக் கண்டு-அதனை ஒரு 'கலங்கரை விளக்கம்' என்று நம்பி கரையை நோக்கிக் கப்பலைச் செலுத்தத் தொடங்கினாராம். கரையை யொட்டியுள்ள பாறையில் மோதி அக்கப்பல் நொறுங்கி விட்டதாம். அப்படியொரு சம்பவம் மீண்டும் நிகழ்ந்துவிடக் கூடாது என்று



தென் முனையில் புனித நீராட்டு



அம்மனுக்கு தீர்த்தம் வருகிறது

அஞ்சியே எச்சரிக்கையாகக் கிழக்கு வாசலை மூடி வைத்திருக்கிறார்களாம்!' இதைப்பற்றிக் கோயில் பூஜை செய்யும் 'மேல்சாந்தி' வாசுதேவன் போற்றி யிடம் விசாரிக்கிறோம்.

''அம்மன்' மூக்குத்தியில் ஒளிமிக்க மாணிக்கம் பொருத்தப்பட்டுள்ளது என்கிறார்களே, உண்மைதானா?''

அதற்கு அவர் பளிச்சென்று பதில் கூறுகிறார்: ''நாங்கள்லாம் தெய்வ ரகசியத்தை வெளியே சொல்லக் கூடாதுன்னு சத்தியம் செய்திருக்கிறோம். அதனால் சொல்லக் கூடாது.''

இந்தக் கட்டுப்பாட்டைக் கண்டு வியக்கிறோம். இத்தலத்தில் இறைபணியில் ஈடுபட்டிருப்போரின் பூஜா முறையிலும், பக்தர்கள் கடைப்பிடிக்க வேண்டிய முறைகளிலும் சிறந்த கட்டுப்பாடு காக்கப்படுகிறது. கோயிலினுள் பக்தர்கள் மேல்சட்டை அணிந்து செல்லக் கூடாது என்ற கட்டுப்பாடு குறிப்பிடத்தக்கது.

பூஜா காரியங்கள் செய்யும் 'மேல்சாந்தி' — 'கீழ்சாந்தி' என்னும் அர்ச்சகர்கள் மிகவும் சுத்தமாகவும் - தம்மைப் பிறர் தீண்டுவதால் ஏற்படும் தீட்டிலிருந்து காப்பாற்றிக் கொள்ளும் எச்சரிக்கையுணர்வில் மிகுந்த கவனத்துடனும் இருக்கின்றனர்.

'மேல்சாந்தி' — 'கீழ்சாந்தி' என்ற பெயர்கள் கேரளக் கோயில்களைச் சார்ந்த அர்ச்சகர்களைக் குறிக்கும் பெயர்கள்.

இத்தலத்திலும் கேரள 'தந்த்ர சமுச்சய விதி' என்னும் முறைதான் பூஜைக்கு நிர்ணயம் செய்யப் பட்டிருக்கிறது. 'பரசுராமர் செய்த ஏற்பாடு இது' என்றார் 'மேல்சாந்தி' நாராயண போற்றி. அர்ச்சகர்களில் முதல் பிரிவினர் 'மேல்சாந்தி'யாவர். அம்மனுக்கு பூஜை செய்வது அம்மனை அலங்கரிப்பது எல்லாம் 'மேல்சாந்தி'யரின் கடமைகள். அம்மன் அபிஷேகத்துக்கு நீர் கொண்டு வருவது — விளக்கு போடுவது—மடப்பள்ளி பணி புரிவது — பல்லக்கு தூக்குவது போன்ற துணைப் பணிகள் புரிபவர் 'கீழ்சாந்தி.' 'மேல்சாந்தி' வேதபாராயணம் செய்திருக்கவேண்டும். 'கீழ்சாந்தி' அப்படி அல்ல! இவர்கள் உடுப்பி துளு பிராமணர் இனத்தை சேர்ந்தவர்களாம். 'சிவள்ளி பிராமணர்' என்றும் அழைக்கப்படுவார்களாம் இவர்கள்!

'தாம் தெய்வத்தோடு ஐக்கியப்பட்டவர்கள்' என்ற உணர்வு துலங்க 'மேல்சாந்தி'யினர் மற்றவர்களிலிருந்து அடக்கமாக ஒதுங்கிப் பழகு முறை ஒருவித பவித்ர உணர்ச்சியை உருவாக்குகிறது. அவர்கள் பிரசாதத்தைக்கூட கையில் தொட்டுத் தருவதில்லை. இலையில் மடித்து, எட்ட நின்றவாறே கையில் போடுகிறார்கள்.

'மேல்சாந்தி'யின் தோற்றம்-அடக்கமான முறை போன்ற அம்சங்கள் மட்டுமல்லாது, இறைவியின் கருவறை அமைந்துள்ள மணிமண்டப பராமரிப்பிலேயே ஒரு தெய்விகக் களை பரிமளிக்கிறது. அம்மண்டபத்துள் மின்விளக்



இரு தேவியருடன் கூடிய உச்சிஷ்ட கணபதிக்கு ஆலயம் நிறுவி நடந்த அறுபது ஆண்டுகளாகப் பூஜையும் ஹோமமும் நடத்தி வருகிறார் தஞ்சையைச் சேர்ந்த ஸ்ரீ சுந்தரேச சர்மா. உச்சிஷ்ட கணபதி சக்திதேவதை யாகையால் **ராகுகால பூஜையும்** நடக்கிறது இங்கே!

**—என். வி. ராகவன்**

## மனம்விட்டுப் பேசுகிறோம்

SABENA

'இதயம் பேசுகிறது' இதழில் (25-6-78) 'SABENA' பற்றி பிரசுரிக்கப்பட்ட தகவல் தவறு.

'SABENA என்னும் விமான நிறுவனம் ஜப்பானிய நாட்டு விமானம் அல்ல; பெல்ஜியம் நாட்டு தேசிய விமான நிறுவனம். 'Belgian World Airlines' என்பது அதன் விரிவான பெயர்.

—எல். ஆர். மதுசூதன்

'SABENA' என்பது ஜப்பானியநாட்டு விமானம் என்று அக்குறிப்பில் வெளியாகி யிருக்கும் தகவல் தவறுதான். அந்த தவறு நேர்ந்தமைக்கு வருந்துகிறோம்.

பெல்ஜியம் நாட்டைச் சேர்ந்த இந்த 'SABENA' விமானம் ஒன்றிற்கு ஒரு முறை அசம்பாவிதம் ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து அதன் பெயரை வைத்து, 'Such a Bloody Experience Never Again' என்று வேடிக்கை செய்வதுண்டு! அதை நான் என் 'இதயம் பேசுகிறது இஸ்ரேலிய பயணக் கதை' யிலும் குறிப்பிட்டிருக்கிறேன்.

மணியன்



பொருத்தப்படவில்லை. தூய்மை எளிமை இரண்டும் துலங்குகிறது. அந்த சந்நிதியில் நின்று அம்மனைத் தரிசிப்பதே ஒரு சுகானுபவமாக இருக்கிறது.

அதிகாலை நாலரை மணிக்கு நிகழும் திருப்பள்ளியெழுச்சி என்னும் விசுவரூப தரிசனத்தின்போது தீபாராதனை கிடையாது. ஆனால் அன்னையே தீப ஜோதியாய் ஒளி விடுகிறாள்.

''இங்கே விசுவரூப தரிசனம் ரொம்ப விசேஷம். அம்மன் தபசு செய்து கொண்டிருக்கிறாள். இராக்கால தபசு ரொம்ப தீட்சண்யமானது. அந்த தபசு சக்தியோட அம்மனைத் தரிசிக்கும் பாக்கியம் ரொம்ப விசேஷம்!'' என்கிறார் நாராயணன் போற்றி.

அந்த அரிய பாக்கியம் கிடைத்த பேற்றை நினைத்து கசிந்துருகி அன்னையின் திருமுகம் நோக்கி நிற்கிறேன். சிரசிலே கிரீடம் – காதில் காதணி – மூக்கில் ஒளிச்சுடர் மின்னும் மூக்குத்தி- கழுத்தில் மாலை – வலது கை ஜெபமாலை. ஏந்த – இடது கரம் அபயஹஸ்தமாக- அழகே ஓர் உருவாய் எழிலே ஒரு சம்பிரமாய் கனிவே ஓர் அலங்காரமாய் அன்னை மின்னுகிறாள்.

அந்த அற்புத வடிவைக் கண்டு பரவசம் பொங்கிய நிலையில் அருகில் நின்ற ஒரு கவிஞர் (க. சு. மணியம் என்று பின்னர் தெரிந்தது) அக்கணமே உணர்ச்சிப் பிரவாகமாகப் பாடுகிறார்:

''பொன்னடியைத் திரை கழுவ
புகழ்முடியைப் பிறை தழுவ
தென்னெல்லைக் காத்து நிற்கும்
தேவியே குமரியம்மா!''

வணங்கி நின்ற கூட்டமே புல்லரித்து நிற்கிறது.

'தென்னெல்லைக் காத்து நிற்கும் குமரியம்மா! நீ ஜெபமாலை ஏந்தி தவக்கோலம் பூண்டதும் எங்களைக் காப்பதற்கே அல்லவா...?'

நம் நினைவு புராண காலத்தில் நிகழ்ந்த அந்த சம்பவத்தை நினைக்கிறது.

அந்தச் சம்பவம் மட்டும் நிகழ்ந்து - அன்னை தவக்கோலம் பூண்டிராவிட்டால் பூமியேது, அதோ, பூரித்து ஆர்ப்பரிக்கும் கடல்கள் ஏது, காற்று ஏது, கனல் ஏது, கர்மங்கள் ஏது...?

(தொடரும்)

கமர்ஷியல் பிரிண்டிங் அண்ட் பப்ளிஷிங் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிடுபவர் ப. அண்ணாமலை. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் ஆசிரியர்: மணியன்.

துணை ஆசிரியர்கள்: தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.

முகவரி: 44-A, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை - 600 032.



கொடுமையால் கணவனைப் பிரிந்து வாழ்ந்து வருபவள். அவளுக்கு இளைஞன் மதுவைக் கண்டவுடன் ஒரு மயக்கம் பிறக்கிறது. ஆனால் மதுவுக்கு மூன்றாவது வீட்டுக்காரி ஸ்ரீதேவி (சீமா) மீதுதான் காதல். அவளையே சுற்றிச் சுற்றி இவன் வர; இவனைச் சுற்றிச் சுற்றி அன்னம்மே வருகிறாள். ஒரு நாள் மதுவுக்கு 'கள்' வாங்கிக் கொடுத்து தன்னுடைய தாபத்தைத் தணித்துக் கொள்கிறாள் அன்னம்மே!

காட்டில் மூங்கில் வெட்டச் சென்ற ஃபரீத் உன்னிக்கும், வியாபாரி கோபாலுக்குமிடையே பயங்கர மோதல் ஏற்படுவதாகக் கேள்விப்பட்ட மது அங்கு விரைகிறான். ஃபரீத் உன்னிக்கு வைத்ததுப்பாக்கிக் குறிக்கு மது பலியாகிறான்.

மூங்கிலாலான படகில் அவனது உடலைகொண்டு வருகிறார்கள். சீமா காதலன் இறந்துவிட்டான் என்று அழுகிறாள். ஆனால் ஷீலாவும் அழுகிறாள், வெளியே சொல்ல முடியாத காரணத்திற்காக!

—சிவமகன்



# தேவி தரிசனம்

## மோனத் தவம் புரியும்
## மூன்று கடல் நாயகியே!

## 4

தானன்றி வேறே தனித்தெதுவும் இல்லாதாள்
யானன்றி என்னுடைய தென்னிரண்டை —'நானன்றி
என்னதன்றிப் பின்னே'தென் எந்தாய் குமரிமுனைக்
கன்னல் மொழிக் கன்னி எனக் காண்!

—சாதுராம் சுவாமிகள்

"இறந்தவர்களை நீங்கள் எங்களுக்குக் காட்ட முடியுமா?'' என்று ஒரு கேள்வியை ஒரு சீடன் பகவான் ரமண மகரிஷியிடம் கேட்கிறான்.

அதற்கு அவர் சொன்ன பதில்: ''உன் பந்துக்களை அவர்கள் பிறப்பதற்கு முன் உனக்குத் தெரியுமா? அவர்கள் இறந்த பிறகு மட்டும் அவர்களைத் தெரிந்து கொள்ள முயல்வானேன்...?''

ஃ ஃ ஃ

இன்னொரு முறை சீடன் வேறொரு கேள்வியை அவரிடம் கேட்கிறான்:

''நான் யார்...?''

''எங்கே நீயே தேடிக் கண்டுபிடி, பார்க்கலாம்!'' என்கிறார் பகவான் ரமண மகரிஷி அருள் சிரிப்புடன்.

சீடன்: எனக்குத் தெரியவில்லையே!

மகரிஷி: நன்றாக ஆலோசித்துப் பார்; 'எனக்குத் தெரியவில்லை' என்று சொல்வது யார்? நீ சொல்கிற இந்த 'எனக்கு' எது? அந்த 'நான்' யார்...? உனக்குத் தெரியாதது எது?

சீடன்: என்னில் உள்ளது - யாரோ, எதுவோ தெரியவில்லை!

மகரிஷி: யாரோ என்பது யார்? யாரிடத்தில் உள்ள யார்?

சீடன்: ஏதோ ஒரு சக்தியோ, என்னவோ?

மகரிஷி: தேடிப் பார்!

சீடன்: நான் ஏன் பிறந்தேன்...?

மகரிஷி: பிறந்தது யார்? உன் கேள்விகளுக்கெல்லாம் அதுவே பதில்.

சீடன்: அப்படியானால் நான் யார்?

மகரிஷி: நீயே சொல்ல வேண்டும், நீ யார் என்று...?

சீடன்: நான் என்ன முயன்றாலும் 'நான்' என்பது எனக்குப் பிடிபடவில்லை. அது இன்னதென்று வெளிப்படையாக உணரக்கூட முடியவில்லை.



பகவான் ரமண மகரிஷி

மகரிஷி: 'நான்' என்பது உணரப்படவும் முடியவில்லை என்று சொல்கிறவன் யார்?

சீடன்: 'நான் யார்?' என்று கேட்பதற்குப் பதிலாக, 'நீங்கள் யார்?' என்று கேட்கலாமா?

மகரிஷி: நீ எம்மாதிரி விசாரணை செய்தாலும், கடைசியில் ஏகமாம் தானாகிய ஆத்மாவைத்தான் அடைய வேண்டும். 'நான்' 'நீ' 'குரு' 'சீடன்' —இந்த வித்தியாசங்கள் எல்லாம் அறியாமைக்கு அறிகுறி. இருப்பது அகத்தின் சொரூபமான பரமாத்மா ஒன்றுதான். மற்றவிதமாகப் பாவிப்பதெல்லாம், தன்னைத்தான் ஏமாற்றிக் கொள்வதாகும்!

ஃ ஃ ஃ

இந்த இரண்டு கேள்விகளுக்கும் பகவான் ரமணர் பதில் அளித்துள்ள முறையில் ஒரு தெய்வீக ஞானவிளக்கம் வெளிப்படுகிறது.

ஓர் உயிர் பிறப்பதற்கு முன் எங்கிருந்து வருகிறது என்று தெரிந்து கொள்ள முடியாத அளவு குறுகிய ஞான எல்லை கொண்டவன், மனிதன். வந்தது தெரியாதவன் போவது எங்கே, என்பதை மட்டும் வீணாய் ஆராய்ந்து கொண்டிருப்பானேன்...? தன் தகுதிக்கு மீறிய-தன்னால் உணர முடியாத விஷயங்களைப்

பொன். பாஸ்கரமார்த்தாண்டன்

பற்றி விசாரப்படுவது அவன் வேலையல்ல என்று மனிதனுக்கு உணர்த்துவதற்காகத்தான், பகவான் அப்படி முதல் கேள்விக்குப் பதில் சொன்னர்.

இரண்டாவது கேள்வி, 'நான் யார்?' என்று தன்னைப் பற்றிக் கேட்கப்படுவது. தனக்குத் தேவையற்ற செய்தியைப் புரிந்து கொள்ள விரும்பியதைக் கட்டுப் படுத்திய பகவான், தன்னை உணர்ந்து கொள்ள விரும்புபவனுக்கு விளக்கம் சொல்கிருர்.

அந்தப் பதிலேயும் அவர் உடனடியாகச் சொல்லி விடவில்லை. கேள்வி மேல் கேள்வியாய், சங்கிலித் தொடராகக் கேள்வி கேட்டுவிட்டுத்தான் முடிவில் பதில் சொல்கிருர்.

ஏன் அப்படிச் செய்தார் பகவான்?

எதையும் உடனடியாக வெளிப் படுத்துவதால் அதன் அருமையைப் புரிந்து கொள்ள முடியாது. அந்த அரிய செய்தி ஆழமாகவும் பதியாது. எதையும் பெறுமுன், மனிதன் அதற்காகத் தேட வேண்டும்; தேடியலேந்த பின் கிடைக்கும் பொருளேத்தான் மக்கள் அரியதாகப் பேணுவார்கள். அதைப்போல் துருவித் துருவி தேடிப் பெறும் ஞானம்தான் ஆழமாக மனத்தில் பதியும். அதன் மகிமையும் உணரப்படும்.

ஃ ஃ ஃ

**சா**தாரண ஸ்தூல பொருட்களை அப்படி வருந்தித் தேடுவது தேட்டை அல்லது வேட்டையாகும்! ஞானத்தைப் பெற தேடித் தேடிக் கற்க வேண்டும்; அல்லது உயர் ஞானிகளிடம் அல்லது குருவிடம் கேள்வி கேட்டு கேட்டு கேள்வி ஞானமாக அதைப் பெற வேண்டும்.

சாதாரண ஞானத்துக்கும் கல்வி கேள்விகளுக்கும் அப்பாற்பட்டு, அறிவதற்கு அரிதாய், புலன்களுக்கு அடங்காததாய், பொருள்களுக்குப் புதிராய், வேதங்களுக்கு விஞவாய், ஞானங்களுக்கு மயக்கமாய் இருக்கும் மெய் ஞானப் பொருளான இறைதத்துவத்தை —இறையருளே — அடைய, சாதாரண தேட்டையோ, கல்வி கேள்வியோ போதுமா?



மேல்சாந்தி நாராயண போற்றி

வாசுதேவன் போற்றி,

கீழ்சாந்தி

இல்லே. இறைவனே அறிய ஆத்மாவை ஒருமுகப்படுத்தும் உன்னத தவம் புரிதல் வேண்டும்.

ஃ ஃ ஃ

**இ**தைப் புரிய வைக்கத்தான் மூன்று கடல் நாயகியாம் அன்னை பகவதி மோனத்தவம் புரிகிருளோ...?

ஆம்! ஈசனுக்குள் தான் சக்தி சொரூபமாக அடங்கியிருந்தாலும், அந்த சக்திக்குள் ஈசன் தத்துவ சொரூபமாக இணைந்திருந்தாலும் — இறை என்ற ஈசனை கண்டுணர தான்கூட தவமியற்றல் வேண்டும் என்று அன்னை கூருமல் கூறித் தவமிருக்கிருள், குமரிமுனையில்!

ஆனால், ஞானப் பெருநிலை உணர்த்தி, மோனமாய் நின்று அன்னை இயற்றும் அருந்தவம், தவம் என்ற பெருந்தகை மைக்கு இலக்கணமும் விளக்கமும் காட்டும் தவம்.

நாடு துறந்து, நற்கடன் துறந்து, நலிவு எட்டா வெளி சென்று இயற்றும் சாதாரண தவம் அல்ல; அன்னை இயற்றும் அந்தத் தவம்!

அவள் இயற்றும் அந்தத் தவம், அனைத்துயிருக்கும் அண்ட கோடிகளுக்கும் ஒரு தவம் செய்முறையினை விளக்கும் தவம்.

அந்த விளக்கங்கள்தான் என்ன?

அந்த விளக்கங்களில் ஒன்ருகத்தான் அதோ — அந்தக் குமரிமுனையில் அன்னையின் சந்நிதியில் அனவரதமும் அத்தனைப் பக்திப் பெரும் கூட்டம்

—அவர்களின் கண்ணீர்... அவர்களின் துயரக் குரல்கள்... பிரார்த்தனைகள்...

ஆம்! அங்கே அன்னை இயற்றும் தவத்தின் முதல் விளக்கமாக —முதல் அம்சமாக அவளின் அருட்பெரும் கருணைதான் திகழ்கிறது.

அருள் வேண்டி இறைவனை நோக்கி வேண்டுவது மட்டும் தவம் அல்ல; தன்னை அண்டினோரிடம் கருணை காட்டி அவரவர்களுடைய வேண்டுகோளை நிறை வேற்றுவதும் தவத்தின் ஓர் அம்சம் என்று உணர்த்துகிருள் அன்னை.

கருணை வேண்டும் தவமும், கருணை செய்கிற அருளும் ஓரிடத்தில் இணைந்தி ருப்பதுதான் உயர் தவம்!

அதற்கு விளக்கமாக—

அன்னையின் சந்நிதியில் அதிகாலை முதல் அந்திப்பொழுதின் எல்லைவரை அருட்கருணையானதுபுனலாய்ப்பொங்கிக் கொண்டிருக்கிறது. அதைப் பெற, எம் அன்னையின் திருக்கோயிலில்தான் வேளை தவறாமல் விதம்விதமாக எத்தனை எத்தனை பூஜைகள்... மாதம் தவறாமல் எத்தனை எத்தனை திருநாட்கள்!

அதிகாலையில் விசுவரூப தரிசனம் ஆனதும், மாலைகள் களையப்பட்டு அன்னையின் அபிஷேகத்திற்கு ஆயத்த மாகிறது.

அபிஷேக தீர்த்தம் அங்கே கோயிலுக்குள்ளேயே இருக்கும், 'பாதாள கங்கை' என்னும் கிணற்றி லிருந்து மிகவும் பயபக்தியுடன் — 'கீழ்சாந்தி'யால் கொண்டு வரப்படு


கருணைவரம் வேண்டி

கிறது. சந்நிதிக்கு முன்புறமிருக்கும் தட்டி மண்டபத்தின் ஒரு பக்க வாசல் வழியே சென்றால் ஒரு பாதாள வழி அமைந்திருக்கிறது. அந்த வழியே கீழே இறங்கிச் சென்றால், அங்கே தென்படும் கிணறுதான் புனிதமான 'பாதாள கங்கை.' கங்கையே அன்னையின் அபிஷேகத்துக்காக அங்கே ஊற்றெடுப்பதாக ஐதீகம். அது மிகவும் புனிதமாகப் போற்றிக் காக்கப்பட்டு வருகிறது. 'கீழ்சாந்தி போற்றிமார்கள்' தான் தூய்மையாக அங்கு சென்று குடங்களில் அபிஷேக தீர்த்தம் கொண்டு வருகிறார்கள்.

அபிஷேகம் ஆனதும் 'மேல்சாந்தி' அலங்காரம் செய்கிறார். சந்தனக் காப்பால் எழிலுருவம் அமைத்து, பாவாடை தாவணி அணிவித்து பேரழகுத் தெய்விகக் கன்னியாக— அன்னையாக அலங்கரிக்கிறார் 'மேல்சாந்தி.'

ஆறரை மணிக்கு காலசந்தி பூஜை நடக்கிறது.



ஆறே முக்கால் மணிக்கு ஸ்ரீபலி பூஜை. அதாவது, காலசந்தியில் அன்னைக்கு நைவேத்தியமாகும் வெண் பொங்கல் பிரசாதத்தைப் பரிவாரத் தேவதைகளுக்கும் படையலிடுவது. அம்மனின் கருவறையைச் சுற்றியும், ஸ்ரீபலி மண்டபத்திலும் அந்தப்

பரிவாரத் தேவதைகள் அமர்ந்திருப்பதாக ஐதிகம். பெஹரகாளி, மகாகாளி, விஜிஜா, மந்தமாருதி, விந்திய வாகினி, சுப்ரபா, சிம்ஹவஹ்ரா, ஜெய்க்க மதனி என்று நாமம் கொண்டவை இந்த பரிவாரத் தேவதைகள்.

பின் எட்டு மணிக்கு 'பன்னிரடி பூஜை.' அதாவது நம் நிழல் பன்னிரண்டு அடி நீளம் இருக்கும் நேரத்தில் செய்யப்படும் பூஜை இது. வெண்பொங்கல் — பாயசம் இவை இந்தப் பூஜையின் போது படைக்கப்படும் நைவேத்தியம்.

10 மணிக்கு கும்பாபிஷேகம் ஆகி மீண்டும் அலங்காரமாகும். அதன் பின் பதினொன்றரை மணிக்கு உச்சிகால பூஜை. பொங்கல், மஞ்சள் பருப்பு குழம்பு கொண்ட நைவேத்யம். பதினொன்றே முக்காலுக்கு ஸ்ரீபலி.

இப்படியே மாலை ஐந்து மணிக்கும், ஆறு மணிக்கும் (சாயரட்சை), எட்டரை மணிக்கும் (அர்த்தஜாமம்) பூஜைகளும், ஸ்ரீபலி பூஜைகளும் நிகழும்.

எட்டரை மணி அர்த்த ஜாமத்தில் ஓர் அபூர்வ நிகழ்ச்சி அமைந்திருக்கிறது. கருவறைக்கு முன்பக்கமாக இருக்கும் தட்டிமண்டபத்தில், அப்பூஜையின் போது, அம்மனை எழுந்தருளச் செய்து ஒரு நாற்காலியில் அமரச் செய்கிறார்கள். நாற்காலியில் இருக்கும் அம்மனை நாதஸ்வரக்காரர்கள் வலமாக சுற்றி வந்து வாசிக்கிறார்கள். கலைஞர்களின் கலைபூஜை இது!

அதன்பின் ஏகாந்தம்! அதாவது அன்னை தனிமைத் தவத்தில் ஆழ்ந்துவிடும் பூஜை. நாதஸ்வரத்தில் 'நீலாம்பரி' வாசிக்க அன்னையின் ஏகாந்த பூஜை நிறைவு பெறுகிறது.

இந்த பூஜைகளை நிறைவேற்றுவதில் பெறும் ஒரு மகத்தான தெய்விகப் பலனைப் பற்றி 'மேல்சாந்தி' நாராயண போற்றி, "இந்த பூஜைகளில் ஏதாவது ஒன்றில் தொடர்ந்து தவறாது 41 நாட்கள் கலந்து அம்மனை சேவித்தால், அந்தப் பக்தருக்கு சகல சித்தியும் கிடைக்கும்!" என்று கூறுகிறார்.

இலங்கையிலிருந்து வெளிவரும் ஓர் ஏட்டில், 'கன்யாகுமரி அம்மனுக்கு வெள்ளை ஆடை அணிவித்து, வெள்ளை புஷ்பத்தால் அர்ச்சனை செய்து, பால் பாயசம் நைவேத்தியம் செய்தால், அபூர்வ பலன்கள் சித்திக்கும்' என்று எழுதப்பட்டிருப்பதாக, இலங்கையிலிருந்து வந்த ஒருபக்தர் கூறி, அதன்படி பூஜை செய்துவிட்டுத் திரும்புகிறார்! தம் தம் கோரிக்கைகள் நிறைவேற, பாவாடை சாத்துதல், பட்டு சாத்துதல், சந்தனக் காப்பு செய்வித்தல், குங்கும



அபிஷேகம் செய்தல், பஞ்சாமிர்த அபிஷேகம் செய்தல் போன்ற எண்ணற்ற பூஜைகள் செய்து அருள் பெறுகின்றனர், பக்தர்கள்.

—இப்படி பல்வேறு முறைகளில் பூஜித்து மகிழும் பக்தர்களுக்கு அருள் தரும் கருணை செய்து உயர் தவம் செய்வதோடு,

இந்த பூவுலகம் உய்ய இன்னுமொரு மகிமையையும் தம் அவதாரத்தில் நிகழ்த்திக் காட்டி, தம் தலத்திலேயே ஒரு தர்மத்தையும் நாட்டினுள் அன்னை.

**(தொடரும்)**

தி இதயம் பிரிண்டர்ஸில், அச்சிடுபவர், ஜி. எம். குளத்து.
இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர் : மணியன்.
துணை ஆசிரியர்கள் : தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி : 98, மவுண்ட் ரோடு, தபால் பை எண் 1159, கிண்டி, சென்னை- 600 032.




தோற்றம்
1919

மறைவு
1977

"இனிமையும் அருளும் முகமதில் மிளிர,
கனிந்திடும் கருணை அகமதில் தவழ,
எளியோர் நிலையை என்றுமே புரிந்து,
அண்டின வர்க்கு அன்புடன் ஈந்து,
உழைப்பால் உயர்வு தழைத்திட வந்தே,
T.A.S. கம்பெனியின் ரத்தினமாய் ஒளிர்ந்து
பெரியவர், என்றே பலரும் புகழ,
வையகம் நீத்தே வானகம் திகழும்,
ஆறுமுகம் என்ற அரும்பெயர் உடைய
அய்ய நாடார் அருமைப் புதல்வ!
வெய்யவன் உலகில் உளநாள் வரையில்
ஐயனே! உம்மை மறவோம் நாமே!"

சென்ற ஆண்டு எம்மைவிட்டுப் பிரிந்து,
ஆருத்துயரில் ஆழ்த்தி, வானுலகு எய்திய,

## உயர்திரு T.A.S. ஆறுமுக நாடார் அவர்களை

(பார்ட்னர் T.A.S. ரத்தினம் பிரதர்ஸ் & S.R. ஞானம் & கோ,
உயர்தர பட்டணம் பொடி தயாரிப்பாளர்கள், சென்னை.)

நினைவு கூர்ந்து அஞ்சலிக்கிறோம்.

T.A.S. ராமமூர்த்தி
பார்ட்னர் T.A.S. ரத்தினம் பிரதர்ஸ் & S.R. ஞானம் & கோ,
(S/o T.A.S. ஆறுமுக நாடார்)
மற்றும் குடும்பத்தினர்





# மோனத் தவம் புரியும் மூன்று கடல் நாயகியே!

## தேவி தரிசனம்

### 5

அம்பா புரியில் அவளே தாய் வைஷ்ணவி யாம்
கம்பா நதிக்கரையில் காமாட்சி — கொம்பால
வாயில் மீனாட்சி வருணையில் விசாலாட்சி
கோயில் குமரிக் கன்னி கூறு.

தாய்களில் எந்தத் தாய் உயர்ந்தவள்...?

'தாய்மையே தெய்விகமானது! இதில் உயர்ந்தது, சாதாரணமானது என்ற பேதம் உண்டா?' என்று கேட்கத் தோன்றலாம்.

ஒருவகையில் உண்டு.

அதாவது; தாய்மையென்னும் தெய்விகத்தில் மனிதத்தன்மை கலந்திருப்பது சாதாரண வகை தாய்மை. தன் உடம்பினுல் — உதரத்தால் குழந்தைப் பேறு அடைந்து, அந்தக் குழந்தைகளுக்காக மட்டும் வாழ்வது மனிதத் தன்மை கொண்ட தாய்மை. இந்தத் தாய்மையில் தன் மக்களுடைய நலனே பிரதானம் என்ற லோகாயத சிந்தனே—

சுயநல உணர்வு கலந்திருக்கும். அதனுல் இது இரண்டாம்தரத்து தாய்மைதான்.

ஆனுல், தன் ஊனிடத்து மகப்பேறு கொள்ளாமல் — அல்லது அப்படி மகப்பேறு கொண்டாலும் அந்த உணர்வுக்கு அப்பாற்பட்டு —

உலக மக்கள் அனைவரையும் குழந்தைகளாகப் பாவித்து—அவர்களைச் சம அன்புடன் போஷித்து—காத்து—பராமரிக்கும் தாய்மை உன்னதமானது; புனிதமானது.

பத்துக் குழந்தைகள் பெற்ற ஒரு சாதாரண தாயைவிட — கன்னியாகவே இருந்தாலும் பல குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கும் ஆசிரியை உயர்ந்த தாய்; ஆசிரியர் உயர்ந்த தந்தை. அதேபோல் தான் பெருத மக்களுக்காகப்



பொன். பாஸ்கரமார்த்தாண்டன்



பரிவுடன் உடற்பிணி சிசுருக்ஷை செய்யும் மருத்துவப் பெண்மணி உயர்ந்த தாய்; மருத்துவர் உயர்ந்த தந்தை.

அனைத்து மக்களையும் அருட்பார்வையால் சமநிலையில் காணும் போது, சாதாரண உலகியல் தாயே—செய்யும் பணியால் தெய்விகத் தன்மை பெறுகிறாள்.

ஆம்! பேதமின்றி, சுயநலமின்றி அனைவரையும் சமநிலையில் வைத்து அருட்பணி புரிவதில்தான், தெய்விகம் இருக்கிறது — தெய்வம் பேசுகிறது.

—இந்த அருளும் கருணையும்தான் உண்மையான தாய்மை.

அதைத்தான் தென்முனையில் நின்று, திசை எட்டுக்கும் உணர்த்திக் கொண்டிருக்கிறாள், எம் அம்மை தேவி கன்னிப் பகவதி.

இந்த உலகம் அவள் உதரத்தால் பிறந்ததல்ல. அவள் ஊனுக்கும் உதரத்துக்கும் அப்பாற்பட்டவள்! தன் உணர்வால் உலகனைத்தையும், உயிர்க் கோடிகள் யாவற்றையும் உருவாக்குகிறாள்; காக்கிறாள்; அழிக்கிறாள்.

அவள் முன் எல்லாரும் சமம்; எல்லாருக்கும் அவள் சொந்தம்!

குமரி அம்மன் ஆலய மேலாளர் வடிவேல் முருகன் ஒரு தகவலைச் சொன்னார்: அங்கு வாழும் மீனவர்களுக்குக் குமரி அம்மன் பேரில் தீவிரப் பற்றுதல் உண்டாம். அம்மன் தம் இனத்தில் அவதரித்தவள் என்று பாரம்பரியமான நம்பிக்கை அவர்கள் மத்தியில் இருக்கிறதாம். அவர்களுக்கென்று, இன்றும் கோயிலில் சில தனிப்பட்ட மரியாதைகள் நடைமுறையில் உள்ளனவாம்.

இத்தனைக்கும் அவர்களில் பெரும்பாலோர் இப்போது கிறித்துவமதத்தைத் தழுவி அதன் வழிபாட்டு முறையின்படி ஒழுகி வருபவர்கள். இருப்பினும் இன்றும் அம்மன் கோயில் திருவிழாவைச் சார்ந்த கொடியேற்றத்துக்குக் கயிறு தயாரித்துக் கொடுப்பது அந்தக் கிறித்துவ மீனவர்கள் தாம்! தேரோட்டத்தின் போது அவர்கள்தாம் முன்னின்று தேர்வடம் பிடிக்கும் பாத்தியதைக் கொண்டிருக்கிறார்களாம்! அவர்களுக்கு கோயிலில் இருந்து 'கட்டிகள்' (பொங்கல் சாதக் கட்டிகள்) கொடுக்கப்படுகின்றன. பிரசாதமாக அளிக்கப்படும் குங்குமம், சந்தனம் ஆகியவற்றை நெற்றியில் தரித்துக் கொள்கிறார்கள் அவர்கள்.

ஆம்! அன்னையின் சந்நிதியில் 'இனங்கள் ஏது - மதங்கள் ஏது?' அவள் பார்வையில் ஓராயிரம் உறவுகள் ஒன்றுகின்றன; ஒன்றை ஒட்டி ஓராயிரம் உறவுகள் இணைகின்றன.

அதோ! அவள் ஆலயப் பிரகாரத்தில் 'கன்யா போஜனம்' நடக்கிறது. இது ஒரு விசேட பிரார்த்தனை நற்பணி. கன்னியம்மன் ஆலயத்தில் கன்னிப் பெண்களுக்கு உணவு அளித்தால் நற்பயன் விளையும் என்பது பக்தர்கள் மத்தியில் நம்பிக்கை. அதையொட்டி, அடிக்கடி அங்கு 'கன்யா போஜனம்' நடக்கிறது. அங்கு உணவருந்தும் கன்னி பெண்களுக்குள் பேதம் உண்டா...? இல்லை. மனிதன் வகுத்த அத்தனை வகுப்பினரும் — மதத்தினரும் ஒரே பந்தியில் அமர்ந்து ஒருணவை உண்டு கொண்டிருக்கின்றனர். குமரி அம்மனின்

அருள்—அவள் நாமம் துலங்கச் செய்யும் அறப்பணி அவர்கள் அனைவரையும் ஒரே நேர்கோட்டில் — ஒரு நிறையில் அமர்த்தி யிருக்கிறது.

குமரி அம்மன் கோயில் திருவிழாக் களிலேயே மிகச் சிறப்பாக மக்களின் கோலாகல ஈடுபாட்டுடன் நடத்தப் படுவது— 'பாரிவேட்டை!' 'நவராத்திரி (தசரா) விழாவின் நிறைவாக நிகழும் கோலாகல வைபவம் அது! கன்னி பகவதியம்மன், கயமையின் உருவமாம் பாணாசுரனை போரில் வென்று உலகை உய்வித்த காட்சியை கண்ணுக்கு விருந்தாக நடித்துக் காட்டும் மக்கள் விழா அது. அந்தப் பாரிவேட்டையை காணக் கூடும் பக்தர்களிடையே பேதம் உண்டா...? இல்லை... இல்லை! எல்லா இனத்தவருக்கும் அன்று திருவிழா; எம் மதத்தினருக்கும் வைபோகம்!



அதற்குமுன் நிகழும் நவராத்திரி ஒன்பது நாள் விழாக்களில்தான் என்ன...? ஒவ்வொரு நாள் உற்சவத்தையும் ஒவ்வொரு பிரிவு மக்கள்—இன, மத பேதமின்றித்தான் கொண்டாடு கிறார்கள். முதல்நாள் உற்சவத்தை விவேகானந்தர் பாறை நினைவு கமிட்டி யினரும்; இரண்டாம் நாள் உற்சவத்தை அர்சாங்க விற்பனை வரி (சேல்ஸ் டாக்ஸ்) இலாகா ஊழியர்களும்; மூன்றும் நாள் விழாவை வருவாய்த்துறை (ரெவின்யூ டிபார்ட்மெண்ட்) ஊழியரும்; நான்காம் நாள் விழாவைக் கட்டபொம்மன் போக்குவரத்துக் கழக ஊழியர்களும்; ஐந்தாம் நாள் விழாவைக் காவல்துறை ஊழியர்களும்; ஆறும் நாள் விழாவை பயனீர் குமாரசாமி குடும் பத்தினரும்; ஏழாம் நாள் விழாவைச் செங்கோட்டை கரையாளர் குடும்பத் தினரும்; எட்டாம் நாள் விழாவை தேவஸ்தான பிரிவு ஊழியர்களும்; ஒன்ப தாம் நாள் விழாவைக் கல்வி இலாகா ஊழியர்களுமாக ஏற்றத்தாழ்வின்றி, எவ்வித பேதமுமின்றிக் கொண்டாடு கிறார்கள்.

அன்னையின் அந்தத் தவ வரலாற்றில் இடம் பெற்ற நிகழ்ச்சிகளில்தான் எத்தனை இன ஒற்றுமை உணர்வு! அம்மன் அவதரித்தது தங்கள் இனத்தில் என்று உரிமை கொண்டாடும் மீனவர் களின் கூற்று ஒருபுறம்; அன்னை அணிந்திருக்கும் மூக்குத்தியில் அமைந் திருப்பது நாகரத்தினம் என்றும், அதை விசாக திருநாள் அரசர் ஆட்சி செய்த காலத்தில் — கன்னியாகுமரியிலிருந்து நான்கு கல் தொலைவிலுள்ள அகஸ்தீஸ் வரம் என்ற ஊரைச் சேர்ந்த அழகப்ப நாடார் என்பவர் ஒரு நாகப்பாம்பிடம் இருந்து எடுத்து வந்து அம்மனுக்காகக் கொடுத்ததாகவும், அப்பணிக்காக அரசர் மகிழ்ந்து அவருக்கு மான்யமும் கொடுத்து, 'அழகப்ப நாகமணி மார்த் தாண்டன்' என்ற கௌரவப் பட்டமும் கொடுத்ததாகவும் ஒரு செய்தி கூறப் படுகிறது. தட்டு விளக்கேற்றும் நந்தனை என்ற நங்கைக்காக, அவளோடு அருளாக இணைந்து அன்னை பகவதி ஒரு நாட்டி யமே ஆடி - பரந்தகன் என்ற மன்னனிட மிருந்து அப்பெண்ணுக்கு பட்டமும் பரிசும் வாங்கித் தந்ததாக ஒரு செய்தி. பிராமண குலத்துதித்த பெண் ஒருத் தியின் பாவம் நீங்க குமரி அம்மன் அருள் புரிந்ததாக 'மணிமேகலை'க் காப்பியம் விவரிக்கும் வரலாறு...

இப்படி மக்கள் அனைவரும் சமூகப் பாகுபாட்டில் பல்வேறு இனங்களாக —மதங்களாகப் பிரிந்திருந்தாலும், அன்னையின் சந்நிதியில் ஒன்றாய் சங்க மித்து அருள் பெற்றதை —பெற்று





வருவதை வெளிப்படுத்த எண்ணற்றச் செய்திகள் ஏடுகளிலும், மக்கள்தம் செவிவழி - வாய்மொழிச் செய்திகளிலும் நிறைந்திருக்கின்றன அத்திருத்தலத்தில்.

மக்கள் மட்டுமா, அங்கே ஓரினமாய் சங்கமித்து நிற்கின்றனர்....? வங்காள மண்ணில் பிறந்த விவேகானந்தருக்கு நினைவாலயமும், ஆதிசங்கர பகவத் பாதாள் ஆலயமும், காந்தி அண்ணல் மண்டபமும் எழும்பி நின்று - சித்தாந்தத் தத்துவங்களின் சங்கமாக அங்கு அவை திகழ்கின்றன.

அதோடு, இயற்கையின் பஞ்ச பூதங்களும் அன்னையின் பாதத்தில் இணைந்து நிற்கின்றன. முக்கடல்களும் ஒரு கடலாய் சங்கமித்திருக்கும் பேரழகு என்ன...? கதிரவன் உதிக்கும் கிழக்குத் திசையும், அவன் மறையும் மேற்குத் திசையும் — அங்கே ஒரே பார்வைக்குள் சங்கமித்திருக்கின்றன. பூரணசந்திரன் உதிக்கும் அழகையும், பொன்மாலைக் கதிரவன் அஸ்தமிக்கும் எழிலையும் ஒரே நேரத்தில் அங்கு காண்பதே ஓர் அரிய காட்சி — அற்புத அனுபவம்...!

இப்படி அகில உலகங்களும் — அனைத்துலக ஜீவராசிகளும் - பஞ்ச பூதங்களும் - திசை முதலான அண்டங்களின் பிரமாணங்களும்—தத்துவங்களும் - தவ ஞானங்களும்—அறங்களும் — சீலங்களும்— அங்கே சங்கமித்திருக்கும் காட்சிகளுக்கெல்லாம் மேலாக ஒரு தெய்விக சங்கமும் அங்கே - அன்னையின் திருமுன் அன்னைக்காக நிகழ்ந்திருக்கிறது...

அதுதான் மும்மூர்த்திகளின் சங்கமம்! சிவன் — பிரம்மா — விஷ்ணு என்ற மும்மூர்த்திகளும் ஒருருவில் அங்கே தாணுமாலயனாக (தாணு — சிவன்; மால் — விஷ்ணு; அயன் — பிரம்மா) சங்கமித்து, 'மும்மூர்த்திகள் ஒருவரன்றிப் பிரிவில்லை' என்ற உண்மையை வெளிப் படுத்துகின்றனர்.

ஆம்! சக்தியின் சந்நிதியில் சத்தியங்கள் ஒளிபெறுகின்றன.

மும்மூர்த்தித் தத்துவத்தை தன் திருமுன்பு நிலைநாட்டிக் காட்டிய அந்த முக்கடல் நாயகி — தான் இயற்றும் தவத்துக்கும் மூன்று நோக்கங்களை உணர்த்தி அருள் புரிகிறாள்...

வேண்டுவன பெறும் உறுதி நிறைந்த விரதம் — வேண்டுவோருக்கு வேண்டியதை அளிக்கும் கருணை — இவற்றோடு வேண்டாத மற மாச்சரியங்களை அழிக்கும் ஆற்றல் - இவைதான் ஓர் உன்னத தவத்தின் மூன்று தத்துவ[ங்கள்] என்று அன்னை நிலைநாட்டியிருக்கி[றாள்] அந்தத் தென்முனைத் திருத்தலத்தில்.

அது ஓர் இதிகாசம்! ஓர் இன[ிய] கதை.... அது...

ஸ்ரீ தா

(தொடரு[ம்])

தி இதயம் பிரிண்டர்ஸில், அச்சிடுபவர், ஜி. எம். குளத்து.
இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர் : மணிய[ன்]
துணை ஆசிரியர்கள் : தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி : 98, மவுண்ட் ரோடு, தபால் பை எண் 1159, கிண்டி, சென்னை- 600 032.

சமீபத்திய பஞ்சாப் விஜயத்தின் போது பேசினார் மொரார்ஜி தேசாய். அந்தக் கூட்டத்திற்கு வந்த மக்கள்தொகை சில ஆயிரங்களே! அதைத் தொடர்ந்து விஜயம் செய்த இந்திரா காந்தி, 'பஞ்சாப் மக்களுக்குத் தனியாக ஒரு மாநிலம் இருக்க வேண்டும் என்று கருதி வழி வகுத்தது நான்தான். அது குறித்து நான் மிகவும் பெருமைப்படுகிறேன்' என்று பேசினாராம். அந்தக் கூட்டத்துக்கு வந்த மக்கள்தொகை — சுமார் நாலரை லட்சம்!

—குஷ்வந்த் சிங்கின் கட்டுரையிலிருந்து

**தி. மு. க. வினர் அரக்கர்கள்!**

தி.மு.க. வினரை அரக்கர் என்று வருணிப்பது யார் என்று எண்ணிப் பிரமிக்க வேண்டாம். கோவையில் பேசிய தி.மு.க. தலைவர் கருணாநிதிதான் அப்படி வருணித்திருக்கிறார். "புராணத்தில் படித்திருக்கின்றோம்—மேருமலையை மத்தாக்கி, வாசுகி என்ற பாம்பைக் கயிறாக்கி — வால் பகுதியைத் தேவர்கள் பிடித்துக் கொண்டும், அரக்கர்கள் தலைப் பகுதியைப் பிடித்துக் கொண்டும் அமுதக் கடலைக் கடைந்தார்கள் என்று. அதைப் போல ஜனநாயகம் என்ற அமுதத்தை எடுப்பதற்காக, ஜனதா கட்சியும்-தி.மு.க வும் சேர்ந்து சுதந்திரம் வேண்டிப் போராட்டம் நடத்தின. வால் பகுதியைப் பிடித்திருந்த தேவர்களுக்கு அன்று அமுதம் கிடைத்ததைப் போல — இந்தப் போராட்டத்தில் ஜனதா கட்சிக்கு ஆட்சி கிடைத்திருக்கிறது. ஆனால், அன்று அரக்கர்கள் எப்படி ஏமாற்றப்பட்டார்களோ அதைப் போல, தி.மு. கழகமும் ஏமாற்றப்பட்டு விட்டது!" என்று கூறி இருக்கிறார் அவர்.



பத்மா சுப்பிரமணியம்



கலைஞர்

**மகளுக்குத் தந்தை பரிசு!**

பஞ்சாப் கல்வி அமைச்சர் சுக்ஜீந்தர் சிங், சிறந்த விளையாட்டுப் பெண்மணி என்ற பரிசை அண்மையில் சுக்பீர் என்ற பெண்மணிக்குக் கொடுத்திருக்கிறார். இதில் என்ன அதிசயம்...? சுக்பீர் அந்த அமைச்சருடைய மகள்!

**பிறந்தநாள் பட்டம்...**

டாக்டர் பாலமுரளி கிருஷ்ணா ஒவ்வோர் ஆண்டும் ஜூலை மாதம் தனது பிறந்த நாளின் போது கலைஞர்களுக்குப் பட்டம் அளித்து கௌரவிக்கிறார். இந்த ஆண்டு அப்படிப் பட்டம் பெற்றவர்களில் ஒருவர், காந்தி கிராமம் பல்கலைக்கழகத்தில் நுண்கலைப் பிரிவின் சேர்மன். யாரென்று புரியவில்லையா...? அவர், குமாரி பத்மா சுப்பிரமணியம் தான்! அவர்தான் 'நாட்டிய சுதர்னவா' என்ற அந்தப் பட்டத்தைப் பெற்றுக் கொண்டவர்.

---

அப்பா கடை முழுதும் பாத்திரங்களால் நிரப்பியிருந்தார். ஒன்றை எடுத்தால் அதன் பக்கத்திலுள்ள மற்றொன்று விழுந்து விடுகிற மாதிரி நெரிசல். தட்டுகள், தம்ளர்கள், டபராக்கள், மூடி போட்ட பெரிய டிரம்கள் என்று நிறைய சாமான்கள் அடுக்கப்பட்டிருந்தன. பாலாடைகள், ஸ்பூன்கள் எல்லாம் கண்ணாடி அலமாரிக்குள் இருந்தன. அவன் பாத்திரங்களையே பார்த்துக் கொண்டிருந்தான். வீட்டின் முதல் பையனாகப் பிறந்ததை நினைத்து வருத்தப்பட்டான். குமார் அவனுக்கு முன்பு பிறந்திருந்தால் அவன் கடைக்கு வந்திருப்பான். இந்தப் பொறுப்புகளையெல்லாம் குமார் ஏற்றுக் கொண்டிருந்திருப்பான். அவன் அடுத்த வருடம் சுலபமாக எம்.ஏ., சேர்ந்திருப்பான். பின் லெக்சரராகியிருப்பான். படிப்பை விட்டுப் பாத்திரங்களோடு பாத்திரமாக அவனால் ஐக்கியமாகி விட முடியவில்லை. தினமும் காலையில் எழுந்து குளித்து சாப்பிட்டதும் எட்டு மணிக்கு பல் பிடித்து அப்பா மாதிரி கடையைத் திறக்க வேண்டும். வருபவர்களுக்கு பாத்திரங்களை எடுத்துக் காட்டி எடை போட்டு அதன் விலையைச் சொல்ல வேண்டும்...

அவனுக்கு கடையை விட்டு எழுந்து ஓட வேண்டும் போல இருந்தது. செத்துப் போன அப்பா மீது கோபம் வந்தது. அவர் அவனின் கனவுகளைக் கலைப்பதற்காகவே செத்துப் போனதாகப் பட்டது. அவர் போனபோதுகூட வராத அழுகை இப்போது தொண்டையை அழுத்திற்று. வாய் விட்டு அழ வேண்டும் போல இருந்தது. அவன் தன் கைகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டான்...



# தேவி தரிசனம்

6

காரணி காளி கல்யாணி பகவதி
காத்தருள்புரி, கனகாம்பிகையே!
பூரணி புவனம் போற்றும் மகேஸ்வரி,
பொன்னடி பணிந்தே பூரித்தேன்!
நாரணி சாம்பவி பைரவி லோக
நாயகி நன்னிலை நல்கிடுவாய்;
யாரினி நின்போ லடியவர்க் கிரங்கி
அருள்புரி வார் அன்னையே!

—சாயிமாதா சிவ. பிருந்தாதேவி
(கன்யாகுமரி ஸ்ரீபகவதி அம்மன் அஷ்டகம்)

முக்கடலோரத்தில் அவதரித்த மூவுலக நாயகி திருமணப் பருவம் எய்தியிருக்கிருள்.

இனி ஈசன் வந்து திருமணம் செய்து கொள்ள வேண்டும். இது அவதாரங்கள் தோறும் தொடர்ந்து நடைபெற்று வரும் சம்பிரதாயம்.

ஏதோ ஒரு தெய்விக நோக்கத்தை யொட்டி ஈசனே, ஈஸ்வரியோ பூதலத்தில் அவதரிப்பர்! பின் அந்த அவதார நோக்கம் நிறைவேறும் காலத்திலோ; அவதார நோக்கம் நிறைவேறிய பின்னரோ அல்லது இருவரும் இணைந்து அந்தத் தெய்விக சங்கல்பத்தை நிறைவேற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கும் காலகட்டத்திலோ, இருவரும்

பொன். பாஸ்கரமார்த்தாண்டன்

# மோனத் தவம் புரியும் மூன்று கடல் நாயகியே!




உலகியல் முறைப்படி திருமணம் செய்து கொள்வார்கள்.

அவர்கள் அப்படி உலகியல் முறைப்படி பூமியில் திருமணம் செய்து கொள்ளும் வழிமுறைகள், வகைகள், வரலாறுகள் எல்லாமே அவதாரங்கள் தோறும் மாறுபட்டிருந்தாலும் — அடிப்படை நெறிகளில் அவை லோகத்தில் நின்று நிலவும் தர்மங்களை நிலைநாட்டிக் கௌரவிப்பதாகவும்; காலத்திற்குக் காலம் தேவையான மாற்றங்களை உணர்த்தி சீரிய வாழ்க்கைத் தத்துவங்களை மக்களுக்கு உணர்த்துவதாகவும் அமைந்திருக்கும்.

குமரி முனையில் அருட்சுடராய் அவதரித்திருக்கும் அன்னையைத் திருமணத்துக்குப் பெண் கேட்டு நாரதர் மூலம் தூது அனுப்புகிறார்-அருகிலுள்ள சுசீந்திரத்தில் கோயில் கொண்டுள்ள ஈசன்.

ஈசன் இத்தலத்தில் ஒரு புதுமைத் திருக்கோலம் கொண்டு எழுந்தருளியிருக்கிறார். 'மும்மூர்த்திகளில் யார் பெரியவர்?' என்று அஞ்ஞானமாய் சர்ச்சை செய்யும் மாந்தருக்கு, ஸ்தூலக் காட்சியாய்—'மும்மூர்த்திகளும் ஒருவரே' என்று உணர்த்தத் தாணுமாலயராகக் காட்சி தருகிறார்.

சாதாரண மாந்தர்களே சராசரி வாழ்வில் எத்தனையோ குணம்சத் தோற்றங்களுடன் காட்சி தருகின்றனர். ஒரு நீதிபதியையே எடுத்துக் கொள்வோம். அவர் இல்லத்திலிருக்கும் போது, மனைவி — மக்களைப் பராமரிக்கும் குடும்பத் தலைவன்; நீதிமன்றத்திற்கு வரும் போது, சட்டத்தை நிர்வகிக்கும்

'நீதி நாயகன்'; அலுவலகத்துக்கும்—இல்லத்துக்கும் வெளியே பொது வாழ்வில் ஈடுபட்டு கலைப் பணி புரிந்தால் அப்போது கலைஞன்...-இப்படிச் செய்யும் பணிக்கேற்ப ஒன்றுக்கொன்று சம்பந்தப் படாமல் இருக்கும் பல தோற்றங்களைக் கொண்டு அவர் இயங்குகிறார்.

சாதாரண மனிதர்களே இப்படிப் பல்வேறு தோற்றங்கள் கொண்டிருக்கும் போது, சர்வலோக நாயகன் லோக சம்ரக்ஷணத்துக்காக ஆக்கல் — காத்தல்—அழித்தல் ஆகிய மூவினை யாற்றுகிற பிரம்மா — விஷ்ணு — சிவன் ஆகிய மும்மூர்த்திகளாகக் காட்சிதருவதில் என்ன வியப்பு...?

பேதமற்ற அந்த மும்மூர்த்திகளும் ஒருருவாய் — ஒரே ஜீவாத்மாவாய் இணைந்திருந்து - ஒன்றிருந்து பலவாயும்; பல சக்திக் கோலங்களின் ஒரம்சமாகவும், கால எல்லைகளையும் ஞான மூலங்களையும் தம்முள் அடக்கிய பேரின்ப தத்துவ மாகவும் இயங்கி வருவதை இம்மண்ணுள் ளோர் உணரவே சுசீந்தரத்தில் ஈசன், தாணுமாலயனாகத் திருக்கோலம் கொண்டார்.

அருகிலுள்ள முக்கடல் சங்கமமுனையில் அவதரித்திருக்கும் கன்னி பகவதி, ஈஸ்வரிதான் என்று உணர்த்தவே தான், தாணுமாலயன் நாரதர் மூலம் திருமணச் செய்தி அனுப்பினாரோ...?

அவதாரத்தின் போது, சர்வேசுவரன் தேவியைத் திருமணம் புரிந்து, 'இவர் ஈஸ்வரி' தான் என்று நிலைநாட்டுதலும் ஒருவகை. யார் ஒருவரை மணம்புரிய ஈசன் மணத் தூது அனுப்புகிறாரோ, அவர் ஈஸ்வரிதான் என்று உலகம் உணர்ந்து கொள்ளுமாறு செய்து, கன்யாகுமரி பகவதி அம்மனின் தெய்விக மூலசக்தி-அன்னை உமையவள்தான் என்று கோடிட்டுக் குறிப்பாலுணர்த்துவதும் ஒரு முறை.

இப்படி தெய்விக காட்சியாக அமை வதற்காகத்தான் குமரி அம்மனை நாடி வதுவைத் தூது செல்ல நாரதரை ஈசன் அனுப்பினாரோ, என்னவோ...!

நாரதர் அன்னையின் திருத்தலம் நோக்கிப் பயணமாகி வந்து கொண்டிருந் தார். வரும் வழியில் தேவர்கள் அனை வரும் நாரதரைச் சந்தித்து அன்னையின் அவதார நோக்கம் இன்னும் நிறை வேறாமலிருப்பதை நினைவூட்டுகிறார்கள்.

நாரதருக்கு அது தெரியாதா; அல்லது நாரதரைத் தூதனுப்பிய நாயகனுக்குத் தான் தெரியாதா...?

நாரதர் அவர்களைச் சமாதானப் படுத்தி விட்டுத் தன் பயணத்தைத் தொடர்ந்தார். அந்தப் பயணத்தில் அடங்கியிருக்கும் ஈசனின் திருவுள நாடக சூட்சுமம் அவருக்குத்தானே தெரியும்!

அன்னையின் சந்நிதானத்தில் வந்து, லோகாயத வழக்கு முறைப்படி திருமணப் பேச்சைத் தொடங்கினார் நாரதர்.

அன்னையும் உலகியல் முறைப்படி எதிர்க் கேள்வி கேட்டார்:

''நாரதரே, நீர் யாருக்காகப் பெண் கேட்டு வந்திருக்கிறீரோ, அந்தத் தாணுமாலயர் சீர் என்ன செய்வார், கூறும்?'' என்றாள் தேவி பகவதி.

நாரதர் புன்னகைத்து, ''தேவி, தாங்கள் என்ன கேட்டாலும் ஐயன் தருவார்!'' என்றார்.

''ஓகோ...அப்படியானால் கண்ணில்லா தேங்காய், காம்பில்லா வெற்றிலை, கணுவில்லா கரும்பு இவற்றைச் சீர் வரிசைப் பொருட்களாகக் கொண்டு வந்தால், எம்மை அவர் கன்னியா தானமாகப் பெறுவார்!'' என்றாள் தேவி.

அன்னையின் சாதுரியத்தைக் கண்டு பூரித்து மெய்ம்மறந்தார் நாரதர்.

நாரதர் தூதுவரும் முன்பே தான் லோகநாயகி என்பதையும், தன்னை மணக்க வேண்டிய நாயகன் சர்வேசன் தான் என்பதையும் தேவி அறிந்திருக் கிறாள்! அதனால்தான் அப்படியொரு சீர்வரிசை நிபந்தனையை விதித்தாள் தேவி.

கண்ணில்லா தேங்காயும், காம்பில்லா வெற்றிலையும், கணுவில்லா கரும்பும் பூமியில் உண்டா...? அவற்றைக் கொண்டுவர சர்வேசுவரனைத் தவிர வேறு எவராலும் முடியுமா...? தன் நாயகன் மகேசுவரன்தான் என்று உணர்ந்து, நாரதர் கூறும் நபர் — அந்த ஈசன்தான் என்பதை உறுதிப்படுத்திக் கொள் வதற்காக அன்னை அப்படிக் கேட்டாளா, அல்லது, 'மணத்தூது அனுப்பியிருக்கும் தேவா, நீர் யார் என்பதை நான் புரிந்து கொண்டிருக்கிறேன் என்பதை நீவிரும் புரிந்து கொள்ளும்! என்று கூறாமல் கூற அப்படிச் சொல்லியனுப் பினாளா....?

ஈசனிடம் சென்று தேவியின் திருவாக் கைத் தெரிவித்தார் நாரதர். அனைத்தும் புரிந்த ஐயன் தெய்விகமாகச் சிரித்து, ''அவ்வாறே ஆகட்டும், திருமணத்துக்கு

நாள் குறிப்பிடுக! குறித்த நாளில் குறித்த நாழிகையில் யாம் சென்று குமரி வாழ்த் தேவியை திருமணம் செய்து கொள்வோம்'' என்ருர்.

''ஈசனே, நாளும் கோளும் குறிக்கச் சொல்கிறீரே... காலத்தை வென்ற நாயகர் 'காலத்துக்குட்பட்டு நிற்பேன்' என்பது புதுமையாக இருக்கிறதே!'' என்கிருர், நாரதர்.

''நாரதா... நாளும் கோளும் நமக்காக அல்ல; இன்று இந்தத் தெய்விக வினைகள் நிகழும் பூமிக்காக... பூமி மாந்தருக்காக! காலத்தை நாம் கடந்திருக்கலாம்; ஆனுல், இந்த பூமியிலுள்ள மாந்தர்கள் காலவினைகளுக்கு உட்பட்டவர்கள். இங்கிருந்து அவற்றை



நாம் பேணவிட்டால், கால தேச வர்த்தமானங்கள் சிதைந்து சிதறுண்டு போகும்! காலத்தை வென்ற எமக்கு காலத்துக்கு அடங்கவும் தெரியும்; அதை ஆட்டுவிக்கவும் தெரியும். அந்தக் காலத்தைக் கருவியாகக் கொண்டு நடக்க வேண்டியதை நடத்தவும் தெரியும்!'' என்ருர் ஈசன்.

''ஈசனே, காலத்துக்குக் கட்டுப்பட நேர்ந்தால், அதன் விளைவுகளுக்கும் உள்ளாக நேரிடும். வேளை தப்பினுல் விபரீதங்கள் வரலாம்...!''

''வினைகளும், விபரீதங்களும் எமக்கு ஒன்றே! நடக்க வேண்டியவை நடைபெற வேண்டிய வேளை வந்துவிட்டது. அவை நடக்கட்டும்; நாள் குறித்திடுக!'' என்ருர் நாயகன்.

நாள் குறிக்கப்பட்டது. நன்னுள் ஒன்றில் விடியற்காலை கோழி கூவும் முன் திருமணம்!

''அன்னைக்கும் ஈசனுக்கும் ஒப்பந்தம் உறுதியாயிற்று. அதன்படி அந்தத் திருமண நாளில் —

முக்கடலோரம் அன்னை மணக்கோலத்துடன், நாயகன் வந்து கைப்பிடிக்கும் நாழிகையை எதிர்பார்த்துக் காத்திருக்கிருள்.

ஈசனும் சுசீந்திரத்தை விட்டுக் கிளம்பியாயிற்று...

குமரி முனையிலிருந்து எட்டுக் கல் தொலைவிலுள்ள வழுக்கம்பாறையை ஈசன் வந்தடைந்த போது, கோழி ஒன்று கூவுகிறது. கோழி உருவில் அந்த அகாலத்தில் கூவியது நாரதர் தான்!

கோழிகூவும் முன் திருமணம் நடைபெற வேண்டும் என்ற நிபந்தனை நிறைவேறவில்லை; இனி நிறைவேறவும் முடியாது. ஏனென்ருல், 'நிச்சயிக்கப்பட்ட காலத்துக்குக் கட்டுப்படுவேன்' என்பது ஈசனின் வாக்கு. 'கோழி கூவும் முன்' என்று வரையறுக்கப்பட்ட காலம் தவறிவிட்டது! ஈசன் தன் வாக்குறுதிப்படி காலத்தை மதித்து - கல்யாணத்தைப் புறக்கணித்துவிட்டு, தன் திருவிடத்திற்குத் திரும்புகிருர்.

மணாளனை மகேசனின் வருகைக்காகக் காத்திருந்த தேவிக்கு இந்த அமங்கலச் செய்தி தெரிவிக்கப் படுகிறது.

அன்னை ஆவேசம் கொள்கிருள். நாடறிய நிச்சயிக்கப்பட்ட திருமணம் இப்படி அலட்சியப் படுத்தப்பட்டு விட்டதைக் கண்டு நாயகி சீறியெழுந்து, ''இனி எனக்கு மங்கலம் வேண்டாம்!'' என்று மங்கலப் பொருட்களை எல்லாம் கடற்கரையோரம் வீசி எறிகிருள். அவள் திருமேனியை அலங்கரிக்கும் பேறு பெறக் காத்திருந்த பொருட்கள் யாவும் உருமாறி அவளுடைய பாதாரவிந்தத்தைத் தஞ்சமடைகின்றன! 'குங்குமம், சிவப்பு நிற மணலாகவும்; கருநிறச் சாந்து, கருநிற மணலாகவும்; அரிசி, பழுப்பு கலந்த வெண்ணிற மணலாகவும் மாறின.

திருமணத்தில் அவமானப் படுத்தப்படும் போதுதான் ஒரு பெண் உண்மையாகவே சினம் கொள்கிருள். அந்தச் சினத்தை அன்னையிடம் உண்டாக்கத்தானே நாரதர் மூலம் தேவதேவனே அந்தத் திருவிளையாடலைப் புரிந்துள்ளான்...?

அன்னைக்கு அப்படியொரு 'உக்ரம்' உண்டாவதுதானே, அவளுடைய

அவதார நோக்கத்துக்கு அடிப்படைத் தேவை...?

அன்னையின் உக்ரம் அனலாய்க் கொதித்துக் கொண்டிருக்கும் போது, மெழுகாய் பாணுசுரன் அங்கு வருகிறான்.

அவன் ஏற்கெனவே அன்னையின்பால் மாயமோகம் என்ற வெப்பத்துக்கே ஆற்றாமல் உருகி வந்து நிற்பவன்!

அன்னையின் உக்ரத்தையும் எதிர் கொண்டு வரவேற்பவனைப்போல வந்து நின்று வார்த்தையாடினான். மோகப் பித்துடன் அன்னையை அடைய விரும்பு கிறான்...

தன் தகுதியை அவள் முன் நிலை நிறுத்திக் காட்ட, மாயையால் அத்திப்பூ போன்ற அபூர்வ பொருட்களைக் கொணர்ந்து காட்டுகிறான். அன்னையின் பார்வை முன் அத்தனை மாயங்களும் மறைகின்றன.

தோல்வியைத் தாங்கிக் கொள்ள முடியாமல் கொடும் வாளால் அன்னை யைத் தாக்க முனைகிறான் பாணுசுரன்.

அன்னையின் உக்ரத்துக்கு இலக்குக் கிடைக்கிறது.

தேவர்தி தேவர்களையும், பூதலத்து மாந்தரையும் அக்கிரமத்தால் வெருட்டி மற ஆட்சி செலுத்தி வந்த பாணு சுரனுக்கும் - அறம் தழைக்க அவதரித்த அன்னைக்கும் இடையே ஆவேசப் போர் நடக்கிறது.

'கன்னி ஒருத்தியால்தான் மரணம்' என்று ஏற்கெனவே விதியின் கட்டளைக்கு ஆளாகியிருந்த பாணுசுரன் அன்னையின் கரங்களால் அழிகிறான்.

அன்னை அத்தலத்தில் அவதரித்த தெய்வ நோக்கம் நிறைவேறுகிறது.

ஃ ஃ ஃ

ஆவேசமும் ஓர் அருள் சக்திதான்! யார் அல்லது எது ஆவேசம் கொள்கிறது என்பதை யொட்டி பயன்கள் அமையும்.

மழை ஆவேசம் கொண்டு பெய்து ஓய்ந்தால் பயிர்கள் தழைக்கும்; நெருப்பு ஆவேசம் கொண்டால் நாசம் பிறக்கும்!

ஓயாப் பெரு நெருப்பான பாணுசுரன் அக்கிரம ஆவேசம் கொண்டு உலகையும் அழித்தான்; தானும் அழிந்தான்.

அன்னையின் கருணை என்னும் மாரி ஆவேசம் கொண்டு அந்த நெருப்பை அழித்து, அறங்களையும் சீலங்களையும் தழைக்க வைத்தது.

தன் உலகியல் அறப்பணி முடிந்ததும் அன்னை மோனத் தவத்திலாழ்ந்தாள்.

இந்தத் தவம் எதற்காக...?

அல்லது; 'தவம்' என்றால், பற்றற்ற விரதம் — பற்றிக் கொள்ள எதுவுமின்றி தவிப்போருக்குக் கருணை பொழிதல் — அறத்தை அழிக்க முயலும் மறத்தை அழிக்கும் ஆற்றல் - இவை மூன்றும் இணைந்ததுதான் என்று உலகுக்கு உணர்த்த இம்மூன்று தத்துவங்களுக்கும் நாயகமாக முக்கடல் ஓரத்தில் கன்னித் தவம் புரிகிறாளா, கருணையே உரு வான கார்த்தியாயினி...?

அல்லது பிள்ளைகள் உய்ய தாய் தவமிருப்பதுபோல், இவ்வுலக மாந்தர் உய்ய பெருங்கருணை நாயகியாம் லோக மாதா அத்தலத்தில் அருந்தவத்தில் ஆழ்ந்திருக்கிறாளா...?

யாரறிவார் எம் அன்னையின் திருவுளம்...?

நாமறிய வேண்டுவது அன்னையின் கருணைத்திறன் அன்றி வேறென்ன..?

அதோ! அன்னையின் கழல் காணும் பேறு பெறுவதே ஒரு தவமாய், அவள் திருவருட் பார்வை அமுதம் பெறுதலே தவப்பயனாய் எண்ணி ஏங்கி — தென் குமரித் தலம் நோக்கித் தினம் தினம் இத் திருநாடே திரண்டோடிக் கொண்டிருக் கிறது...

ஆடிக் களைத்து, நாடியோடி வரும் மாந்தர் தமக்கு தேறலாம் தம் அருள் தந்து — அவரைத் தேற்றித் தெளிவித்து ஆசித்து அருள் புகட்டி அரவணைத்து — கன்னலாய் அவர் சிறக்க கன்னியாய் சுடர்விடும் தென் எல்லைத் தேவி, நின் கழல் போற்றி! கருணை நிழல் போற்றி!! போற்றி...!!

(அடுத்த இதழில், 'மாங்காடு காமாட்சி அம்மன் தரிசனம் பெறுவோம்....)

O O O

(இவ்விதழ் பின்புற அட்டையை அணிசெய்யும் அன்னை கன்னியாகுமரி பகவதி அம்மனின் வண்ணத் திருஉவியத்தை திரு. செந்தில் வரைந்துள்ளார்.)

தி இதயம் பிரிண்டர்ஸில், அச்சிடுபவர்: ஜி. எம். குளத்து.
இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர், ஆசிரியர்: மணியன்.
துணை ஆசிரியர்கள்: தாமரை மணாளன், மாயா, எஸ். லட்சுமி சுப்பிரமணியம்.
முகவரி: 98, மவுண்ட் ரோடு, தபால் பெட்டி எண் 1159, இண்டி, சென்னை- 600 032.

